# தொல்காப்பிய மரபியல் வழிச் சங்க அக இலக்கியங்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மு.தெய்வேந்திரன்**

(பதிவு எண்.0199)

நெறியாளர்

பேரா.முனைவர். **மு. பாண்டி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் ‘A’ மதிப்புப்பெற்றது)

**காரைக்குடி – 630 003**


**அக்டோபர் - 2015**

**பேரா.முனைவர்மு.பாண்டி,**

*தமிழ்த்துறைத்தலைவர்,*

*தமிழ்த்துறை,*

*அழகப்பா பல்கலைக்கழகம்,*

*காரைக்குடி - 630 003.*

நாள் :

# நெறியாளர் சான்றிதழ்

**"தொல்காப்பிய மரபியல் வழிச் சங்க அக இலக்கியங்கள்"** *என்னும் தலைப்பில்* **மு.தெய்வேந்திரன்** *அவர்கள் தமிழ் முனைவர்* (Ph.D.,*) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

**(மு.பாண்டி)**

*நெறியாளர்*

**மு.தெய்வேந்திரன்,**
*முனைவர் பட்ட ஆய்வாளர்,*
*பதிவு எண்.0199,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

*நாள் :*

# ஆய்வாளர் உறுதிமொழி

**“தொல்காப்பிய மரபியல் வழிச் சங்க அக இலக்கியங்கள்”** *என்னும் தலைப்பில் தமிழ் முனைவர்* (Ph.D.,*) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.*

**(மு.தெய்வேந்திரன்)**

ஆய்வாளர்

# நன்றியுரை

**"தொல்காப்பிய மரபியல் வழிச் சங்க அக இலக்கியங்கள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர் ஆகியோர்க்கு முதற்கண் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு செய்வதற்கு ஊக்கத்தொகை வழங்கி ஊக்குவித்த பல்கலைக் கழக மானியக் குழுவிற்கு (UGC - JRF / SRF) என் நன்றிகள்.

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு எனக்கு வாய்ப்பளித்த தமிழ்த்துறைத் தலைவரும் நெறியாளருமாக இருந்து ; என்னைப் பல வகையில் நல்லாற்றுப்படுத்தியும் ; தொடக்க நிலையிலிருந்து ஆய்வேடு முழுமையாக்கிய நிலை வரை பல கருத்துக்களை வழங்கியும்; ஆய்வு செம்மைபெற ஆய்வுக் களத்தில் நான் அயராது பயணிப்பதற்கு உந்து சக்தியாக விளங்கிய **அய்யா, பேரா.முனைவர் மு.பாண்டி** அவர்கட்கு என் உளம் கனிந்த நன்றிகளைக் காணிக்கையாக்கு கின்றேன்.

ஆய்வுக் காலத்தில் ஆக்கமும் ஊக்கமும் வழங்கி உற்சாகப்படுத்திய பேராசிரியர்கள் சு.இராசாராம், சே.செந்தமிழ்ப்பாவை, மு.நடேசன், மு.சுதா, சொ.சுரேஷ் ஆகியோர்க்கு நன்றியுடையேன்.

இந்நிலைக்கு என்னை ஆற்றுப்படுத்திய நல்லாசிரியர்களுக்கும் ; மதுரை தியாகராசர் கல்லூரி பேராசிரியர்கள் நா.கருணாமூர்த்தி, இ.பேச்சிமுத்து, சு.காந்திதுரை; மதுரைக் கல்லூரி பேராசிரியர்கள் க.முத்துவேல், ந.ம.வீ. இரவி, கூ.முத்தன்; பெனியேல் கிராமியக் கல்வியியல் கல்லூரி முதல்வர் சின்னத்தம்பி அய்யா, கா.சத்யா அம்மா அவர்களுக்கும் ; ஏனைய

பேராசிரியப் பெருமக்களுக்கும் நான் என்றைக்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

ஆய்விற்கு வேண்டிய தரவுகளைச் சேரிக்க பல நூல்களைத் தந்து ஆய்வு செழுமை பெற உறுதுணை புரிந்த அழகப்பா பல்கலைக்கழக நூலகம், மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகம், தியாகராசர் கல்லூரி நூலகம், மதுரைக் கல்லூரி நூலகம், பெரியார் பல்கலைக்கழக நூலகம், சென்னைப் பல்கலைக்கழக நூலகம் மற்றும் நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், மணிவாசகர் பதிப்பகம், மீனாட்சி புத்தக நிலையம், சாரதா பதிப்பகம் (கௌரா ஏஜென்சீஸ்); மதுரை, திருநெல்வேலி பழைய புத்தக விற்பனையாளர்கள் ; மதுரை புத்தகத் தாத்தா ஆகியோர்க்கு என் உளங்கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை இதுகாறும் படிக்க வைத்து அகமகிழ்ந்து கொண்டிருக்கும் என் அருமைப் பெற்றோர் **மு.அ.ச.முத்துச்சாமி - பாண்டியம்மாள் ;** மு.அ.ச.மு.பா.மீனாள் கண்ணன் ; (என்றும் என் நினைவில் வாழ்ந்து கொண்டிருக்கும் உயிர் தமக்கை மு.அ.ச.மு.செண்பகவள்ளி முத்து வேலாண்டி) மு.வே.தினேசுகுமார், விக்னேசுகுமார், கவிதா ; அண்ணன் மு.அ.ச.மு.மூர்த்தி - சத்யா, செண்பகப்பிரியா, கயல்விழி ; இரா.மதன்ராசு - வாசுகி, லத்திகா மதனஸ்ரீ ; கு.இராசேசுகுமார் - மீனா, லூக்கேசுகுமார், தன்னியஸ்ரீ ; எனது இல்லாள் தெ.தமிழரசி, மு.அ.ச.மு.தெ.தமிழ்வேந்தன், மகிழினி; மு.அ.ச.மு.பூபதி மாக்சிம் சுடிஸ்மான், பாலசுந்தர், யமுனாதேவி ; இரா.மணிமாலா முனிசெல்வம், நிசாந்த், யாசிகா ; மு.பா.சூரியநாராயணன் - முத்துமாரி, கவின்மலர், கோதைநாயகி; ஆறு.முத்துக்கருப்பன் குடும்பத்தார், ம.தமிழரசன் குடும்பத்தார், லூ.அமல்ரெக்சு, த.முத்துவேல், கி.மருதுபாண்டியன் அவர்களுக்கும்; என்னை வளர்த்து ஆளாக்கிய தாய்மாமன்மார்கள் ப.பாண்டி - ராணி, செல்வம், பாண்டீஸ்வரன்;

ப.ஆறுமுகம் - வீரம்மாள், பாண்டிச்செல்வி, சரவணன் ஆகியோர்க்கும் எனது நன்றிகளைக் கூறிக்கொள்கிறேன்.

எனக்கு உறுதுணையாகவும், உந்துதலாகவும் இருக்கும் மு.முத்துராசு, சோ.ஆண்டி, பி.மருதம்பாண்டி, அ.சங்கர்தாசு, சி.செந்தில்குமார், அ.கோபாலகிருஷ்ணன், க.இராசேந்திரன், ந.சுரேந்திரன், இராசாத்தி குங்குமம் அ.சேதுராமன் - தங்கமணி, சு.முத்து மற்றும் பல வகையில் உறுதுணையாக நின்ற தமிழ்த்துறை நண்பர்கள், விடுதி நண்பர்கள் ; ஏனைய நண்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி எந்நாளும் உரியது.

இவ்ஆய்வினை உரிய நேரத்தில் கணினி அச்சு செய்து கொடுத்த காரைக்குடி மகேஷ் கணினி அச்சக உரிமையாளர் சுப.சுரேஷ் அவர்களுக்கும் ; அருண் ஜெராக்ஸ் கணினியகம் உரிமையாளர் சாந்தி பாண்டியன் அவர்களுக்கும் மனம் நெகிழ்ந்த நன்றிகள் பல.

நன்றியுடையன்,

(மு.தெய்வேந்திரன்)

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகநா. | - | அகநானூறு |
| இ.ப.த.ம. | - | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| இடையி. | - | இடையியல் |
| இறை. | - | இறையனார் களவியல் உரை |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| உவமையி. | - | உவமையியல் |
| எச்சவி. | - | எச்சவியல் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஐங்.திரட்டு | - | ஐங்குறுநூறு திரட்டு |
| க.ஆ. | - | கட்டுரையாசிரியர் |
| கலித். | - | கலித்தொகை |
| களவி. | - | களவியல் |
| கற்பி. | - | கற்பியல் |
| கிளவியாக். | - | கிளவியாக்கம் |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| குற்.புணரி. | - | குற்றியலுகரப் புணரியல் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| செய்யுளி. | - | செய்யுளியல் |
| தொல்.எழுத். | - | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொ.மரபு | - | தொகை மரபு |
| தொல்.மரபி. | - | தொல்காப்பிய மரபியல் |
| நச்.தொல்.செய். | - | நச்சினார்க்கினியருரை தொல்காப்பியம் செய்யுளியல் |

| | | |
|---|---|---|
| நற். | - | நற்றிணை |
| நன். | - | நன்னூல் |
| நூ. | - | நூற்பா |
| நூ.எண் | - | நூற்பா எண் |
| நூ.மரபு | - | நூன்மரபு |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பரி. | - | பரிபாடல் |
| பரி.திரட்டு | - | பரிபாடல் திரட்டு |
| புறத். | - | புறத்திணையியல் |
| புறநா. | - | புறநானூறு |
| பு.மயங். | - | புள்ளிமயங்கியல் |
| பெயரி. | - | பெயரியல் |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| பொருளி. | - | பொருளியல் |
| மரபி. | - | மரபியல் |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முல்லைப். | - | முல்லைப்பாட்டு |
| மேலது | - | மேற்குறிப்பிட்டது |
| மேலவர் | - | மேற்கண்ட ஆசிரியர் |
| மேலவர்கள் | - | மேற்கண்ட ஆசிரியர்கள் |
| வினையி. | - | வினையியல் |
| வேற். மயங். | - | வேற்றுமை மயங்கியல் |
| P. | - | Page |

# பொருளடக்கம்

## முன்னுரை

*தமிழ் இரண்டாயிரம் ஆண்டு காலப் பழமைமிக்க உயர்தனிச் செம்மொழியாகத் திகழ்கிறது. தமிழில் கிடைக்கப்பெற்றுள்ள முதல் நூலான தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களாக அமையப்பெற்ற சிறப்பினையுடையது. பொருளதிகாரம் படைத்துள்ள ஒரே மொழியாகத் தமிழ்மொழி திகழ்கின்றது. தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள பொருளதிகாரம் தமிழ் இலக்கண, இலக்கியமாகவும் திகழ்கின்றது. தொல்காப்பிய பொருளதிகாரத்தில் இறுதியாக அமைந்துள்ள மரபியல் தனிச்சிறப்புடையது. இம்மரபியலுள் வரையறுக்கப்பட்டுள்ள மரபுப் பெயர்கள்; தொல்காப்பியத்தை அடுத்துத் தோன்றிய சங்க இலக்கியங்களில் எடுத்தாளப்பட்டுள்ளதையும் எடுத்தாளப்படாததையும், புதுமையான மரபுகளையும் கண்டறிவது இன்றியமையாததாகும்.*

**ஆய்வுத்தலைப்பு**

***"தொல்காப்பிய மரபியல் வழிச் சங்க அக இலக்கியங்கள்"*** *என்பது இவ்ஆய்வின் தலைப்பாகும்.*

**ஆய்வின் கருதுகோள்**

*ஒத்தத் தன்மையுடையனவற்றுள் முன்னையதன் தாக்கம்; பின்னையதில் திட்டமிட்டோ, திட்டமிடாமலோ இருத்தல் நடைமுறை. தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றியவைகளாகக் கருதப்பெறும் சங்க இலக்கியங்களில் தொல்காப்பியத்தின் தாக்கம் இருத்தல் வேண்டும். தொல்காப்பியர் மரபியலில் சுட்டியுள்ள மரபுப்பெயர்கள் சங்க அக நூற்களில் இடம்பெற்றிருத்தல் கூடும் என்பதும்; அதேவேளையில் காலச்சூழலில் மரபுப்பெயர்கள் மாற்றங்களுக்கு உட்பட்டிருக்க வேண்டும் என்பதும் இவ்ஆய்வின் கருதுகோளாகும்.*

**ஆய்வு நோக்கம்**

தற்போதைய ஆய்வு உலகில் உயிர்கள் குறித்த ஆய்வு மேற்கொள்ளும் சூழலில்; அவற்றின் தோற்றம், வளர்நிலைகளான பரிணாமம், உயிரிகளினுடைய இயங்குநிலைகள் போன்றவற்றைத் தமிழ் இலக்கியங்களி ல் ஒப்பிட்டுக் காணும் ஆய்வுகள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. சங்க இலக்கியத்தில் விலங்கு, பறவை, செடிகொடிகள், நீர்வாழ் உயிரினங்கள் குறித்த பல ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன.

அவ்வகையில் தொல்காப்பிய மரபியலின் சிந்தனைகளுள் உயிரினங் களின் மரபுப்பெயர்களைத் தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த சங்க அக நூற்களில் இடம்பெற்றுள்ளப் பாங்கினைக் கண்டறிவது இவ்ஆய்வின் நோக்கமாகும்.

மேலும் மரபியலுள் விளம்பப்பட்டுள்ள உயிரித்தகவல்கள், தொழில் மரபுகள், நூன்மரபுகள் பற்றிய ஆய்வினை மேற்கொண்டால் இன்னும் விரிவான ஆய்வாக அமையும். எனினும்; ஆய்வின் கால எல்லை கருதியும், ஆ ய்வேட்டின் பக்க எல்லை கருதியும் இவ்வாறான பார்வை நோக்கப்பட வில்லை. இவை தனித்த ஆய்வாக மேற்கொள்ள வேண்டிய ஒன்று.

இவ்ஆய்வு வருணனை நோக்கிலும் கருத்துப் புலப்பாட்டுநெறி அடிப்படையிலும் நோக்கப்படாதது குறிக்கத்தக்கதாகும்.

**ஆய்வு எல்லை**

தொல்காப்பிய மரபியலும்; சங்க அக இலக்கியங்களான எட்டு நூற்களும் இவ்ஆய்விற்கு எல்லைகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

எந்தவொரு ஆய்விற்கும் அடிப்படை மூலத்தை அழுத்தமாகவும், விளக்கமாகவும் நோக்குவது சிறப்புடைத்தாகும். அவ்வகையில் மரபுப்

பெயர்களை விளக்க விளக்கவியல் அணுகுமுறையும் (DescriptiveApproach), பகுத்துக் காணப் பகுப்பாய்வு அணுகுமுறையும் (AnalyticalApproach), மரபின் தொடர்ச்சியைச் சுட்டும் முகமாக வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical Approach), தொல்காப்பிய மரபியலுடன் சங்க அக நூற்களை ஒப்பிட்டும் உறழ்ந்தும் நோக்குமிடத்து ஒப்பியல் அணுகுமுறையும்(ComparativeApproach) இ வ்ஆய்வில் பின்பற்றப் பட்டுள்ளன.

**முன் ஆய்வுகள்**

இவ்ஆய்விற்கு 'செ.வேங்கடராமச் செட்டியார் அவர்களின் - பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள் (1960)' என்ற நூலும், 'பி.எல்.சாமி அவர்களுடையசங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம் (1967), சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம் (1970), சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம் (1976)' ஆகிய நூற்களும், 'இரா.வசந்தகுமார் அவர்களின் - அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள் தொகுதி- 1 (2002), இரண்டாம் தொகுதி (2006)' என்ற நூலும்; 'கே.ஆர்.சாந்தாராம் - சங்க இலக்கியத்தில் மா, புள் வருணனையும் கருத்து வெளிப்பாடும் (1993)', 'து.இரவிக்குமார் சங்கப் பாடல்களில் பெயர்க் குறியீடுகள் (2007)', 'ஜெ.சந்திரகலா சங்க இலக்கியங்களில் பறவைகள், விலங்குகள் (2008)', 'ப.அன்பரசி சங்க இலக்கியத்தில் தொல்காப்பியப் பெயர்ப்பதிவுகள் (2013)', 'பா.வாணிஸ்ரீ சங்க அகப்பாடல்களில் விலங்குகள் வழி அறியலாகும் கருத்தியல் (2013)' ஆகிய முனைவர் பட்ட ஆய்வேடுகளும் முன் ஆய்வுகளாக விளங்குகின்றன.

**ஆய்வு ஆதாரங்கள்**

இவ்ஆய்வின் ஆதாரங்கள் பின்வரும் இருவகையினவாகும். அவைகளாவன,

1. முதன்மை ஆதாரங்கள் (Primary Sources)

2. துணைமை ஆதாரங்கள் (Secondary Sources)

என்பனவாகும்.

**முதன்மை ஆதாரங்கள்**

இவ்ஆய்விற்குத் தொல்காப்பிய மரபியலும்; சங்க அக நூற்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகியவையும் முதன்மைச் சான்றாதாரங்களாகும்.

**துணைமை ஆதாரங்கள்**

இவ்ஆய்வுப் பொருளோடு தொடர்புடைய இலக்கண, இலக்கிய நூல்கள், திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வுக்கோவைகள், ஆய்வேடுகள், அகராதிகள், இதழ்கள், கலைக்களஞ்சியங்கள், நிகண்டுகள், சொல்லடைவுகள், ஆங்கில நூற்கள் ஆகியன துணைமைச் சான்றாதாரங்களாக விளங்குகின்றன.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

1. தொல்காப்பிய மரபியல் – விளக்கம்
2. சங்க அக இலக்கியங்களில் இளமைப்பெயர்கள்
3. சங்க அக இலக்கியங்களில் ஆண்பாற்பெயர்கள்
4. சங்க அக இலக்கியங்களில் பெண்பாற்பெயர்கள்

முன்னுரை என்னும் இப்பகுதியில் ஆய்வுத்தலைப்பு, கருதுகோள், நோக்கம், எல்லை, அணுகுமுறைகள், முன் ஆய்வுகள், ஆதாரங்கள், இயல் பகுப்புகள், முடிவுரை, துணைநூற்பட்டியல், பின்னிணைப்புகள் ஆகியன இடம்பெற்றுள்ளன.

*மரபு இயற்கை தழுவியது, வாழ்வு மரபுடையது, இலக்கியம் வாழ்விலிருந்து மலர்வது, ஆதலின் அதுவும் மரபுடையதாயிற்று. இலக்கியம் நுகர்வோர்க்கு மரபு பற்றிய அறிவு இன்றியமையாதது. தொல்காப்பியர் இலக்கியங்களில் அமையப் பெறவேண்டிய மரபுகள் பற்றிய கோட்பாடுகளைக் கூற மரபியலை இயற்றியுள்ளார். அவ்வகையில்,*

**"தொல்காப்பிய மரபியல் -**

***விளக்கம்"*** *என்னும் முதலாமியலில் மரபு, இயல், மரபியல் ஆகியவற்றிற்கு அகராதிகள், நிகண்டுகள், கலைக்களஞ்சியங்கள் தரும் விளக்கங்களும்; 'மரபு' குறித்து அறிஞர் பெருமக்களின் கருத்துரைகளும்; 'மரபு' எனும் சொல் தொல்காப்பியம், சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள திறத்தையும்; மரபினைக் காத்தல், இன்றியமையாமை, பயன்கள், பெருமை ஆகியவை களும்; மரபியலின் கட்டமைவுகளும்; மரபியலுள் இடைச்செருகல்கள் என்று நிறுவியுள்ள பாங்கும் விளக்கியுரைக்கப் பட்டுள்ளன.*

***"சங்க அக இலக்கியங்களில் இளமைப்பெயர்கள்"*** *எனும் இரண்டாமியலில், மரபியலுள் சுட்டப்பட்டுள்ள இளமைப்பெயர்கள்; நிகண்டுகள், உயர்தரக் கட்டுரை இலக்கணத்தில் கூறப்பட்டுள்ளவற்றுடன் ஒப்பு நோக்கி சங்க அக இலக்கியங்களுள் இடம்பெற்றுள்ள பெயர்கள், இடம் பெறாப் பெயர்கள், புது மரபாகக் குறிக்கப்பட்டிருப்பவை விளக்கப் பட்டுள்ளன.*

***"சங்க அக இலக்கியங்களில் ஆண்பாற்பெயர்கள்"*** *என்னும் மூன்றாமியலில், மரபியல் விளம்பியுள்ள ஆண்பாற்பெயர்கள் சங்க அக நூற்களுள் எடுத்தாளப்பட்டுள்ள பெயர்களையும் எடுத்தாளப்படாதப் பெயர்களையும், புதுமையாகத் தோற்றுவித்துள்ளதனையும் தெளிவுபடுத்தப் பட்டுள்ளன.*

**“சங்க அக இலக்கியங்களில் பெண்பாற்பெயர்கள்”** எனும் நான்காமியலில், மரபியல் வரையறுத்துள்ள பெண்பாற்பெயர்கள்; சங்க அக இலக்கியங்களுள் இடம்பெற்றுள்ள, இடம்பெறாத் திறத்தினையும்; புதுமரபாகக் குறிக்கப்பட்டுள்ளப் பெயர்கள் வெளிக்கொணரப் பட்டுள்ளன.

ஆய்வில் கண்டறியப் பெற்றுள்ள சாரங்கள் முடிவுரையில் ஆய்வு முடிவுகளாக இடம்பெற்றுள்ளன.

ஆய்விற்குத் துணை செய்த முதன்மை, துணைமைச்சான்றாதாரங்கள் அகர வரிசைப்படுத்தப்பட்டுத் துணைநூற்பட்டியலாக இடம்பெற்றுள்ளது. இதனையடுத்துப் பி ன்னிணைப்புகளாக அட்டவணைகள் இடம் பெற்றுள்ளன.

# தொல்காப்பிய மரபியல் - விளக்கம்

வாழ்வு மரபுடையது, இலக்கியம் வாழ்விலிருந்து மலர்வது, ஆதலின் அதுவும் மரபுடையதாயிற்று. இலக்கியம் நுகர்வோருக்கு மரபு பற்றிய அறிவு இன்றியமையாதது. தொல்காப்பியர் இலக்கியங்களில் அமையப்பெற வேண்டிய மரபுகள் பற்றிய கோட்பாடுகளைக் கூறி மரபியலை அமைத்துள்ளார். தற்காலத் தமிழ் இலக்கண நூற்கட்கு முற்பட்டதான தொல்காப்பியமும் தமக்கு முன், நூலோர் கண்ட முறைமையின் மரபு நெறிக்கு இலக்கணம் வகுத்துள்ள பாங்கும், மரபுக்கு காட்டுகின்ற சிறப்பும் தனித்தன்மையுடையன.

இத்திறத்தால் எழுத்து, சொல், பொருள் ஆகியவற்றுள் நூன்மரபு, மொழிமரபு, தொகைமரபு, விளிமரபு, மரபியல் என்று வகுத்துள்ளார். உலக வழக்கு, செய்யுள் வழக்கு என்ற இரண்டிலும் காணப்பெறுகின்ற இலக்கண மரபு காத்து அமைத்தவர் எனும் நிலையிலேயே நூல் மரபில் தொடங்கி மரபு இயலில் நிறைவு பெறுவதாகத் தொல்காப்பியத்தை இயற்றியுள்ளார். இவ்வாறாக மரபுகள் தமிழில் நிலைத்த இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றமையால், மரபியல் குறித்து ஆய்வதாக இவ்வியல் அமையப் பெறுகின்றது.

**மரபியல் - விளக்கவுரை**

மரபு + இயல் = மரபியல். மரபுடன் புணர்ந்த இயல் மரபியல். மரபு, இயல், மரபியல் என்பனவற்றிற்கு தமிழ்ப் பெயரகராதி, தமிழகராதி, தமிழ்மொழி அகராதி, பொருட்களஞ்சியம், சொல்லகராதி, செந்தமிழ் அகராதி, பேரகரமுதலி, தற்காலத் தமிழ் அகராதி, அருங்கலைச் சொல் அகரமுதலி, தமிழ்ச் சொல்லகராதி, கலைக்களஞ்சியம், சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், நிகண்டுகள் போன்றன பின்வரும் விளக்கங்களைத் தருகின்றன.

**மரபு**

*மரபு என்பதற்கு ; "இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி: குண ம் ; பழமை ; முறைமை ; வமிசம்"*[1] *என்று விளக்கம் தருகின்றது.*

"Tamil Lexicon : Marapu - 1. Rule ; law ; established usage or order ; that which is sanctioned by custom ; *முறைமை;*

*2.* Use of language sanctioned by ancient authors. *சான்றோரின் சொல் வழக்குமுறை (நன்.388);*

*3.* Antiquity ; *பழமை ;*

*4.* Ancestral line ; *வமிசம் ;*

*5.* Line age ; *பாரம்பரியம் ;*

*6.* Nature, Property ; *இயல்பு ;*

*7.* Characteristic ; Character ; *நல்லொழுக்கம்;*

*8.* Good Conduct; Character ; *நல்லொழுக்கம் ;*

*9.* Name ; fame ; *பெருமை ;*

*10.* Greatness; ideal ; *மேம்பாடு ;*

*11.* Justice ; *நியாயம் ;*

*12.* Reverence, Civility ; *வழிபாடு;*

*13.* Age, Period of life ; *பருவம்"*[2] *என்றும்,*
*குறிப்பிடுகின்றது.*

*"முறைமை, பழமை என்று சூடாமணி நிகண்டு"*[3] *சுட்டுகின்றது.*

"A Tamil - English Dictionary : *குணம்* (nature) ; *பழமை* (antiquity) *; முறைமை* (established usage, order, propriety, ancestral line as in இருமரபென்றும்"[4] குறிக்கிறது.

“குணம் ; பழமை ; முறைமை ; வமிசமென்று தமிழ் மொழி அகராதி”[5] விளக்குகின்றது.

“முறைமை ; சான்றோரின் சொல் வழக்குமுறை ; பாரம்பரியம்; நல்லொழுக்கம் ; மேம்பாடு ; வழிபாடு ; பருவமென்று செந்தமிழ் அகராதி”[6] பொருள் தருகின்றது.

“A Dictionary Tamil and English; 1.the same as *குணம்;* nature ; property;

2. the same as *பழமை ;* antiquity ;

3. the same as *முறைமை ;* usage ; degree, descent of family, posterity”[7] என்றும் சுட்டிக்காட்டுகிறது.

“வழக்கம் ; குடிவழி ; இயல்பு ; நல்லொழுக்கம் ; மேம்பாடு ; வழிபாடு ; பருவம் ; usage ; ancestral line ; nature ; good conduct ; greatness; worship ; age என நர்மதாவின் தமிழகராதியும்,”[8]

“க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி:

1. (பண்பாட்டின் எல்லா அம்சங்களிலும்) பல காலமாகப் பின்பற்றப்பட்டு வருவது அல்லது பலரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட நியதி ; established usage ; tradition ;

2. பாரம்பரியம் ; genctics ; மரபு வழி நோய்கள்”[9] என்றும்,

“அருங்கலைச் சொல் அகர முதலி : Tradition ; மரபு”[10] என்றும் விளக்கம் தருகின்றன.

“முறைமை ; சந்ததி ; சொல் வழக்குமுறை ; நல்லொழுக்கம் ; பழமை ; இயல்பு என்று கோனார் தமிழ் அகராதியும்,”[11]

“வமிசம் ; குணம் ; பழமையென்று பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதியும்,”[12]

“தன்மை ; முறைமை ; மேம்பாடு ; பயிற்சி என்று சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியமும்,”[13]

“அபிதான சிந்தாமணி (தமிழ்க் கலைக்களஞ்சியம்) ;

1. (2) தந்தை மரபு ; தாய் மரபு ;

2. யாதொரு பொருளை யாதொரு சொல்லால் யாதொரு நெறியால் அறிவுடையார் சொன்னார்களோ அப்படிச் சொல்லுதல்”[14] என்று சுட்டுகின்றது.

“முறைமை ; சான்றோரின் சொல் வழக்குமுறை ; பழைமை ; வமிசம் ; பாரம்பரியம் ; இயல்பு ; இலக்கணம் ; நல்லொழுக்கம் ; பெருமை ; பாடு ; நியாயம் ; வழிபாடு ; பருவம் என மெய்யப்பன் தமிழ் அகராதியும்”[15] விளக்கங்களைத் தருகின்றன.

“குணம் ; பழைமை ; முறைமை ; வமிசம் ; வழக்குமுறை ; இயல்பு; பரம்பரை ; இலக்கணம் ; நல்லொழுக்கம் ; பெருமை ; மேம்பாடு ; நியாயம் ; வழிபாடு ; பருவம் என்று கழகத் தமிழகராதியும்,”[16]

“குணம் ; வமிசம் ; இலக்கணம் ; நல்லொழுக்கம் ; பெருமை ; மேம்பாடு ; நியாயம் ; வழிபாடு ; பருவமென்று கௌரா தமிழ் அகராதியும்,”[17] விளக்கம் தருகின்றன.

“Marapu : means rule, law established usage, that which is sanctioned by custom, use of language sanctions by ancient authors, antiquity, ancestral line, lineage, nature, property, characteristic, good conduct, name, fame, greatness, ideal, justice, reverence, civility, etc.,”[18] என்று ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார்.

“தாய்வழி, தந்தை வழி என்று திவாகர அகராதியும் (நிகண்டு)”[19] விளக்கம் தருகின்றது.

இவ்வாறாக, ‘மரபு’ எனும் சொல்லிற்குப் பயின்று வந்துள்ள பொருள்களாவன ;

இயல்பு

இலக்கணம்

ஒழுக்கம்

குடிவழி

குணம்

சந்ததி

சான்றோரின் சொல்வழக்குமுறை

தந்தை வழி

தன்மை

தாய்வழி

நல்லொழுக்கம்

நியாயம்

பயிற்சி

பரம்பரை

பருவம்

பழமை (பழைமை)

பாடு

பாரம்பரியம்

பெருமை

முறைமை

மேம்பாடு

வமிசம்

வழக்கம்

வழக்குமுறை

வழிபாடு

என்பனவாகும்.

**இயல்**

இயலிற்கு, "இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி: இசை; இயலென்னேவல் ; இயற்றமிழ் ; இலக்கணம் ; ஒழுங்கு ; ஒத்து; குணம்; சாயல் ; நடை ; பகுதி"[20] என்று விளக்கம் தருகின்றது.

"Tamil Lexicon : iyal - 1. Nature, property, quality ; தன்மை ;

2. Fitness, worth ; தகுதி ;

3. Delicays, Softness, tenderness ; சுகுமாரதை ;

4. Good conduct ; ஒழுக்கம் ;

5. Affection Continued from birth to birth ; உழுவலன்பு ;

6. Pace, gait, as of a horse ; செலவு ;

7. Likeness, similitude ; ஒப்பு ;

8. Literary Tamil see ; இயற்றமிழ் ;

9. Treatise ; esp the Agama works ; நூல் ;

10. Section of a work containing chapters treating of a series of subjects or things in order, chapter ; நூலின் பகுதி ;

11. Chanting in a chorus the Tivya - P - Pirapantham Constituting the Vaisnava Sacred hymns ; திவ்ய பிரபந்தத்தைக் கோஷ்டியாக நின்று ஓதுகை"[21] என்று விளக்குகின்றது.

"ஒழுக்கம், இயற்றமிழ், சாயல் என்று சூடாமணி நிகண்டு"[22] சுட்டுகின்றது.

"A Tamil - English Dictionary :

1. இசை ; Melody ; Musical harmony ;

2. இயற்றமிழ் ; natural pure Tamil prose or poetry ;

3. ஒத்து - a Chapters, section treating of a series of subjects or things in order ;

4. குணம் ; nature ; natural property or quality ;

5. சாயல் ; aspect, appearence, shape, likeness ;

6. நடை ; good conduct, conduct appropriate, to a person's caste, rank, office & c. ;

7. பொருந்தென்னேவல் - imp. be. possible be incident to & c ;

8. ஒழுங்கு - order, course, rule, method ;

9. விதி - destiny, appointment, assignation, decree, allotment ;

10. இலக்கணம் ; grammer"[23] என பொருள் தருகின்றது.

"ஆகமம்; இயற்கை; இசை ; இயலென்னேவல் ; இயற்றமிழ் ; இலக்கணம் ; ஒழுங்கு ; ஒத்து ; குணம் ; சாயல் ; நடை ; பகுதி என தமிழ் மொழி அகராதியும்,"[24]

"தன்மை ; இயற்றுதல் ; இயங்குதல் ; சாயல் ; இலக்கணம் ; இயற்கை ; அசைதல் ; இயற்பாட்டு ; பொருந்துதல் ; அழகு ; ஒப்பு ; அன்பு என்று சங்க இலக்கியப் பொருட்களஞ்சியமும்,"[25]

"தன்மை; செலவு; இயற்பாட்டு ; இயற்றமிழ் ; நூல் ; இலக்கணம்; பெருமை ; முதன்மை ; நூலின் பகுதி ; உட்பிரிவு ; செய்தி; ஒப்பு ; வழிபாடு ; மாயை ; மாறுபாடு ; சொல் ; பொருள் ; அரசியல் ; வைணவக் கோயிலில் திவ்வியப் பிரபந்தத்தைக் கூட்டமாக நின்று ஓதுகை ; பொன் ; இந்திரகோபம் என பெருஞ்சொல்லகராதியும்,"[26]

"இயற்கை ; இலக்கணம் ; சாயல் ; நடை ; நூற்பொருட் பாகுபாடு என்று செந்தமிழ் அகராதியும்"[27] விளக்கம் தருகின்றன.

“செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி :

1. தன்மை - (Nature) Property, Quality (புறநா.25:2);

2. தகுதி - fitness ; worth ;

3. ஒழுக்கம் - good conduct, conduct appropriate to one's, status, up bringing, rank of office ;

4. உழுவலன்பு - affection continued from birth to birth ;

5. செலவு - Pace, gait, as of a horse ;

6. ஒப்பு - likeness, similitued ;

7. இயற்றமிழ் - literory tamil ;

8. நூல் - treatise esp, the Agama works ;

9. நூலின் பகுதி - Chapter, section of a work containing chapters treating of a series of subjects or things in order;

10. மாலியப் பாடல்களை ஓதுதல் - Chanting in a chorus the Divya - P - Pirapandam;

11. ஆற்றல் - strength, power ;

12. அழகு - beauty, delicacy ;

13. நாட்டியத் தாளம் - dancing beats ; தம்பலப்பூச்சி ; மாறுபாடு; rivarly ; Competition ; சாயல் (resemblance); பெருமை (greatness)”[28] என்று குறிப்பிடுகின்றது.

“A Dictionary Tamil and English :

1. the same as குணம், the nature, the property of a thing ;

2. the same as இசை, Union ;

3. the same as இயற்றமிழ், Plain and proper Tamil ;

4. the same as ஒத்து, a section or division of a chapter.

5. the same as சாயல், likeness ;

6. see, இயலுகிறது”[29] என சுட்டுகிறது.

*“தன்மை; தகுதி ; நடை ; ஒப்புமை ; நூலின் பகுதி ; இலக்கிய இலக்கணம் ;* nature ; fitness ; pace ; likeness ; division of book ; literature and grammar *என நர்மதாவின் தமிழ் அகராதியும்,”*[30]

*“க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி :*

*1. இயல, இயன்றது, இயன்றால், இயலாத, இயலாமல் முதலிய சில வடிவங்கள் மட்டும் ;*

*2. (மரபு இலக்கணப்படி தமிழ்மொழி பயன்படும் மூன்று துறைகளில் ஒன்றான) செய்யுளுக்கும் உரைநடைக்கும் உரிய தமிழ் ; இலக்கியத் தமிழ் ;*

*3. நூலின் உட்பிரிவு ; அதிகாரம்* (Chapter) *;*

*4. 1) ஒன்று நடந்து வரும் முறை அல்லது ஒன்றன் இயல்பு என்பதைக் குறிப்பிடும் விகுதி ;*

*2) கோட்பாடுகளால் உருவாக்கப்பட்ட துறை என்பதைக் குறிப்பிடும் விகுதி”*[31] *என்று விளக்கங்களைத் தருகின்றன.*

*“இயற்றமிழ் ; நூற்பகுதி ; தன்மை ; சாயல் ; இலக்கணம் ; இயற்கை ; ஒழுக்கம் ; உழுவலன்பு ; நடை என்று கோனார் தமிழ் அகராதியும்,”*[32]

*“குணம்; ஒழுக்கம் ; ஒழுங்கு ; சாயல் ; இசை ; இயற்றமிழ் ; ஒத்து; விதி என்று பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதியும்”*[33] *குறிப்பிடுகின்றன.*

*“தன்மை ; இயல்பு ; உழுவலன்பு ; சாயலென்று சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியமும்,”*[34]

*“தன்மை ; தகுதி ; சுகுமாரதை ; ஒழுக்கம் ; உழுவலன்பு ; செலவு; ஒப்பு ; இயற்றமிழ் ; இலக்கணம் ; நூல் ; நூலின் பகுதி ; திவ்வியப் பிரபந்தத்தைக் குழுவாக நின்று ஓதுகை ; மாறுபாடு ; சாயல் ; பெருமை என்று மெய்யப்பன் தமிழ் அகராதியும்”*[35] *விளக்கம் தருகின்றன.*

"ஆகமம் ; இயல் ; இயலென்னேவல் ; தெரிநிலை வினைப்பகுதி; இயற்கை ; இயற்றமிழ் ; இலக்கணம் ; ஒழுக்கம் ; ஒழுங்கு ; ஒத்து ; குணம் ; கூறுபாடு ; சாயல் ; தமிழ் ; தன்மை ; நடை ; நூற்பகுதி ; பொருந்தல் ; விதி ; இயல்பு ; ஒப்பு ; மென்மை ; உழுவலன்பு ; செலவு; மாறுபாடு ; இசை ; நட ; கூடியதாயிரு ; பொருந்து என்று கழகத் தமிழ் அகராதியும்,"[36] "கௌரா தமிழ் அகராதியும்"[37] குறிப்பிடுகின்றன.

"Tolkaappiyam and other Indian Grammatical treaties :

Iyal means nature, property, quality, delicacy, softness, good conduct, literary tamil, treatises, section of a work, containing chapters treating of series of subject or things in order. Here it denotes a chapter,"[38] என்பர் ச.வே.சுப்பிரமணியன்.

"சாயல், நடையென்று திவாகர அகராதியும் (நிகண்டு)"[39] விளக்கத்தைத் தருகின்றது.

'இயல்' என்னும் சொல் பயின்று வந்துள்ள பொருண்மைகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன:

அசைதல்

அரசியல்

அழகு

அன்பு

ஆகமம்

ஆற்றல்

இசை

இந்திரகோபம்

இயங்குதல்

இயல

இயலாத

இயலாமல்

இயலுதல்

இயலென்னேவல்

இயல்

இயல்பு

இயற்கை

இயற்பாட்டு

இயற்றமிழ்

இயற்றுதல்

இயன்றது

இயன்றால்

இலக்கணம்

இலக்கிய இலக்கணம்

உட்பிரிவு

உழுவலன்பு

ஒத்து

ஒப்பு

ஒப்புமை

ஒழுக்கம்

ஒழுங்கு

ஓத்து

குணம்

கூடியதாயிரு

கூறுபாடு

சாயல்

சுகுமாரதை

செய்தி

செலவு

சொல்

தகுதி

தம்பலப்பூச்சி

தன்மை

திவ்ய பிரபந்தத்தைக் குழுவாக நின்று ஓதுகை

தெரிநிலை வினைப் பகுதி

நட

நடை

நாட்டியத்தாளம்

நூல்

நூலின் உட்பிரிவு

நூலின் பகுதி

நூற்பொருட்பாகுபாடு

பகுதி

பெருமை

பொருந்துதல்

பொருந்தென்னேவல்

பொருள்

பொன்

மாயை

மாறுபாடு

மென்மை

வழிபாடு

விதி.

*மரபு, இயல் என்ற சொற்களுக்கு அகராதிகள் முதலியன தரும் விளக்கத்தை உற்றுநோக்கும் பொழுது இயல்பு, இலக்கணம், ஒழுக்கம், குணம், தன்மை , பெருமை, வழிபாடு என்பன இவ்விரண்டிலும் பதிவு செய்யப்பட்டுள்ளன.*

**மரபியல்**

*மரபியல் என்பதனுக்கு;* "Tamil Lexicon : Marapiyal ; A Section of grammer which treats of the idiomatic use of words, as in Tolkaappiyam, Tolkãppiyam; *முன்னோர் வழங்கிய சொல் வழக்கைக் கூறும் இலக்கணப் பகுதி"*[40] *என்று விளக்கம் தருகிறது.*

*"செந்தமிழ் அகராதியும்,"*[41] *"மெய்யப்பன் தமிழ் அகராதியும்:"*[42] *முன்னோர் வழங்கிய சொல் வழக்கைக் கூறும் இலக்கணப் பகுதியென்றுச் சுட்டுகின்றன.*

*"சொல் வழங்கும் மரபைக் கூறும் இலக்கணப் பகுதி ;* the part of ancient grammer works which deals with convention of words *என்று நர்மதாவின் தமிழ் அகராதியும்"*[43] *"க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதியும்"*[44] *குறிப்பிடுகின்ற போதும், இரண்டாமது; உயிரினங்கள் எவ்வாறு பண்பு - நலன்கள் பெறுகின்றன என்பது பற்றிய படிப்பு* (genetics) *என்பதையும் சுட்டியுரைக்கின்றது.*

*"கழகத் தமிழ் அகராதியும்,"*[45] *"கௌரா தமிழ் அகராதியும்"*[46] *முன்னோர் வழங்கிய சொல் வழக்கைக் கூறும் இலக்கணப் பகுதி ; மரபிலக்கணம் என்று விளக்கத்தைத் தருகின்றன.*

*மேற்கண்டவற்றிற்கிணங்க மரபியல் என்பது முன்னோர் வழங்கிய சொல் வழக்கைக் கூறும் இலக்கணப் பகுதியாகவும் மரபிலக்கணமாகவும், உயிரினங்கள் எவ்வாறு பண்பு நலன்களைப் பெறுகின்றன என்பதைப் பற்றிய படிப்பு (*

genetics)

என்பதனையும் அறியமுடிகின்றது. அதாவது முன்னோர்களால் வகுக்கப்பட்டு வரலாற்று முறைமைகளான எழுத்து, சொல், பொருள், வாழ்வியல் வழக்கங்களை விளக்குகின்ற இலக்கணப் பகுதி என்பது திண்ணமாகின்றது.

**மரபு குறித்து ஆய்வாளர்களின் கருத்துரைகள்**

"மரபாவது எப்பொருளெச் சொலின் எவ்வாறுயர்ந்தோர் செப்பினர் அப்படிச் செப்புதல்"[47] என்கிறார் மு.ராகவையங்கார்.

"'மரபு' என்பது தொன்றுதொட்டு வருவது. அறிவான் உயர்ந்தோரால் உண்டாக்கப்பட்டு வழங்கி வருவதாகும்"[48] என்று சி.இலக்குவனார் குறிப்பிடுகின்றார்.

"மரபு என்பது, ஒவ்வொரு பொருளுக்கும் ஆன்றோர் வழங்கிய சொற்களை அவர்கள் வழங்கிய முறைப்படியே கூறுதல் ஆகும்"[49] எனக் கூறுவர் லெ. ப.கரு.இராமநாதன்.

மா.இராசமாணிக்கனார், "மக்களுக்கு வாழ்வும் வளமும் தாழ்வும் சாவும் உண்டு. இவ்வாறே சொற்களுக்கும் இந்நான்கும் உண்டு. சொற்கள் மக்களைச் சார்ந்தே இந்நான்கு நிலைகளையும் அடைகின்றன. மக்கள் பல நூற்றாண்டுகளாக ஒரு சொல்லை ஒருமுறை பற்றியே வழங்கி வருவராயின், அவர்தம் பின்னோர் அம்முறையிலேயே அதனை வழங்குதல் மரபு"[50] என்று சுட்டுகின்றார்.

"மரபு என்பது நோக்கம் அன்று, இடையறாது ஓடும் ஓர் இயக்கத்தின் ஒரு பகுதி. தன்னைத் தானே அழித்துக் கொண்டு இலையும் தளிருமாகப் பரிணாமம் கொள்ளும் விதையைப் போலவும் வருங்காலத்திற்கு உதவுகின்ற வண்டலைப் போலவும் உருவாக்கி வார்த்து உபயோகித்துக் கொள்ள வாய்ந்த ஆய்வுக் கூடம் போலவும் அனுபவங்கள் பழுத்த அன்பார்ந்த தோழனைப் போலவும்

நம்மோடு உறவாடுகிறது. மரபு மரணத்தின் தூதுவன் அல்ல, ஜீவிதத்தின் தொடரோட்டப் பந்தயத்தின் ஒரு அடுத்த தலைமுறையைத் தூண்டி விடுகிற கிரியா ஊக்கி"[51] என்பார் சிற்பி பாலசுப்பிரமணியம்.

நா.செயராமன், "காரணகாரிய இயைபுக்கு உட்பட்டு விளக்கப்படும் நெறிமுறைகளன்றி உயர்ந்தோர் வழக்காக அமைந்த கருத்துக்கள் மரபெனப்படும்"[52] எனக் குறிப்பிடுவர்.

"காலம் காலமாகத் தொடர்ந்து பின்பற்றப்பட்டும்... எதுவாயினும் மாறாது அமைவது பற்றி மரபு எனல் சுட்டத்தக்கது. ஏற்கனவே நிலவிவரும் கொள்கைகள், கோட்பாடுகள், முறைகள், மரபு எனத் தோன்றும். ஆயின் அடிப்படை மாறாது இருக்க அதனில் வேரூன்றிய வளர்ச்சியும் விரிவும்கூட மரபில் புதுமை சேர்க்கலாம். எனவே, பழங்காலந்தொட்டு அமைவதைப் பழமரபு எனவும், அதில் மாறிவரும் புதுமையினைப் புதுமரபு எனவும் கூறலாம். மாறுவது மரபல்ல எனத் தோன்றினும், அம்மாற்றம் பயிற்சியும் ஆட்சியும் செல்வாக்கும் பெற்று விளங்கும் போது அதுவும் மரபாக உருவாதல் உண்டு (ச.வே.சுப்பிரமணியன், அன்னி தாமசு, எண்பதில் மரபுக் கவிதை, எண்பதுகளில் தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982, ப.675)"[53] என்பதை எடுத்தாண்டு விளக்கியுள்ளார் ச.சிவகாமி.

சா.கிருஷ்ணமூர்த்தி, "மரபு எனினும் இலக்கணம் எனினும் எல்லாம் ஒரு பொருட்பன்மொழி (இறை.3), காலமும் இடனும் பற்றி வழக்குத் திரிந்தக்காலும் திரிந்தவற்றிற்கேற்ப வழுப்படாமைச் செய்வதொரு முறைமை (பேரா.தொல்.பொருள்.313), காலந்தொறும் இடந்தொறும் வழக்குத் திரிந்தவற்றிற்கேற்ப வழுப்படாமற் செய்வதோர் முறைமை (நச்.தொல்.செய்.1) என்று உரைச்சொற் களஞ்சியத்தில்"[54] குறித்துள்ளார்.

ந.சுப்பிரமணியன், "பிற செய்தி மூலங்களைப் போன்ற தகுதியை மரபுச் செய்திகளுக்குத் தர முடியாது என்பது உண்மை. 'மரபுச் செய்தி வரலாறன்று ; ஆயினும் மனித குலத்தின் பண்டைய நினைவுகளை வரலாற்றாளன் முற்றிலும் புறக்கணிக்கக் கூடாது' (க.சு.நீலகண்ட சாஸ்திரி : 'History of south India' ப.22)"[55] என்ற கருத்தினை எடுத்தியம்புகிறார்.

"யாதொரு பொருளை யாதொரு சொல்லால், யாதொரு வழியால் அறிவுடையார் சொன்னாரோ, அப்பொருளை அச்சொல்லால் அவ்வழியாற் சொல்லுதல் மரபாம்"[56] என மொழிவர் க.தமிழரசன்.

க.வெள்ளைவாரணன் என்பார், "'மரபு' என்னும் இச்சொல், இலக்கணம் என்ற பொருளிலும் தொன்றுதொட்டுப் பொருட்குரியனவாய் வழங்கி வரும் சொல் மரபு என்ற பொருளிலும் நெடுங்காலமாக வழங்கி வருகின்றது"[57] என்று கூறுகிறார்.

"'மரபு' என்றால் என்ன? உயர்ந்தோர்கள் கூறும் வழக்கே, காலப்போக்கில் மரபு ஆகிறது. வழக்கை உருவாக்குவதும், கையாள்வதும் உயர்ந்தோரே"[58] எனக் கூறுவர் வி.பி.புருஷோத்தமன்.

ந.சுப்புரெட்டியார், "மொழி சொற்களால் ஆனது ; சொற்கள் யாவும் பொருள்களை உணர்த்தும் குறியீடுகளாம். சொல்வோனது உள்ளக் கிடக்கையைக் கேட்போன் சரியாக உணர வேண்டுமாயின், சொற்களின் பொருளை இருவரும் நன்கு தெரிந்திருத்தல் வேண்டும். பண்டைக் காலத்தில் எவ்வாறு சொற்களுக்குப் பொருள் வழங்கினார்களோ, அந்த மரபு கெடாது அச்சொற்களை வழங்கி வரல் வேண்டும்"[59] என்று விளக்கம் தருகின்றார்.

"'மரபு' என்பது ஒருவரால் எடுத்தாளப்பட்டு பின்னர் பலராலும் பின்பற்றப்படுவதொன்றாகும். ஒரு மரபைத் தனியொருவர் தொடங்கி வைக்கலாம்; ஆ

னால், தோற்றுவிக்க முடியாது. அதாவது, தனியொருவரால் தொடங்கிவைக்கப்படுகிற ஒ ன்று, பரவலாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படுகிற போது, அது ‘மரபு’ என்னும் குறியீட்டைப் பெறுகிறது”[60] என்பர் மருதூர் அரங்கராசன்.

இரா.இளங்குமரனார், “மரத்திலிருந்து வித்து ; வித்தில் இருந்து மரம் ; இப்படியே மீண்டும் மீண்டும் மரமும் வித்தும் தொடர்ந்து வருதல் மரத்தின் இயல்பு ; இந்நிலையே மரபின் இயல்பும் விளக்கமாம்”[61] என்று மொழிகுவர்.

“‘மரபு’ என்பது பண்பாட்டின் எல்லா அம்சங்களிலும் தொடர்புடைய து. பலரால் பின்பற்றப்பட்டு வருவது அல்லது பலரால் ஏற்றுக் கொள்ளப்பட் ட நியதி”[62] என்பார் இரா.பாலசுப்பிரமணியன்.

க.காந்தி, “மரபு என்பது எழுதப்படாத சட்டம். இதனைச் சமூகம் உள ஒருமைப்பாட்டால் உருவாக்குகின்றது. இம்மரபுகள் சமுதாய நலன் கருதி ஏற் பட்டவை. மரபு என்பது வழக்கமாகத் தலைமுறை தலைமுறையாகப் பின்பற் றப்படுவது எனப் பொருள்படும்”[63] என்று சுட்டியுரைக்கிறார்.

“தனிமனித நம்பிக்கை, பழக்கவழக்கம் என்பவை குறிப்பிட்ட இனத்தா ரால் தொடர்ந்து பயன்படுத்தும்போது அது மரபு எனும் தகுதிப்பாட்டினைப் பெறுகிறது”[64] என கரு.அழ.குணசேகரன் விளக்கியுள்ளார்.

தமிழண்ணல், “மரபு என்பது அடி மரமும் வேரும் போன்றது. பூவும் க னியுமாய் எவ்வளவு பூத்துக்குலுங்கினாலும் முன்னையவற்றை விடுத்து அவை அமைவதில்லை. மரபு மீறுதல் என்பதும் முன்னைய அடிப்படையை வைத்தே செயற்படுவதாகும். மரபில் வளர்ச்சி காட்டுவதே இலக்கியத்தில் தனித்திறன் வெளிப்பாடாகும்,”[65]

"மரபு என்பது தொல்காப்பியர் கருத்துப்படி சொல்மரபு பற்றியதே, மர பியலாலும் இதை அறியலாம். எனினும் பிற பல 'கட்டுப்பாட்டு விதிமுறைக ள்' கூறப்படும் இடங்களில் எல்லாம், இம் 'மரபு' வற்புறுத்தப்படுகிறது,"[66]

"டி.எஸ்.எலியட்டு என்ற பெரியார் நெடுநாள் வாழ்ந்தவர். தம் வாழ்நா ளிலேயே பிற மொழி கற்று, பல்வேறு கருத்துக்களும் கருத்து மாற்றங்களும் கொண்டு வாழ்ந்தவர் என்பர். அவர் 'வெறுமை நிலம்' பற்றிய நீண்ட புதுக்கவி தை எழுதியிருப்பினும், அவரைப் போல் கட்டுரை ஒன்றில் மரபை வலியுறுத் தியவர் வேறு எவருமிலர்.

'மரபு' என்பது 'குருதி ஓட்டம்' போன்றது. அது தின்ற சோற்றை வாந்தி எடுப்பது போன்றதன்று. உண்ணும் உணவு நம் குருதியில் கலப்பது போல், அம்மரபு நம் உணர்வோடு கலந்துவிடுகிறது... ஒரு குளத்தில் ஊற்று நீர் உண்டு ; மழை நீராகிய தூய நீரும் அதில் கலக்கும். இவை அனைத்தும் கூடி, மீண்டும் அக்குளத்து நீராகிவிடுகின்றனவே, அதுபோன்றே மரபும், மரபை மீறுவதென் பதும், புரட்சி செய்வதென்பதும் அதனை வைத்துக் கொண்டு விளையாடுவதே தயாகும்.

லூயிஸ், எழுத்தும் சொல்லும் அடிப்படை மரபுகள் என்பதை நன்கு வி ளக்குகிறார். 'க' என்ற எழுத்துக்கும் அதன் ஒலிக்கும் என்ன தொடர்பு? அன்று தொட்டு இன்றுவரை அவ்வொழுக்கத்தை அவ்வொலியால் குறித்து விடுகிறோம் என்பதே அவற்றிடையே உள்ள இயைபாகும். 'மரம்' என்ற சொல்லுக்கும் அச்சொல் சுட்டும் கண் கூடான பொருளுக்கும் என்ன உறவு? என்ன தொடர்பு? முன்னையோர் ஒன்றை எப்படிச் செப்பினரோ, அப்படிச் செப்புதலை நாம் 'மரபு' என்கிறோம்"[67] என்று மரபிற்கு பிறநாட்டு அறிஞர்களின் கருத்துரைகள் வாயிலாக வலுசேர்த்துள்ளார்.

“மரபு எனப்படுவது, உயர்ந்தோரால் உருவாக்கப்படுவது ; பழக்க வழக்கம் முதலான நடைமுறை வாழ்வியலில் பின்பற்றப்படுவது ; பண்பாட்டோடு நெருங்கிய தொடர்புடையது ; ஒன்றன் தனிச் சிறப்புக் கூறாய் நிற்பது ; நல்வழிப்படுத்துவதாக ; மேம்பாட்டிற்குரியதாகக் கருதப்படுவது ; விதிமுறை போன்று வலியுறுத்தப்படுவது ; காலம் காலமாகத் தொடர்வது ; மாற்றங்களுக்கும் இடனளிப்பது ; எவ்வகை மாற்றத்திற்கு இடனளித்தாலும் அதன் ஆணிவேர் அல்லது அடிக்கல் தன்னில் வலிமை குன்றாது, பயன்பாட்டில் தளராது உறுதியுடன் திகழ்வது என விரித்துரைக்கலாம்”[68] என்கிறார் ச.சிவகாமி.

அ.ச.ஞானசம்பந்தன், “மரபு என்பது கட்டுப்பாடே வேறொரு வகையில் குறிக்குமிடத்து ‘மரபு’ என்று கூறப்பெறுகிறது. ஆனால் கட்டுப்பாடு ஒருவாறு நீக்க முடியாததாக அமைகிறது. மரபு அவ்வாறில்லை. பழங்காலந்தொட்டுப் பெரியோர்கள் பொருள்களை எவ்வாறு குறித்தனர்? சொற்களால் அல்லவா? அவர்கள் குறித்த பொருளுக்கும் கூறிய சொற்களுக்கும் என்ன தொடர்பு இருந்தது? உண்மையைக் கூறவேண்டுமானால் ஒன்றுமில்லை என்றுதான் சொல்ல வேண்டும். மனிதன் என்ற தமிழ்ச் சொல்லைக் கூறியவுடன் சீனாக்காரன் ஒருவன் அது குறிக்கும் பொருளை அறிந்துகொள்ள முடியுமா? அப்படி இருக்க இப்பொருளுக்கு இப்பெயர் என்று குறிப்பிடுவதில் என்ன நியாயம் இருக்கிறது? ஒன்றுமில்லைதான். ஆனாலும் சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்பை ஒத்துக் கொள்ளாவிடில் உலகம் நடைபெறாது. ஒரு மொழி பேசும் கூட்டத்தாரில் பலர் கூடி ஒரு பொருளை ஒரு சொல்லால் ஒரு காலத்தில் குறிப்பிட்டனர். அதனை அனைவரும் ஏற்றுக்கொண்டனர். ஏன் ஏற்றுக்கொண்டனர்? அவர்கட்கும் அதன் காரணம் தெரியாது. நாமும் அதனை ஆராய முடியாது. இதனையே மரபு என்று குறிப்பிடுகிறோம். ‘பெரியோர் எவ்வழிச் செப்பினர், அவ்வழிச் செப்புதல் மரபு’ என்று வரையறை செய்தும் வைத்தனர். இதன் காரணம் ஆராய முடியாத ஒன்றாயினும் இதன் இன்றியமையாமையை யாரும் மறுக்கத் துணிந்ததில்லை. முன்னர்க் கூறிய மனிதன் என்ற சொல்லைக் கேட்டவுட

ன் தமிழன் எவனும் வீட்டையும், பசுமாட்டையும் நினைத்துக் கொள்வதில்லை. மரபின் வன்மை இத்தகையதாகும்”[69] என்று மொழிகின்றார்.

“‘மரபு’ என்னும் சொல் எதையும் குறிக்கலாம். சுருக்கமாகக் கூறினால் இறந்த காலம் தற்காலப் பயன்பாட்டிற்கு வழங்கும் எதுவும் மரபேயாகும். கொஞ்சம் விரிவாகக் கூறினால், மரபு முந்தைய தலைமுறையினர் இன்றைய தலைமுறையினர்க்கு விட்டுச் செல்லும் ஒரு கருத்தாகவோ படைப்பாகவோ நம்பிக்கையாகவோ இருக்கலாம். கருத்தானால், அது முந்தைய தலைமுறையினரால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். படைப்பானால், அது முந்தைய தலைமுறையினராலேயே படைக்கப்பட்டிருக்க வேண்டும். நம்பிக்கையானால், முந்தைய தலைமுறையினரால் முழுவதுமாக நம்பப்பட்டிருக்க வேண்டும். ஒரு சமூகத்தின் நடைமுறைகளால் உருவாகிக் கருத்தும் கற்பனையும் கலந்து கட்டமைக்கப்பட்டுப் பிற்காலத் தலைமுறையினர்க்கு வந்து சேரும் எதுவும் மரபே.”[70] ‘மரபு’ என்பது ஒரு மொழியின், அம்மொழி பேசுவோரின் அடிப்படை இயல்புகள் எனலாம். இவ்வடிப்படை இயல்புகள் பண்டுதொட்டு ஒரு நிலையாய் இயங்கி வருவன. எவ்விடத்தும் எக்காலத்தும் மாறாதன, சிறப்புடையன, அழியாதன”[71] என்று சுட்டுகிறார் சு.இராசாராம்.

ஒ.முத்தையா, “காலங்காலமாக ஒரு குறிப்பிட்ட இனத்தாரால் பின்பற்றப்பட்ட, ஏற்றுக்கொள்ளப்பட்ட நடத்தை முறைகள், ஒழுக்க நியதிகள் மரபு எனப்படும். இதுவே பின்னால் பண்பாடாய்த் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும். தேவையான சூழல்களில் எழுதப்படாத சட்டமாய்த் தன்னை முன்நிறுத்தி தான் சார்ந்த இனத்தை வழிநடத்திச் செல்லும். பண்பாட்டு மரபு, வாழ்வியல் மரபு, வழிபாட்டு மரபு, கலை மரபு என்று தன் விழுதுகளைக் கிளைப் பரப்பி மக்களை, மனித சமூகத்தை வழிநடத்தும். இம்மரபு அங்கிங்கெனாதபடி மக்களின் வாழ்வில் எங்கும் நீக்கமற நிறைந்து காணப்படுகிறது”[72] என்று விளம்புகிறார்.

"இலக்கியங்கள் மரபு வழிபட்ட சொற்களால் ஆனவை. அம்மரபு நிலை திரிதல் அவற்றிற்கு இயல்பு இல்லை என்பது தொல்காப்பியம். தொல்காப்பி யர் இதில் சொல் மரபைக் கூறினாலும் அது சொற்பொருண்மையையும் அடி ப்படையாகக் கொண்டது என்பது 'மரபு நிலை திரியின் பிறிது பிறிதாகும்' எ ன்னும் இலக்கணத்தால் நன்கு புலனாகும். இவற்றால் இலக்கியங்கள் ஒவ்வொ ரு காலகட்டத்திலும் சொற்பொருளையும் கருத்துக்களையும் மரபுக்கு உட்பட் டு வெளிப்படுத்துவது தெளிவாகும்"[73] என மரபிற்குச் சிறப்புச் சேர்க்கிறார் சு. இராசாராம்.

"தொன்றுதொட்டு வழங்கி வருவதும் மாற்றம் ஏற்படாமல் இருப்பதும் மரபு எனப்படும். இக்கொள்கையையொட்டி தமிழ் மொழியிலும் மரபு நிலை மாறாமல் காணப்படும் சூழல் உள்ளது. மொழியிலும் சொற்பொருள் நிலையி ல் அது வழங்கப்பட்டு வரும் சூழலில் மாற்றம் ஏற்படின் பொருள் புலப்பாட் டிலும் பொருள் மயக்கம் ஏற்படக் காரணம் உருவாகும். பொருள் விளங்கா சூ ழலைத் தவிர்க்கும் பொருட்டுத் தமிழ் மொழியில் மரபுநிலை பின்பற்றப் பட் டுள்ளது"[74] என்கிறார் ஜெ.சந்தியா சந்திரசேகரன்.

சு.வேலாயுதம், "சான்றோரும் அறிவரும் கண்ட வழக்குகளே மரபாகும். மர பு என்பது தொன்றுதொற்று வழி வழி வழங்கி வருவதாகும். மரபு மாறாதது. மாற்றினால் பொருள் கேடாக முடியும்"[75] என்று சிறப்பிக்கிறார்.

**மரபு பயின்று வந்துள்ள இடங்களும் பொருண்மையும்**

தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் 'மரபு' எனும் சொல் பல இடங் களில் இடம்பெற்றுள்ளன. இம்மரபிற்குத் தொல்காப்பியத்துள் இயல்பு, இலக்கண ம், பரம்பரை, மரபு, முறைமை, வரலாற்று முறைமை, வழக்குமுறை, வழிமுறை என்றும்; சங்க இலக்கியத்துள் இயல்பு, சுவை, தகுதி, தன்மை, பண்பு (குணம்) , பழைமை, பெருமை, மரபு, முந்தையோர் முறைப்படி, முறை (முறைப்படி),

*முறைமை, மேம்பாடு, வழிபாடு என்கின்ற பொருண்மைகளைச் சுட்டுவதாக உரை யாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர்.*

**தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்**

*எழுத்ததிகாரத்தில் பத்து இடங்களுள் 'மரபு' எனும் சொல் சுட்டப்பட் டுள்ளன. இவற்றுள் நூன்மரபு, மொழிமரபு, தொகைமரபு என மூன்று இயல்க ளின் தலைப்புகளிலேயே இடம்பெற்றுள்ளமை சிறப்பிற்குரியதாகும்.*

*"நூல் மரபு" - இலக்கணம்,*

*"சார்ந்துவரல் மரபின் மூன்றலங்கடையே" (நூ.மரபு.1:4)- இலக்கணம்,*

*"மொழி மரபு" - இலக்கணம்,*

*"தொகை மரபு" - இலக்கணம்,*

*"அன்ன மரபின் மொழிவயி னான" (தொ.மரபு.1:4) - முறைமை,*

*"தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே" (பு.மயங்.60:3)- இலக்கணம்,*

*"கொளத்தகு மரபின் ஆகுஇடன் உடைத்தே"*

*(பு.மயங்.77:4)- முறைமை,*

*"அம்மரபு ஒழுகும் மொழிவயி னான" (குற்.புணரி.12:3)- இலக்கணம்,*

*"இன்பெறல் வேண்டுஞ் சாரியை மரபே" (மேலது, 64:2) - மரபு,*

*"அன்ன மரபின் மொழியிடைத் தோன்றி" (மேலது, 75:3) - மரபு.*

**சொல்லதிகாரம்**

*சொல்லதிகாரத்துள் இருபத்தைந்து (25) இடங்களுள் 'மரபு' இடம் பெ ற்றுள்ளன. 'விளி மரபு' என்று ஓரியலுக்குத் தலைப்பாகக் குறிக்கப்பட்டுள்ளது.*

*"மயங்கல் கூடா தம்மரபு இனவே" (கிளவியாக்.11:3)- இலக்கணம்,*

*"எண்ணங் காலும் அதுவதன் மரபே" (மேலது, 47:1)- இலக்கணம்,*

*"பண்டியன் மருங்கின் மரீஇய மரபே" (வேற்.மயங்.7:2)- இலக்கணம்,*

*"எதிர்மறுத்து மொழியினுந் தத்தம் மரபின்" (மேலது, 24:1)- இலக்கண ம்,*

*"தொல்நெறி மரபின தோன்றல் ஆறே" (மேலது, 27:9)- இலக்கணம்,*

*"ஏனை உருபும் அன்ன மரபின" (மேலது, 28:1) - முறைமை,*

*"அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ" (மேலது, 29:4)- மரபு/இல க்கணம்,*

*"அனைமரபு இனவே யாகுபெயர்க் கிளவி" (மேலது, 31:6)- இலக்கண ம்,*

*"விளி மரபு" - முறையை, இலக்கணம்,*

*"நினையுங் காலைத் தத்தம் மரபின்" (பெயரி.18:3) - மரபு,*

*"அன்ன மரபின் வினைவயின் ஆன" (மேலது, 19:3) - மரபு,*

*"ஏனைப் பெயரே தத்தம் மரபின" (மேலது, 21:5) - இலக்கணம்,*

*"பாலறி மரபின் அம்மூ வீற்று" (வினையி.14:1) - இயல்பு,*

*"அன்ன மரபின் குறிப்பொடு வரூஉம்" (மேலது, 18:2) - மரபு,*

*"அன்ன மரபின் குறிப்பொடு வரூஉம்" (மேலது, 24:2) - மரபு,*

*"அன்ன மரபின் காலங் கண்ணிய" (மேலது, 32:2) - மரபு,*

*"தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே" (மேலது, 49:2)- இலக்க ணம்,*

*"பெயர்க்குரி மரபின் செவ்வெண் இறுதியும்" (இடையி.42:2)- இயல்பு,*

*"தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கி" (உரியி.1:7) - இலக்கணம்/ மு றைமை,*

*"தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே" (மேலது 93:4)- வரலாற்று மு றைமை,*

*"அந்நான் கென்ப பொருணிலை மரபே" (எச்சவி.23:5)- இலக்கணம் / முறைமை,*

*"வாரா மரபின வரக்கூ றுதலும்" (மேலது, 26:1) - இயல்பு,*

*"என்னா மரபின எனக்கூ றுதலும்" (மேலது, 26:2) - இயல்பு,*

*"சிறப்புடை மரபின் அம்முக் காலமும்" (மேலது, 31:2) - இயல்பு,*

“அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே” (மேலது, 55:2)- முறைமை எ னச் சுட்டப்பட்டுள்ளன.

**பொருளதிகாரம்**

தமிழின் மரபினைக் காக்கும் பொருட்டும், அதன் சிறப்பினை விளக்கும் பொருட்டும் பொருளதிகாரம் இயற்றப்பட்டுள்ளது. எம்மொழி இலக்கண நூலும் குறிக்காது; தமிழ்மொழியில் மட்டும் பொருளதிகாரம் அமையப்பெற்றுள்ளது. இச்சிறப்பினால் தமிழரது மரபுக் களஞ்சியமாகப் பொருளதிகாரம் இடம்பெற்றுள்ளமையை அறிய முடிகின்றது. இத்திறத்தால் தொல்காப்பியர் மரபின் தனித்துவத்தை விளக்க ஏனைய இரண்டு அதிகாரங்களைக் காட்டிலும் பொருளதிகாரத்தில் ‘ஐம்பத்து நான்கு’ (54) இடங்களில் ‘மரபு’ குறித்து பதிவு செய்துள்ளார்.

“ஏவல் மரபின் ஏனோரும் உரியர்” (அகத்.26:1) - இலக்கணம்,

“மரபுநிலை திரியா மாட்சிய ஆகி” (மேலது, 48:1)- வரலாற்று முறைமை,

“மனைக்குரி மரபினது கரத்தை அன்றியும்” (புறத்.5:14)- இலக்கணம்,

“சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று” (மேலது, 5:20)- மரபு,

“இருமூன்று மரபின் கல்லொடு புணர” (மேலது, 5:21)- இலக்கணம்,

“அனைநெறி மரபிற்று ஆகும் என்ப” (மேலது, 8:3) - இலக்கணம்,

“ஐவகை மரபின் அரசர் பக்கமும்” (மேலது, 16:2) - மரபு,

“இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்” (மேலது, 16:3) - மரபு,

“பாலறி மரபில் பொருநர் கண்ணும்” (மேலது, 16:7) - மரபு,

“ஒன்றிய மரபின் பின்தேர்க் குரவையும்” (மேலது, 17:6) - மரபு,

“மலர்தலை உலகத்து மரபுநன்கு அறிய” (மேலது, 19:34)- முறைமை,

“நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்” (மேலது, 30:10)- இலக்கணம்,

“சிறப்புடை மரபினவை களவென மொழிப” (களவி.9:5)- முறைமை,

“கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியை” (கற்பி.1:2)- முறைமை,

*"கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே" (மேலது, 1:3) - முறைமை,*

*"தெறற்கரு மரபின் சிறப்பின் கண்ணும்" (மேலது, 9:2) - மரபு,*

*"மரபுடை எதிரும் உளப்படப் பிறவும்" (மேலது, 9:30) - மரபு / முறைமை,*

*"அகம்புகல் மரபின் வாயில்கட்கு உரிய" (மேலது, 11:6)- முறைமை,*

*"காமம் கண்ணிய மரபிடை தெரிய" (பொருளி. 2:2) - முறைமை,*

*"சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇ" (மேலது, 2:6)- முறைமை,*

*"செய்யா மரபில் தொழிற்படுத் தடக்கியும்" (மேலது, 2:7)- முறைமை,*

*"அறத்தியல் மரபிலள் தோழி என்ப" (மேலது, 11:2) - முறைமை,*

*"உண்டன போலக் கூறலும் மரபே" (மேலது, 18:2) - மரபு,*

*"நிலைக்குரி மரபின் இருவீற்றும் உரித்தே" (மேலது, 24:2)- முறைமை,*

*"கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே" (மேலது, 46:2) - முறைமை,*

*"தோன்றா மரபின என்மனார் புலவர்" (மேலது, 50:3)- இலக்கணம் / முறைமை,*

*"நாட்டியல் மரபின் நெஞ்சுகொளின் அல்லது" (மேலது, 51:6)- முறைமை,*

*"விரவியும் வரூஉம் மரபின என்ப" (உவமையி.2:1) - வழிமுறை,*

*"நுதலிய மரபின் உரியவை உரிய" (மேலது, 6:2) - மரபு,*

*"தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே" (மேலது, 17:1)- முறைமை,*

*"மரீஇய மரபின் வழக்கொடு வருமே" (மேலது, 21:2)- வழக்குமுறை,*

*"முன்னை மரபின் கூறும் காலை" (மேலது, 23:2) - மரபு,*

*"மரபே தூக்கே தொடைவகை எனாஅ" (செய்யுளி.1:3)- முறைமை,*

*"நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே" (மேலது, 59:2)- முறைமை,*

*"மரபே தானும்" (மேலது, 76:1) - முறை,*

*"நால்நெறி மரபின தொடைவகை என்ப" (மேலது,84:2)- முறைமை,*

*"பொழிப்பும் ஒரூஉஞ் செந்தொடை மரபும்" (மேலது, 86:1)- இலக்க ணம்,*

*"மெய்பெறு மரபின் தொடைவகை தாமே" (மேலது, 97:1)- இலக்கணம்,*

*"தரவகப் பட்ட மரபின என்ப" (மேலது, 130:2) - மரபு,*

*"தொகைநிலை மரபின் அடியில என்ப" (மேலது, 153:3) - மரபு,*

*"ஆங்கனை மரபின் இயலும் என்ப" (மேலது, 161:5) - மரபு,*

*"பொருள்மரபு இல்லாப் பொய்ம்மொழி யானும்"*

*(மேலது, 166:3)- இயல்பு,*

*"அளவியல் மரபின் அறுவகை யோருங்" (மேலது, 181:3) - மரபு,*

*"தொன்னெறி மரபின் கற்பிற்கு உரியர்" (மேலது, 182:5) - பரம்பரை,*

*"தத்தம் இயலான் மரபொடு முடியின்" (மேலது, 201:3)- இலக்கணம் / முறைமை,*

*"மரபு இயல்" - இலக்கணம்,*

*"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்" (மரபி.1:1) - இலக்கணம்,*

*"சொல்லிய மரபின் இளமை தானே" (மேலது, 26:1)- இலக்கணம்,*

*"மன்பெறு மரபின் ஏனோர்க் குரிய" (மேலது, 84:3) - மரபு,*

*"மரபுநிலை திரிதல் செய்யுட்கு இல்லை" (மேலது, 92:1)- முறைமை,*

*"மரபு வழிப்பட்ட சொல்லி னான" (மேலது, 92:2) - மரபு,*

*"மரபுநிலை திரியின் பிறிது பிறிதாகும்" (மேலது, 93:1) - இலக்கணம்,*

*"மரபுநிலை திரியா மாட்சிய வாகி" (மேலது, 95:1) - இலக்கணம்,*

*"அதர்ப்பட யாத்தலொடு அனைமரபு இனவே" (மேலது, 99:2)- இலக் கணம்,*

*இவ்வாறாக, தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் பிறப்பியல், புணரியல், உருபியல், உயிர்மயங்கியல் ஆகிய நான்கு இயல்களை விடுத்து ஏனைய ஐந்து இயல்களுள் பத்து (10) இடங்களிலும், சொல்லதிகாரத்தில் வேற்றுமையியலை விடுத்து ஏனைய இயல்களில் இருபத்தைந்து (25) இடங்களுள்ளும், பொருளதி*

*காரத்தில் மெய்ப்பாட்டியல் நீங்கலாக ஏனைய இயல்களுள் ஐம்பத்தினான்கு (5 4) இடங்களுமாக மொத்தம் எண்பத்தொன்பது (89) இடங்களுள் மரபினைக் குறித்தள்ளார்.*

**சங்க இலக்கியம்**

*தொல்காப்பியத்தில் கூறப்படுகின்ற மரபுகள் சங்க இலக்கியங்களிலும் காணக் கிடை க்கின்றன. சங்க இலக்கியங்கள் பெரும்பாலும் தொல்காப்பிய மரபிலேயே அ மையப் பெற்றுள்ளன. சங்க நூற்களில் தொண்ணூற்றியிரண்டு (92) இடங்களு ள் 'மரபு' என்னும் சொல் குறிக்கப்பட்டுள்ளமை காணலாகின்றது. எட்டுத்தெ ாகை நூற்கள் அனைத்தும் 'மரபு' குறித்துச் சுட்டியுள்ளன. பத்துப்பாட்டுள் பெ ாருநராற்றுப்படை, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை நீங்கலாக ஏனைய அ னைத்தும் 'மரபு' என்னும் சொல்லினை எடுத்தாண்டுள்ளன.*

**குறுந்தொகை**

*"மணிஅணி பெருந்தார் மரபில் பூட்டி" (182:2) - முறைமை,*
*"தெறித்துநடை மரபின்தன் மறிக்குநிழல் ஆகி" (213:5) - இயல்பு,*
*"உறன்முறை மரபின் கூற்றத்து" (267:7) - முறைமை.*

**நற்றிணை**

*"பொய்யா மரபில் பிணவுநினைந்து இரங்கும்" (103:8) - தன்மை,*
*"கைதொழு மரபின் எழுமீன் போலப்" (231:2) - தகுதி,*
*"உருகெழு மரபிற் குறிஞ்சி பாடி" (255:2) - தன்மை,*
*"அழியா மரபின்நம் மூதூர் நன்றே" (311:5) - இயல்பு,*
*"பிரிந்துறை மரபின் பொருள்படைத் தோரே" (337:10) - தகுதி.*

**ஐங்குறுநூறு**

*"பொய்யா மரபின் ஊர்முது வேலன்" (245:1) - முறைமை,*
*"அன்புடை மரபினின் கிளையோடு ஆர" (391:2) - முறைமை.*

**பதிற்றுப்பத்து**

"பேரிசை மரபின் ஆரியர் வணக்கி" (2 ஆம் பத்து பதிகம்.7)- பெருமை,

"உருகெழு மரபின் கடவுள் பேணியர்" (21:5) - முறைமை,

"நெய்தல் மரபின் நிரைகள் செறுவின்" (27:10) - முறைமை,

"அருந்திறல் மரபின் கடவுள் பேணியர்" (30:34) - முறைமை,

"எறும்பு மூசா விறும்பூது மரபின்" (30:38) - முறைமை,

"மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇ" (3 ஆம் பத்து பதிகம்.4)- முறைமை,

"பணியா மரபின் உழிஞை பாட" (46:6) - முறைமை,

"பொழுதுகொள் மரபின் மென்பிணி அவிழ" (50:21) - முறைமை,

"கடன்அறி மரபின் கைவல் பாண" (67:3) - முறைமை,

"விசும்பாடு மரபின் பருந்துஊறு அளப்ப" (74:15) - முறைமை/இயல்பு,

"அணங்குடை மரபின் கட்டில்மேல் இருந்து" (79:14) - முறைமை,

"மடை எதிர்கொள்ளா அஞ்சுவரு மரபின்" (79:17) - முறைமை,

"உருகெழு மரபின் அயிரை பரைஇ" (88:12) - முறைமை / இயல்பு,

"உருகெழு மரபின் அயிரை பரவியும்" (90:19) - முறைமை / இயல்பு,

"மந்திர மரபின் தெய்வம் பேணி" (9 ஆம் பத்து பதிகம்.10)- முறைமை,

"அருந்திறல் மரபின் பெருஞ்சதுக்கு அமர்ந்த" (மேலது, 12)- இயல்பு,

"ஆய்ந்த மரபின் சாந்தி வேட்டு" (மேலது, 14)- இயல்பு.

**பரிபாடல்**

"அன்ன மரபின் அனையோய் நின்னை" (1:34) - இயல்பு,

"............... மரபிற்று ஆக" (2:2) - இயல்பு,

"மூவா மரபும் ஓவா கொன்மையும்" (2:70) - முறைமை,

"சாவா மரபின் அமரர்க்காச் சென்றநின்" (2:71) - முறைமை,

*"………. மரபினோய் நின் அடி" (2:72) - முறைமை,*

*"முன்னை மரபின் முதுமொழி முதல்வ" (3:47) - முறைமை,*

*"வனப்பு வரம்பு அறியா மரபினோயே" (3:50) - முறைமை,*

*"வகையும் உண்டோ நின்மரபு அறிவோர்க்கே" (3:58) - இயல்பு,*

*"காணா மரப நீயா நினைவ" (3:84) - முறைமை,*

*"நயத்தகு மரபின் வியத்தகு குமர" (9:82) - பண்பு (குணம்),*

*"தொன்முதிர் மரபின் நின்புகழினும் பலவே" (14:32) - பழைமை/மரபு,*

*"அருமுனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சிமன்" (19:3) - தன்மை,*

*"ஒருநிலையும் ஆற்ற இயையா அருமரபின்" (பரி.திரட்டு.2:95)- தன்மை.*

**கலித்தொகை**

*"குரவை தழீஇயாம் மரபுளி பாடி" (103:75) - முறைமை,*

*"அரும்பொருள் மரபின்மால் யாழ்கோளாக் கிடந்தான் போல்" (123:4) - முறைமை.*

**அகநானூறு**

*"யாவரும் அறியாத் தொன்முறை மரபின்" (0:13) - பழைமை,*

*"தெறலரும் மரபின் கடவுள் பேணி" (13:3) - வழிபாடு,*

*"ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல" (22:15) - இயல்பு,*

*"ஆறே அருமரபு இனவே யாறே" (72:7) - தன்மை / இயல்பு,*

*"தொன்றியல் மரபின் மன்றல் அயர" (112:16) - முறை (முறைப்படி)*

*"கைதொழு மரபின்முன் பரித்திடூஉப் பழிச்சிய" (115:9) - முறைமை,*

*"கைதொழு மரபின் கடவுள் சான்ற" (125:14) - தன்மை,*

*"ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்" (142:10) - தன்மை,*

*"அணங்கரு மரபின் பேஎய் போல" (265:14) - இயல்பு,*

*"அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப" (372:1) - முறையை,*

*"அஞ்சுவரு மரபின் வெஞ்சுரம் இறந்தோர்" (375:16) - இயல்பு.*

**புறநானூறு**

*"ஈண்டுசெலல் மரபின் தன்னியல் வழாஅ" (25:2) - முறைமை,*

*"சிறப்புரை மரபின் பொருளும் இன்பமும்" (31:1) - முறைமை,*

*"உறுமுறை மரபின் புறம்நின்று உய்க்கும்" (98:16) - இயல்பு,*

*"அரும்பெறல் மரபின் கரும்புஇவண் தந்தும்" (99:2) - முறைமை,*

*"தொன்னிலை மரபின்நின் முன்னோர் போல" (99:4)- முறைமை,*

*"தெறல்அரு மரபின்நின் கிளையோடும் பொலிய" (126:9)- தன்மை,*

*"வரையா மரபின் மாரி போல" (142:3) - மரபு,*

*"அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலே" (211:1) - முறைமை, இயல்பு,*

*"இசை மரபுஆக நட்புக் கந்தாக" (217:5) - மேம்பாடு,*

*"விரகறி யாளர் மரபின் சூட்ட" (261:14) - முறைமை,*

*"எஞ்சா மரபின் வஞ்சி பாட" (378:9) - முறைமை,*

*"விரற்செறி மரபின செவித்தொடக் குநரும்" (378:14) - முறைமை,*

*"செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்" (378:15) - முறைமை,*

*"அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும்" (378:16) - முறைமை,*

*"மிடற்றமை மரபின அரைக்குயாக் குநரும்" (378:17) - முறைமை,*

*"மகிழ்தரல் மரபின் மட்டே அன்றியும்" (390:16) - முறைமை,*

*"அமிழ்தன மரபின் ஊன்றுவை அடிசில்" (390:17) - சுவை,*

*"அணங்குடை மரபின் இருங்களந் தோறும்" (392:8) - முறைமை,*

*"இயமி சையா மரபு ஏத்தி" (400:8) - முறை.*

**திருமுருகாற்றுப்படை**

*"மந்திர விதியின் மரபுளி வழாஅ" (95) - முறைமை,*

*"விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது" (107) - முறைமை,*

*"அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக" (269) - முறைமை.*

**பெரும்பாணாற்றுப்படை**

*"திரைதரு மரபின் உரவோன் உம்பல்" (31) - முறைமை,*

*"பொய்யா மரபின் பூமலி பெருந்துறை" (389) - முறைமை,*

*"கடன்அறி மரபின் கைதொழூஉப் பழிச்சி" (463) - முந்தையோர் முறைப்படி,*

*"விரும்புடை மரபின் கரப்புடை அடிசில்" (476) - முறைமை.*

**சிறுபாணாற்றுப்படை**

*"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்" (66) - முறைமை,*

*"பொருபுனல் தரூஉம் போக்கரு மரபின்" (118) - முறைமை,*

*"தாங்கரு மரபின் தன்னும் தந்தை" (127) - முறைமை,*

*"நூல்நெறி மரபின் பண்ணி ஆனாது" (230) - முறைமை.*

**மதுரைக்காஞ்சி**

*"மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்" (459) - முறைமை,*

*"இயல்நெறி மரபின் நின்வாய்மொழி கேட்ப" (774) - முறைமை.*

**குறிஞ்சிப்பாட்டு**

*"கிளிகடி மரபின் ஊழூழ் வாங்கி" (44) - முறைமை.*

**பட்டினப்பாலை**

*"பொய்யா மரபின் பூமலி பெருந்துறை" (105) - முறைமை.*

**மலைபடுகடாம்**

*"உயிர்செகு மரபின் கூற்றத்து அன்ன" (209) - முறை,*

*"பராவரு மரபின் கடவுள் காணின்" (230) - முறைமை,*

*"தொன்முறை மரபினிர் ஆகி பல்மாண்" (355) - முறைமை,*

"தொன்றொழுகு மரபின்நும் மருப்பித்துத் துனைமின்" *(391)*- முறைமை

,

"தொன்றொழுகு மரபின் தம்மியல்பு வழாஅது"

*(537)* - முறைமை,

என்பனவாக, நற்றிணையில் ஐந்து இடங்களிலும், குறுந்தொகையில் 'மூன்று' இடங்களிலும், ஐங்குறுநூற்றில் 'இரண்டு இடங்களிலும், பதிற்றுப்பத்தில் 'பதி னேழு' இடங்களிலும், பரிபாடலில் 'பதிமூன்று' இடங்களிலும், கலித்தொகை யில் 'இரண்டு' இடங்களிலும், அகநானூற்றில் 'பதினொரு' இடங்களிலும், புறநா னூற்றில் 'பத்தொன்பது' இடங்களிலும், திருமுருகாற்றுப்படையில் 'மூன்று' இ டங்களிலும், பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படையில் 'நான்கு' இடங்களிலும், மதுரைக்காஞ்சியில் 'இரண்டு' இடங்களிலும், குறிஞ்சிப்பாட்டு, ப ட்டினப்பாலையில் 'ஓர்' இடத்திலும், மலைபடுகடாமில் 'ஐந்து' இடங்களிலுமாக 'தொ ண்ணூற்றியிரண்டு' *(92)* இடங்களில் மரபினைக் காணமுடிகின்றது.

தொல்காப்பியத்துள் மரபிடை, மரபிலள், மரபிற்று, மரபின, மரபினது, மரபினவே, மரபினவை, மரபினோர், மரபு, மரபுடை, மரபே என்றும், சங்க இ லக்கியங்களுள் மரப, மரபிற்று, மரபின, மரபினிர், மரபினோய், மரபு, மரபுளி என்பனவாகவும் சுட்டப்பட்டுள்ளன. மேற்சுட்டியவைகளுக்கு இயல்பு, இல க்கணம், சுவை, தகுதி, தன்மை, பண்பு (குணம்), பரம்பரை, பழைமை, பெருமை ம, மரபு, முந்தையோர் முறைப்படி, முறை (முறைப்படி), முறைமை, மேம்பா டு, வரலாற்று முறைமை, வழக்கு முறை, வழிபாடு, வழிமுறை என்னும் பொரு ள் குறித்தனவாகச் சுட்டப்பெறுகின்றன.

'மரபு' எனும் சொல் பெரும்பான்மையாகத் தொல்காப்பியத்துள் இலக் கணத்தைக் குறித்தனவாகவும், சங்க இலக்கியங்களுள் முறைமையைக் குறித்த தாகவும் இடம்பெற்றுள்ளது.

**மரபு என்றால் என்ன?**

மரபு என்பது முன்னோர்கள் வழங்கிய வழக்கு முறைமைகளே ; காலப் போக்கில் மரபாயிற்று. "காட்சிப் பொருளான அல்லது கருத்துப் பொருளான ஒன்றை உணர்த்துவதற்கு உருவாக்கப்படுவது சொல். அச்சொல், மக்களிடையே ய வழங்கப்பட்டுச் சான்றோரான் ஏற்றுக்கொள்ளப்படும் போது இலக்கிய வழக்கில் இடம்பெறுகின்றது. ஒரு பொருளை உணர்த்த ஒரு முறை வழங்கப்படும் - ஏற்றுக்கொள்ளப்படும் ஒரு சொல் நிலையானதாக இருந்தால்தான் குழப்பங்கள் ஏற்படா. ஒரு பொருளை உணர்த்த, காலந்தோறும் சொல் மாறிக் கொண்டே இருக்குமானால், அதனால் பெருங்குழப்பங்கள் ஏற்படும்; அம்மாற்றத்தினால் ஏற்படும் விளைவும் பெரும்பயன் தரத்தக்கதாக அமையும் என்றும் கொள்ள முடியாது"[76] என்று மரபின் இன்றியமையாமையாகக் குறிப்பிடுகிறார் கு.மோகனராசு. இம்மரபினைக் காலங்காலமாகக் காத்தும் ; வழக்கில் வழங்கி வருவதும்; பின் வழித் தோன்றல்களின் கடமையும் போற்றுதல்களுமாகும். இம்மரபினைத் தொல்காப்பியர் அவருக்கு முன்னையோர் வழிநின்று மரபைக் காத்து நிற்கிறார்.

**மரபினைக் காத்தல்**

பன்னெடுங் காலமாகக் குறிக்கப்பட்டு வந்து கையாளுகின்ற பொருண்மைகள், வழக்காறுகள், சொற்பெயர்கள், குறிப்புநிலைகள் மரபாக வழங்கப்பட்டு வருகின்றன. இவற்றைக் காலங்காலமாகப் பின்பற்றி, காத்துவருகின்ற பாங்கு மரபாகக் கருதப்படுகிறது. செவ்வியல் இலக்கியப் பண்புகளுள் மரபைக் காப்பது இன்றியமையாத ஒன்றாகும். ஆகவே, முன்னோர்கள் குறிப்பிட்ட பொருண்மைகளையும், சொற்பொருள்களையும் மாற்றாதும் அழிக்காதும் காத்துள்ளமையைச் சில நூற்பாக்கள் வழி நின்று அறியலாகின்றது.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"[77]

"வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட்டு ஆகலான"[78]

எனத் தொல்காப்பியரும்,

"எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்

செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே”[79]

என்று நன்னூலாரும்,

“முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே

பின்னைப் புதுமைக்கும் போர்த்துமப் பெற்றியனே”

எனும் மாணிக்கவாசகப் பெருமானின் அடிகளும் மரபினைக் காக்கும் சிறப்பி னுக்கு அணிசெய்கின்றன.

**மரபியல் அவசியமா?**

மரபியல் இன்றியமையாதது என்பதனைப் பின்வரும் கூற்றுகள் மெய்ப் பிக்கும். முன்னோர் வழங்கிய சொல் முறைமைகளை முறை பிறழாது சுட்டியு ரைக்கின்ற பொழுது அதன் இயல்பு, தனித்துவம் புலப்படுவதில்லை. சுட்டிய முறைமைகளை மாற்றும் பொழுதும் ; புதுமுறைமைகளையும் இலக்கணங்களை ளயும் உட்புகுத்த முயலும் போதும் மரபுப் பெயர்களின் தனித்துவச் சிறப்பினை ன அறியமுடியும். தற்காலத்தில் கோழிக்குஞ்சு என்று கூறுவது மரபாகவுள்ளது . கோழிக்குட்டி என்று சுட்டுவது மரபாகாது. கோழி புணர்ச்சியுற்று ; கருவா கி ; முட்டையிட்டு ; அடைகாத்து தோற்றுவிப்பது குஞ்சாகும். ஆனால் குட் டி என்பது கருவுற்று ஈனுதலால் குட்டியாகின்றது என்பதைக் காலங்காலமாக குறித்து வருதல் தமிழரின் மரபாம். கோழி முதலிய பறவையினம் முட்டையி ட்டு அடைகாத்துப் பொறிப்பதால் குஞ்சாகின்றது. ஆ, யானை முதலிய விலங் கினங்கள் கருவுற்று ஈனுதல் தன்மையைப் பெற்றுள்ளமையால் குட்டி முதலிய முறைமைப் பெயர்களைக் குறிப்பதாகவுள்ளது. இச்சிறப்பினை விளங்காதும், மாற்றியும், திரித்தும் சுட்டுகின்ற போது பிழையாகவும் பொருள் விளங்காதும் ஆகிவிடும் என்பது தெளிவாகும். இவ்வாறு தொல்காப்பியர் தன் காலத்திற்கு முன்பும் தம் காலத்திலும் இருந்த மரபுப் பெயர்கள் முதலியன பிற்கால வளர்ச் சியில் மாற்றம் நிகழாது காக்கவே மரபியலைப் படைத்துள்ளார். இம்மரபியல் தொல்காப்பியத்தின் புறனடையாகவும் அமையப் பெற்றுள்ளது. தொல்காப் பியத்துள் தாம் கூறவிளைந்தவற்றைக் குறித்து விளக்கிவிட்டு, அவற்றுள் மரபு

என்பதை ஏறுமுகத்தானாக (10→25→54) மூன்று அதிகாரங்களில் குறித்துள்ளார். இத்துடன், "ஒரு இலக்கியம் செவ்விலக்கியமாக, செம்மொழி இலக்கியமாகத் திகழ வேண்டுமாயின் அது, தான் எழுந்த காலச் சமுதாயத்தைக் காட்ட வேண்டும் ; இயல்பானதாக அதிகமான உயர்வு நவிற்சிக்கு, கற்பனைக்கு இடங்கொடாமல் அமைய வேண்டும் ; கூறும் கருத்துக்கள் உலகப் பொதுமை வாய்ந்ததாக வேண்டும் ; காலத்தை வென்று என்றும் வாழும் இலக்கியமாக இருத்தல் வேண்டும் என்பன போன்ற விதிமுறைகளுக்குக் கட்டுப்பட வேண்டியுள்ளது. இவற்றைப் பின்பற்றுவதற்கு அதனுள் இடம்பெறும் சொற்கள், மாந்தர் இயல்புகள், பிழைநீங்கிப் புதுமைப் பொலிவுடன் திகழ்தல் தேவையாகின்றன. இக்கூறுகளைச் சிறப்பித்தே மரபியல் எழுந்துள்ளமையும், செம்மாந்த படைப்பாக, மனித வாழ்வோடு நெருங்கிய தொடர்புடைய இயற்கையாக இலக்கியம் அமைதலே தொல்காப்பியரது எண்ணமாக அமைகின்றமையும் மரபியலின் தேவையை இயம்புகின்றன. இலக்கியத்துள் மரபு போற்றப்படலை வலியுறுத்தவும் மரபு சார்ந்த கூறுகளைத் தெளிவுபடுத்தவும், அறிவுறுத்தவும் 'மரபியல்' தேவையாயிற்று"[80] என்கிறார் ச.சிவகாமி.

**மரபியலின் பெருமை**

'மரபியல்' தமிழில் தோன்றிய பிற இலக்கண நூல்களில் இடம்பெறாத பொழுதும் காலத்தாற் முற்பட்ட தொல்காப்பியத்தில் தனியொரு இயலாக வகுக்கப் பெற்று '112' நூற்பாக்களுடன் தனிப்பெருமையைக் கொண்டிலங்குகின்றது.

**மரபியலின் பயன்**

மரபியலின் பயன்பாட்டினை விளக்குதற்குப் பின்வரும் நூற்பாக்கள் தக்க சான்றுகளாகும். அவை,

"மரபுநிலை திரிதல் செய்யுட்கு இல்லை
மரபு வழிபட்ட சொல்லி னான,"[81]

"மரபு நிலை திரியின் பிறிதுபிறிது ஆகும்,"[82]

"மரபுநிலை திரியா மாட்சிய ஆகி"[83]

என்பனவாகும். இந்நூற்பாக்கள் இலக்கியத்தில் 'மரபானது' படைப்பாக்கம் பெறுவதன் பயன்பாடுகளைச் சுட்டி நிற்கின்றன.

படைப்பாளன் தான் படைக்கும் படைப்பினுள் மரபுச் சொற்களை மாற்றிக் கூறும் நிலையில் நுகர்வோருக்குத் தான் கூற விளைந்த கருத்துச் சென்று சேர்வதில்லை. இந்நோக்கத்தைக் கருதி மேற்சுட்டிய நூற்பாக்களின் வழி மரபியலின் பயன்களாகத் தொல்காப்பியர் எடுத்துரைத்துள்ளார்.

இந்நூற்பாக்கள் மரபியலின், நூலின் முழுமையான புறனடையாக அமைந்துள்ளன.

**மரபியலின் கட்டமைவுகள்**

தொல்காப்பியத்தின் கடை இயலாக அமையப் பெற்றுள்ளது மரபியல். 'மாற்றருஞ்சிறப்பின் மரபியல் கிளப்பின்' (மரபி.1:1) என்று தொடங்கி நூலின் முப்பத்திரண்டு உத்திகளுடன் (மரபி.112) நிறைவு பெற்றுள்ளது. இவ்வியலுள் அமையப் பெற்றுள்ள நூற்பாக்களை இளம்பூரணர் நூற்றிப் பன்னிரண்டாகவும் (112) நூற்றிப்பத்தாகப் பேராசிரியரும் குறிப்பிடுகின்றனர். அவற்றுள் இளமை, ஆண், பெண்பாற்பெயர்கள்; இளமைப்பெயர் மரபுகள் குறித்த உயிரினங்கள்- முடிபு ; உயிரின வேறுபாடு - முடிபு ; ஆண் - பெண்பாற்பெயர் மரபுகள் குறிக்கும் உயிரினங்கள் - சிறப்பு வழக்காறுகள் ; மக்களுக்குரிய சிறப்பு வழக்குகள் ; தொழில் மரபுகள் ; புல் - மரவேறுபாடு, உறுப்பு, பொதுப்பெயர்கள் ; உலகப் பொதுமரபு ; சொல்மரபு மாறாதது, மாற்ற முடியாதது, மாற்றக்கூடாதது, மரபின் இயல்பு ; நூலுக்குரிய மரபுகள் என கட்டமைக்கப்பட்டுள்ளன.

**மாற்றருஞ் சிறப்பின் மரபியல் - உரையாசிரியர்கள் தரும் விளக்கம்**

தொல்காப்பிய உரையாசிரியர்களில் முதன்மையராகக் கருதப்படும் இளம்பூரணர், "இவ்வோத்து இவ்வதிகாரத்துக் கூறப்பட்ட பொருட்கு மரபு உணர்த்தினமையான் மரபியல் என்னும் பெயர்த்து"[84] என்று விளக்கம் தருகின்றார். 'இவ்வோத்து இவ்வதிகாரத்து' என்று சுட்டப்படுவதால் 'இயல்' என்று கருதாது 'அதிகாரமாகக் கருதுவது இளம்பூரணரின் சிறப்பாகும்.

பேராசிரியர், "இவ்வோத்து என்ன பெயர்த் தோவெனின் மரபியலென்னும் பெயர்த்து. இதனானே ஒத்து நுதலியவும் மரபு உணர்த்துதலென்பது பெற்றாம் (விலக்கருஞ்சிறப்பிற்றாகிய மரபிலக்கணங் கூறின்)"[85] என்று உரை பகர்கின்றார்.

"While expounding the established usage of great excellence"[86] என்று இலக்குவனார் குறிப்பிட்டதைச் சுட்டுகிறார் கே.பகவதி.

"விலக்குதற்கு அரிய சிறப்பினையுடைய மரபுச் சொற்களின் இலக்கணங்களைக் கூறுமிடத்து"[87] என்பார் க.வெள்ளைவாரணன்.

"மாற்றிச் சொல்லுதற்கு அரிய"[88] என்பர் தமிழண்ணல்.

"The tradition which is unalterable,"[89]

"மாற்றுதற்கு அருமையான சிறப்பினையுடைய முறைமையைக் கூறும் பகுதி"[90] என்கிறார் ச.வே.சுப்பிரமணியன்.

"பிறிதொன்றனொடு ஒப்பிட்டுக் கூறுதற்கரிய சிறப்பினையுடைய மரபிலக்கணம் பற்றிக் கிளந்து கூறப்புகின்"[91] என்று ச.பாலசுந்தரம் குறிப்பிடுகிறார்.

"மாற்றருஞ் சிறப்பின் மரபு என்ற தொடர்க்கு மரபு என்பது மாற்றமுடியாததொன்று என்று பொருள் கொள்ளாது மரபு என்பது மொழியின் நிலைபே

றுடைய சிறப்பியல்பு என்ற பொருளைக் கொள்வதே பொருந்தும்"[92] என்கின்ற ார் மு.சதாசிவம்.

சொ.சிங்காரவேலன், "மரபுகளைத் தொகுத்து உரைக்கும் இயல், மாற்று தற்கு அரிய சிறப்பு உடைய மரபு இலக்கணத்தை உரைக்கத் தொடங்கினால்" [93] என்றுரைக்கின்றார்.

"'மாற்றமுஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்' என்று மரபியலின் முதல் நூற்பாவே தொல்காப்பியரின் 'மரபு' பற்றிய விளக்கமாக அமைகிறது. எளிதில் மாற்றுதற்கு இயலாத சிறப்பே மரபின் அடிப்படைப் பண்பாகிறது"[94] என்கிறார் ச.சிவகாமி.

"உலக வழக்கினும், செய்யுள் வழக்கினும் வழங்கும் சொற்பொருள் மரபும் முறைமையும் சுட்டுவது மரபியல் எனப்படும்"[95] என்பார் கா.சுப்பிரமணியபிள்ளை.

**இளமைப்பெயர்கள்**

உலக வழக்கிற்கும் இலக்கிய வழக்கிற்கும் பொதுவானவையாகச் சுட்டப்படும் பெயர் மரபுகளுள் முதலாவதாக இடம்பெற்றுள்ளது இளமைப்பெயர்களாகும். அவை,

"பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியும் என்று
ஒன்பதும் குழவியொடு இளமைப் பெயரே" (மரபி.1)

என்னும் நூற்பாவில் பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி ஆகிய ஒன்பதும் இருதிணைகளுக்கும் சுட்டப்படுகின்ற இளமைப்பெயர்களாகக் குறிப்பிடுவர் தொல்காப்பியர். இவற்றுடன், "'ஒன்பதுங் குழவியொடு' என மயங்கக் கூறியவதனாற் போத்தென்பதும் இளமைப்பெயரெனவும்

பிறவும் வருவன உளவாயினுங் கொள்ளப்படும் என்றும், இளமைப் பற்றி வரும் மரபு கூறினான் மூப்புப் பற்றி வரும் மரபு கூறானோவெனின், அது வரையறையின்மையிற் கூறானென்பது”[96] என்று பேராசிரியர் குறிப்பிடுகின்றார். ‘போத்து’ என்பது மேற்தொகுத்தவற்றுள் இடம்பெறவில்லை. வகுத்துரைக்கின்ற நிலையில் போத்து என்பதனையும் இளமைப்பெயராகத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். முதுமைக்கு வரையறையில்லை என்பதால் பெயர் மரபுகளுள் இடம்பெறவில்லை.

**ஆண்பாற்பெயர்கள்**

பெயர்மரபு சுட்டும் தொல்காப்பியர் எருது, ஏற்றை, ஒருத்தல், களிறு, சேச, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் என்ற பதினைந்தும் ஆண்பாற்பெயர்கள் என்பர். இதனை,

“ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப” (மரபி.2)

எனும் நூற்பா விளக்கும். இவற்றுள் பிறவும் என்றதனால் ஆணென்றும் விடையென்றும் குறிக்கின்றனர் இளம்பூரணர், பேராசிரியர். இதில் “ஏறும் ஏற்றையும் என்பதே தொல்காப்பியனார் கூறிய மூலபாடம். இந்நுட்பம் இவ்வியல் 40, 42 ஆம் நூற்பாக்களால் நன்கு துணியப்படும். ‘எருதும் ஏற்றையும்’ என இளம்பூரணர் உரைப் பதிப்பிலுள்ள பாடம் பிற்காலத்தவரால் திரிக்கப்பட்டதாகும்”[97] என்கின்றார் க.வெள்ளைவாரணனார்.

“‘யாத்த வாண்பாற் பெயர்’ என்றதனால், போத்தென்பது இளமைப்பெயராமாயினும் இங்ஙனம் ஆண்பாற்குச் சிறந்து வருமாறு போலச் சிறவாது அதற்கென்பது கொள்க”[98] என்றுரை பகர்கின்றார் பேராசிரியர். இவர் இளமைப்பெ

பயருள் 'போத்து' என்பதைக் குறிப்பிட்டு, ஆண்பாற்பெயருள் சிறந்து வருவதாகக் கூறுவதால் இளமைப்பெயருக்குரியனவற்றுள் சிறுபான்மைக்கு உரியதாக அமைகின்றமையை அறியமுடிகின்றது.

**பெண்பாற்பெயர்கள்**

பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி என்ற பதின்மூன்றும் பெண்பாற் பெயர்களாகும். இதனைத் தொல்காப்பியர்,

"பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே" (மரபி.3)

என்பர். இந்நூற்பாவிற்கு உரை வரைந்த இளம்பூரணரும் பேராசிரியரும் பெண்பாற்பெயர்கள் பதின்மூன்று என முடிபு கூறினும், பேராசிரியர், "'அந்தஞ் சான்ற' என்பது முடிபமைந்தன இவையென்றவாறு ; எனவே, ஆ வென்பது பெண்பெயராதலும் பெண் ஆணென்பன ஒருசார் புல்லிற்கு நேர்தலுங் கொள்க ; என்னை? ஆனேறென்பது, ஆவினுள் ஏறெனப்படுதலின். ஆனென்பது ஆண்பாற்கும் பொதுவாகலின் அது முடிபமையாதெனப்பட்டது ; அது மேற்காட்டுதும். ஆண்மை பெண்மை புல்லிற்கு இன்மையின் அவையும் முடிபுடையன ஆகாவாயினுங் காயாப் பனையை ஆண்பனையென்றும், காய்ப்பனவற்றைப் பெண்பனையென்றும் வழங்குப. இவையெல்லாம் வழக்காகலிற் செய்யுள் வருமாறு அறிந்து கொள்ளப்படும். இவற்றுக்கு மேல் வரையறை கூறும் வழி (606-22) உதாரணங்காட்டுதும்"[99] எனச் சுட்டியுரைக்கின்றார்.

**இளமைப்பெயர்கள் பெறும் உயிரினங்கள்**

'பார்ப்பு,' 'பிள்ளை' என்பனவற்றைப் பறவையினங்களின் இளமைப்பெ யராகவும்; தவழ்பவற்றின் இளமைப்பெயர்களாகவும் தொல்காப்பியர் குறிப்பி டுகின்றார். இதனை,

"அவற்றுள்
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றின் இளமை" (மரபி.4)

"தவழ்பவை தாமும் அவற்றோர் அன்ன" (மரபி.5)

எனும் நூற்பாக்கள் எடுத்துரைக்கின்றன.

**குட்டி, பறழ்**

மூங்கா (கீரி), வெருகு (பூனை), எலி, மூவரி அணில் ஆகிய நான்கும் குட்டிெ யன்றும் பறழென்றும் குறிக்கப்படுபவைகளாகும். இவற்றைப் பின்வரும் நூற்ப ராக்கள் சுட்டியுரைக்கின்றன.

"மூங்கா வெருகு எலிமூவரி அணிலொடு
ஆங்குஅவை நான்கும் குட்டிக்கு உரிய" (மரபி.6)

"பறழ் எனப்படினும் உறழ்ஆண்டு இல்லை" (மரபி.7).

**குருளை, குட்டி, பறழ், பிள்ளை**

"நாயே பன்றி புலி முயல் நான்கும்
ஆயுங் காலைக் குருளை என்ப" (மரபி.8),

"நரியும் அவற்றே நாடினர் கொளினே" (மரபி.9),

"குட்டியும் பறழும் கூற்று அவண் வரையார்" (மரபி.10),

"பிள்ளைப் பெயரும் பிழைப்பு ஆண்டு இல்லை
கொள்ளும் காலை நாய் அலங்கடையே" (மரபி.11)

மேற்சுட்டியவற்றுள் நாய், பன்றி, புலி, முயல் , நரி ஆகிய ஐந்தும் 'குரு ளை,' 'குட்டி,' 'பறழ்' எனும் பெயர்களைப் பெறுவனவாகும். மேற்குறித்த உயி ரினங்களுள் நாய் தவிர்த்த ஏனைய அனைத்தும் (பன்றி, புலி, முயல், நரி) 'பிள் ளை' என்ற பெயராலும் அழைக்கப்படும்.

**மறி**

*"யாடும் குதிரையும் நவ்வியும் உழையும்*

*ஓடும் புல்வாய் உளப்பட மறியே" (மரபி.12)*

*எனும் நூற்பா வழித் தொல்காப்பியர், 'மறி' என்பதை ஆடு, குதிரை, நவ்வி, உழை, புல்வாய் என்பனவற்றின் இளமைப்பெயராகச் சுட்டியுள்ளார்.*

**குட்டி, மகவு, பிள்ளை, பறழ், பார்ப்பு**

*மரக்கிளைகளில் வாழக்கூடிய குரங்கிற்கு 'குட்டி' என்ற இளமைப் பெயருடன் 'மகவு,' 'பிள்ளை,' 'பறழ்,' 'பார்ப்பு' எனும் பெயர்களுமுண்டு என்பர் தொல்காப்பியர். இதனை,*

*"கோடு வாழ் குரங்கும் குட்டி கூறுப" (மரபி.13),*

*"மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்*

*அவையும் அன்ன அப்பால் ஆன" (மரபி.14)*

*எனும் நூற்பாக்கள் விளக்கும்.*

**கன்று**

*"யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்*

*மானொடு ஐந்தும் கன்று எனற்கு உரிய" (மரபி.15),*

*"எருமையும் மரையும் வரையார் ஆண்டே" (மரபி.16),*

*"கவரியும் கராமும் நிகர் அவற்றுள்ளே" (மரபி.17),*

*"ஒட்டகம் அவற்றொடு ஒருவழி நிலையும்" (மரபி.18)*

*எனும் நூற்பாக்கள் யானை, குதிரை, கழுதை, கடமை (மான் வகை), மான் ("ஆன்"[100] என்று சுட்டுவர் பேராசிரியர்,); எருமை, மரை (மரையான்); கவரி (கவரிமான்), கராம் (முதலை) ; ஒட்டகம் போன்றவை 'கன்று' என்னும் இளமைப்பெயரைப் பெறுபவைகளென்றுச் சுட்டுகின்றன. இங்கு 'கடமை' என்பது பெண்பாற்பெயரைச் சுட்டாது; மான் வகையினங்களைக் குறித்து நிற்கின்றது.*

**குழவி**

*'குழவி' எனும் இளமைப்பெயரினைக் குஞ்சரம் (யானை) ; ஆ, எருமை ; கடமை (மான்வகை ; பெண் பெயரன்று), மரை (மரையான்), குரங்கு, முசு, ஊகம் ஆகியவை தாங்கி நிற்கின்றன. இவற்றை,*

*"குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க் கொடை" (மரபி.19),*

*"ஆவும் எருமையும் அதுசொலப் படுமே" (மரபி.20),*

*"கடமையும் மரையும் முதனிலை ஒன்றும்" (மரபி.21),*

*"குரங்கும் முசுவும் ஊகமும் மூன்றும்*
*நிரம்ப நாடின் அப்பெயர்க்கு உரிய" (மரபி.22)*

*என்பர் தொல்காப்பியர்.*

**குழவி, மகவு**

*"குழவியும் மகவும் ஆயிரண்டு அல்லவை*
*கிழவ அல்ல மக்கள் கண்ணே" (மரபி.23)*

*தொல்காப்பியர், இளமைப்பெயர்கள் ஒன்பதில், 'குழவி,' 'மகவு' ஆகிய இரண்டும் மட்டுமே மக்களுக்குரியனவாகும்; ஏனைய இளமைப்பெயர்கள் உரியனவாதலில்லை என்று குறிப்பிட்டுள்ளார்.*

**பிள்ளை, குழவி, கன்று, போத்து**

*"பிள்ளை குழவி கன்று போத்து எனக்*
*கொள்ளவும் அமையும் ஓர்அறிவு உயிர்க்கே" (மரபி.24),*

*"நெல்லும் புல்லும் நேரார் ஆண்டே" (மரபி.25)*

*இளமைப்பெயர்கள் ஒன்பதனுள், 'பிள்ளை,' 'குழவி,' 'கன்று,' 'போத்து' என்பன ஓரறிவுயிர்களின் இளமைப்பெயர்களாகும். ஓரறிவுயிர்களுள் நெல்லுக்கும் புல்லுக்கும் இப்பெயர்கள் உயரினவாதலில்லை.*

**இளமைப்பெயர்கள் - முடிபுரை**

*மேற்குறித்த இளமைப்பெயர்கள் தவிர்த்த பிற பெயர்களால் சுட்டப்பெறுவதில்லை என்பர் தொல்காப்பியர். இதனை,*

*“சொல்லிய மரபின் இளமை தானே*

*சொல்லுங் காலை அவைஅல இலவே” (மரபி.26)*

*என்பதன் வழி அறிய முடிகின்றது. இந்நூற்பாவிற்கு இளம்பூரணர், “சொல்லிப் போந்த மரபுடையனவற்றிற்குச் சொல்ல வேண்டு மரபுடையனவற்றிற்குஞ் செசால்லுமிடத்து இவை தாமே இளமைப் பெயர் என்றவாறு”[101] என்றுரைப்பர்.*

*“இந்நூற்பாவானது இளமைப்பெயர்கட்குப் புறனடை”[102] என்கிறார் பேராசிரியர். “இங்கு எடுத்துக் கூறிய இளமை பற்றிய மரபுப் பெயர்களை மேலும் விரித்துச் சொல்லுங்கால் மேல் எடுத்துக் கூறிய அப்பெயர்களன்றி வேறு இல்லை”[103] என்பர் க.வெள்ளைவாரணனார்.*

*“‘சொல்லிய மரபின்’ - நூல்களுள் சொல்லி வந்துள்ள மரபுப்படி. அவை தவிரப் பிறிதில்லை. தொல்காப்பியர் கருத்துப்படி இவை மட்டுமே இளமைப்பெயர்கள். அவருக்குப் பிறகு ‘நாகு’ என இளமைப் பெயர் வழங்கியதை உரையாசிரியர் காட்டுவர். இது முன்பு பெண்மையைக் குறித்தது. காலப்போக்கில் இளமைப்பெயர்கள் ஒன்றற்குரியது மற்றதற்கு மாறி வழங்கியனவும் உண்டு”[104] என்றியம்புகின்றார் தமிழண்ணல்.*

*‘சொல்லுங் காலை’ என்றதனுக்குச் சொல்லாத இளமைப்பெயருங் கொள்க என்றுரைக்கின்றார் பேராசிரியர். இவர் ஆண்பாற்பெயருள் குறித்த ‘போத்து’ என்பதனையும், பெண்பெயருள் குறித்த ‘நாகு’ என்பதனையும் இளமைப்பெயருக்கு ஆகி வருவதாகச் சுட்டியுரைக்கின்றார்.*

*நான்காவது நூற்பா முதல் இருபத்தைந்தாம் நூற்பா வரை இளமைப்பெயர்கள் பெறும் உயிரினங்கள் பற்றி விளக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியர் இளமைப்பெயர்களாகத் தொகுத்தவற்றுள் ‘போத்து’ என்பதனைக் குறிக்கவில்லை*

ல. ஆனால், வகுத்துரைக்கின்ற நிலையுள் 'போத்து' என்னும் இளமைப்பெயர் ஓரறிவுயிர்களுக்கு உரியனவாகக் குறிப்பிட்டுள்ளார். இருப்பத்தாறாம் நூற்பா இளமைப்பெயருக்குப் புறனடையாக இங்கு அமையப்பெற்றுள்ளது.

**இளமைப்பெயர்கள் பெறும் உயிரினங்கள்**

| வ. எண் | இளமைப் பெயர் | உயிரினங்கள் | மரபியல் நூற்பா எண் |
|---|---|---|---|
| *1.* | *கன்று* | *ஆன்* | *15* |
| | | *எருமை* | *16* |
| | | *ஒட்டகம்* | *18* |
| | | *கடமை* | *15* |
| | | *கராம்* | *17* |
| | | *கவரி* | *17* |
| | | *கழுதை* | *15* |
| | | *குதிரை* | *15* |
| *2.* | *குட்டி* | *எலி* | *06* |
| | | *குரங்கு* | *13* |
| | | *நரி* | *09* |
| | | *நாய்* | *08* |
| | | *பன்றி* | *08* |
| | | *புலி* | *08* |
| | | *முயல்* | *08* |
| | | *மூங்கா* | *06* |
| | | *மூவரி அணில்* | *06* |
| | | *வெருகு* | *06* |
| *3.* | *குருளை* | *நரி* | *09* |
| | | *நாய்* | *08* |
| | | *பன்றி* | *08* |
| | | *புலி* | *08* |

| | | | |
|---|---|---|---|
| | | முயல் | 08 |
| 4. | குழவி | ஆ | 20 |
| | | ஊகம் | 22 |
| | | எருமை | 20 |
| | | கடமை | 21 |
| | | குஞ்சரம் | 19 |
| | | குரங்கு | 22 |
| | | நெல், புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | 24-25 |
| | | மக்கள் | 23 |
| | | மரை | 21 |
| | | முசு | 22 |
| 5. | பறழ் | எலி | 07 |
| | | குரங்கு | 13 |
| | | நரி | 09 |
| | | நாய் | 08 |
| | | பன்றி | 08 |
| | | புலி | 08 |
| | | முயல் | 08 |
| | | மூங்கா | 06 |
| | | மூவரி அணில் | 06 |
| | | வெருகு | 06 |
| 6. | பார்ப்பு | குரங்கு | 13 |
| | | தவழ்பவை | 05 |
| | | நரி | 09 |
| | | பறப்பவை | 04 |
| 7. | பிள்ளை | குரங்கு | 13 |
| | | தவழ்பவை | 05 |
| | | நரி | 09 |
| | | நெல், புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | 24-25 |

| | | | |
|---|---|---|---|
| | | பன்றி | 08 |
| | | பறப்பவை | 04 |
| | | புலி | 08 |
| | | முயல் | 08 |
| 8. | போத்து | நெல், புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | 24-25 |
| 9. | மகவு | குரங்கு | 14 |
| | | மக்கள் | 23 |
| 10. | மறி | உழை | 12 |
| | | குதிரை | 12 |
| | | நவ்வி | 12 |
| | | புல்வாய் | 12 |
| | | யாடு | 12 |

**ஆறுவகை உயிரினப் பாகுபாடுகள்**

*உலகில் எண்ணிலடங்கா உயிரினங்கள் உள்ளன. இவற்றினை வகைப்ப டுத்துதல் இயலாத ஒன்றனாகும். ஆனாலும் நம் முன்னோர் பண்டைய காலத் தே பகுத்தறிந்து ஆய்ந்துள்ளனர்.*

*இவ்வழி நின்று தொல்காப்பியர் புல், மரம், செடி, கொடிகள் அனைத்து ம் ஓரறிவு உயிர்களாகவும், நத்தை, சிப்பி, கடல் வாழ் உயிரினங்களில் சில ஈர றிவு உடைய உயிரினங்களாகவும் ; கரையான், எறும்பு, ஈசல் போன்றன மூன் றறிவு உள்ளவை என்றும்; நண்டு, தும்பி, வண்டு ஆகியன நான்கறிவு பெற்றவை வயாகவும்; பறவைகள், விலங்குகள், ஊர்வனவற்றுள் பாம்பும் கடல்வாழ் உயி ரினங்களில் மீன், முதலை, ஆமை போன்றவையும், மனிதனின் இயல்பினின்று மாறிக் காணப்படுவோரும் ஐந்தறிவுடையவை என்றும் ; மேற்கூறிய அனைத் து உணர்வுகளுடன் மனத்தால் பகுத்தறியும் அறிவுபெற்ற மக்கள் ஆறறிவு உடையோர் ஆவார். இவற்றைப் பின்வரும் நூற்பாக்கள் எடுத்தியம்புகின்றன,*

*"ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே*

*இரண்டு அறிவதுவே அதனொடு நாவே*

*மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே*

*நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே*

*ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே*

*ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே*

*நேரிதன் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே" (மரபி.27)*

**ஓரறிவுயிரினங்கள்**

*புல், மரம் என்பன ஓர் அறிவுடையனவாகும். இதனை,*

*"புல்லும் மரனும் ஓர் அறிவினவே*

*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (மரபி.28)*

*எனும் நூற்பா விளக்குகிறது. 'பிறவும் உள' என்பதனுக்கு, "கொடியுந் தாமரையும் கழுநீரும்"[105] என்பர் இளம்பூரணர். "புறக்காழும் அகக்காழுமின்றிப் புதலுங் கொடியும் போல்வன. பிறப்பென்பன: மக்களானும் விலங்கானும் ஈன்ற குழவி ஓரறிவுயிராகிய பருவமும், எஞ்ஞான்றும் ஓரறிவினவேயாகிய என்பில் புகழுமென இவை"[106] என்றுரைப்பர் பேராசிரியர்.*

**ஈரறிவுயிரினங்கள்**

*"நந்தும் முரளும் ஈர் அறிவினவே*

*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (மரபி.29)*

*எனும் நூற்பா நந்து, முரள் போன்றவை ஈரறிவுடையன என்றுச் சுட்டுகிறது. "நந்து என்றதனால் சங்கு, நத்தை, அலகு, நொள்ளை என்பன கொள்க. முரள் என்றதனால் இப்பி, கிளிஞ்சில், ஏரல் என்பன கொள்க"[107] என்றுச் சுட்டுகிறார் இளம்பூரணர். பேராசிரியர், "இவற்றுக்குக் கிளையென்பன கிளிஞ்சிலும் முற்றிலும் (மட்டி, சிப்பி வகை) முதலாகிய கடல்வாழ் சாதியும் பிறவுமெனக் கொள்க"[108] என்கின்றார்.*

**மூன்றறிவுயிரினங்கள்**

உற்றறிவுணர்வு, சுவையுணர்வு, நாற்றவுணர்வினை அறியக்கூடிய சிதலு ம், எறும்பும் மூன்றறிவுயிர்களாகும் என்பதனை,

"சிதலும் எறும்பும் மூவறி வினவே

பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (மரபி.30)

எனும் நூற்பா சுட்டுகின்றது. 'பிறவும் உள' என்றதனால், இளம்பூரணர், "அட் டை முதலாயின"[109] என்றும், பேராசிரியர், "'ஈயன் மூதாய்' (அகம்.14) போல்வ ன. பிறப்பென்பன, முற்கூறியவாறே மக்கட்குழவியும் விலங்கின் குழவியும் இம்மூ ன்றுணர்வாகிய பருவத்தனவும் அட்டை முதலாகியனவுமெல்லாங் கொள்க"[110] என்றும் குறிப்பிடுகின்றனர்.

**நான்கறிவுயிரினங்கள்**

"நண்டும் தும்பியும் நான்கு அறிவினவே

பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (மரபி.31)

மூவறிவுயிர்களுக்குரிய உணர்வுகளுடன் கண்ணால் பார்த்து அறிகின்ற உணர்வுகளைப் பெற்ற நண்டு, தும்பி நான்கறிவுடையன வென்று இந்நூற்பா குறிப்பிடுகிறது. பிறவுமென்பதனுக்கு, "ஞிமிறு, சுரும்பு என்பன"[111] என்பர் இள ம்பூரணர். "வண்டுந் தேனீயுங்குளவியும் முதலியன"[112] என்றுரைப்பர் பேராசிரி யர். இவர், "நண்டிற்கு மூக்குண்டோவெனின், - அஃது ஆசிரியன் கூறலான் உ ண்டென்பது பெற்றாம்"[113] என்றும் குறிப்பிடுகின்றார்.

**ஐயறிவுயிரினங்கள்**

நான்கறிவு உயிர்களுக்குரிய நால்வகை உணர்வுகளுடன் செவியால் கேட்டறி ந்து உணரும் ஆற்றலைப் பெற்றவைகள் ஐயறிவுயிரினங்களாகும். இதனை,

"மாவும் மாக்களும் ஐயறி வினவே

பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (மரபி.32)

என்று இந்நூற்பா விளக்குகின்றது.

'மாவும் மாக்களும்' என்பதை, "மாவும் புள்ளும்"[114] என்று குறிப்பர் இளம்பூரணர். "மாவென்பன - நாற்கால் விலங்கு, மக்களெனப்படுவார்- மனவுணர்ச்சியில்லாதார்"[115] என்பர் பேராசிரியர். 'பிறவுமுள' என்பதற்கு, "தவழ்வனவற்றுள் பாம்பு முதலாயினவும் நீருள் வாழ்வனவற்றுள் மீனும் முதலையும் ஆமையும் முதலாயின"[116] என்கிறார் இளம்பூரணர். பேராசிரியர், "எண்கால் வருடையும் குரங்கும் போல்வன"[117] என்றுரைக்கின்றார்.

**ஆறறிவுயிரினங்கள்**

உயிரின வகைப்பாட்டினுள் இறுதியாகச் சுட்டப்படுவது ஆறறிவுயிரினங்களாகும். ஐந்தறிவுயிர்களுக்குரிய உணர்வுகளுடன் மனம் மற்றும் பகுத்தறிகின்ற உணர்வினைப் பெற்ற மக்கள் ஆறறிவுயிரினங்களாகச் சுட்டப்பட்டுள்ளதனை,

"மக்கள் தாமே ஆறறிவு உயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (மரபி.33)

என்று இந்நூற்பா குறிப்பிடுகின்றது.

பிறவுமுளவென்பதனால், "தேவர், அசுரர், இயக்கர் முதலாயினோர் பிறப்புக்கள்"[118] என்பார் இளம்பூரணர். பேராசிரியர், "தேவருந்தானவரும் முதலாயினார்"[119] என்றும், "பிறப்பென்றதனால், குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையனவெனப்படும் மனவுணர்வுடையன உளவாயினும் அவையும் ஈண்டு ஆறறிவுயிராயடங்குமென்பது"[120] என்றும் விளக்குகின்றார். இவர் முப்பத்தி நான்காவது (34) நூற்பாவை விடுத்து, மக்களைச் சுட்டும் ஆறறிவு குறித்த நூற்பாவின் விளக்கத்திற்குள்ளேயே அடக்கி இளம்பூரணர் குறிப்பதாகச் சுட்டியுரைத்துள்ளார்.

"ஒரு சார் விலங்கும் உளவென மொழிப" (மரபி.34)

ஒருசிலவிலங்குகள் ஆறறிவு உடையனவாகச் சுட்டப்படுகின்றமையை இந்நூற்பா குறிப்பிடுகின்றது. இதனை, இளம்பூரணர், "விலங்கினுள் ஒருசாரனவும் ஆறறி

வுயிராமென்றவாறு, அவையாவன கிளியுங் குரங்கும் யானையும் முதலாயின”[121] என்று எடுத்தியம்பியுள்ளார்.

இந்நூற்பா உரைவேறுபாடுள் அடங்கப்பெறுகின்றது. இவ்வாறாக உயிரினப் பாகுபாடுகள் குறித்து இருபத்தியேழாவது நூற்பா முதல் முப்பத்திநான்காம் நூற்பாவரை 'எட்டு' நூற்பாக்களுள் விளக்கப்பட்டுள்ளன.

இளமைப்பெயர்களைக் குறிப்பிடும் பொருட்டு அவற்றைத் தாங்கும் ஓரறிவுயிர்கள் சுட்டப்படுகின்றன. அத்திறத்தால் இளமைப் பெயர் தாங்கும் உயிரினங்களை அடுத்து உயிரினப் பாகுபாடுகள் அமையப் பெற்றுள்ளன என்று சிலர் குறிப்பிடுவர். இவர்களுடைய இக்கருத்தின்படி உயிரினப் பாகுபாட்டுள் இறுதியாக ஆறறிவு பெற்ற மக்கள் சுட்டப்படுகின்றனர். ஆதலால் இதனையடுத்துத் தொழில் மரபு அமையப் பெற்றிருக்க வேண்டும். மாறாக ஆண்பாற், பெண்பாற் பெயர்கள் சுட்டப்பட்டுள்ளதனைக் கருத்தில் கொண்டு தெளிதல் சிறப்பிற்குரியதாகும்.

**ஆண்பாற்பெயர்கள் தாங்கும் உயிரினங்கள்**

ஆண்பாற்பெயர்களாகத் தொகுத்துக் கூறப்பட்டவை அனைத்தும் ; உயிரினங்களுக்கு வகுத்துக் கூறப்பெறும் மரபுப் பெயர்களாக பின்வருமாறு எடுத்தியம்பப்பட்டுள்ளன.

**களிறு**

“வேழக் குரித்தே விதந்து களிறு என்றல்” (மரபி.35),
“கேழல் கண்ணும் கடிவரை இன்றே” (மரபி.36)

வேழம் (யானை); கேழல் (பன்றி) என்ற இரண்டும் 'களிறு' என்னும் ஆண்பாற்பெயரினைப் பெறுகின்ற உயிரினங்களென்று இந்நூற்பாக்கள் குறிப்பிடுகின்றன.

*இவ்விரு நூற்பாக்களும் உரைவேறுபாட்டுள் அடங்கி நிற்கின்றன. இள ம்பூரணர் தனித்தனி நூற்பாக்களாகக் கொண்டு உரை வரைந்துள்ளார். பேராசி ரியர் இவ்விரு நூற்பாக்களையும் ஒன்றாக இணைத்துச் சுட்டியுரைக்கின்றார். பேராசிரியர் உரையுள் யானைக்குப் பெரும்பான்மையாகவும், பன்றிக்குச் சிறு பான்மையாகவும் இப்பெயர் குறிக்கப்பெறுமென்று குறிப்பிடுகின்றார்.*

**ஒருத்தல்**

*புல்வாய், புலி, உழை, கவரி (மான்), கராம் (முதலை), யானை, பன்றி, எருமை ஆகியன 'ஒருத்தல்' எனும் ஆண்பாற்பெயரால் குறிக்கப்பெறும். இதனை,*

*"புல்வாய் புலி உழை மரையே கவரி*
*சொல்லிய கராமொடு ஒருத்தல் ஒன்றும்" (மரபி.37),*
*"வார்கோட்டு யானையும் பன்றியும் அன்ன" (மரபி.38),*
*"ஏற்புடைத்து என்ப எருமைக் கண்ணும்" (மரபி.39)*

*எனும் நூற்பாக்களின் வழி அறியமுடிகின்றது.*

**ஏறு**

*"பன்றி புல்வாய் உழையே கவரி*
*என்று இவை நான்கும் ஏறுஎனற்கு உரிய" (மரபி.40),*
*"எருமையும் மரையும் பெற்றமும் அன்ன" (மரபி.41),*
*"கடல்வாழ் சுறாவும் ஏறு எனப்படுமே" (மரபி.42)*

*பன்றி, புல்வாய், உழை, கவரி ; எருமை, மரை ; பெற்றம் ; சுறவு போன்ற உயிரினங்கள் 'ஏறு' எனும் பெயரினைப் பெறுவன என்பதை மேற்சுட்டிய நூற்பாக்களின் வழி அறியமுடிகின்றது.*

**போத்து**

‘போத்து’ எனும் பெயரானது பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய் ; நீருள் வாழ்கின்ற உயிரினங்களுள் சுறா, முதலை ; மயில், எழால் (வல்லூறு) ஆகியவற்றிற்குச் சுட்டடப்பெறுகின்றது. இவற்றை,

“பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
மற்று இவை எல்லாம் போத்து எனப்படுமே” (மரபி.43),

“நீர்வாழ் சாதியும் அதுபெறற்கு உரிய” (மரபி.44),

“மயிலும் எழாலும் பயிலத் தோன்றும்” (மரபி.45)

எனும் நூற்பாக்கள் எடுத்துரைக்கின்றன.

**இரலை, கலை**

‘இரலை,’ ‘கலை’ என்னும் ஆண்பாற்பெயர்கள் புல்வாய்க்கு (மான்) உரியனவாகும். இதனை,

“இரலையும் கலையும் புல்வாக்கு உரிய” (மரபி.46)

எனும் நூற்பா சுட்டுகிறது.

**கலை**

‘கலை’ என்னும் ஆண்பாற்பெயரானது உழை, முசு என்பனவற்றிற்கு உரித்தாகும் என்பதனை,

“கலை என்காட்சி உழைக்கும் உரித்தே
நிலையிற்று அப்பெயர் முசுவின் கண்ணும்” (மரபி.47)

என்பதன் வழி அறியமுடிகின்றது.

**மோத்தை, தகர், உதள், அப்பர்**

“மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
யாத்த என்ப யாட்டின் கண்ணே” (மரபி.48)

என்ற நூற்பாவின் வழி, ‘மோத்தை,’ ‘தகர்,’ ‘உதள்,’ ‘அப்பர்’ ஆகிய நான்கின் பெயரும் யாட்டின் (ஆடு) ஆண்பாற்கு உரியதாகும்.

**சேவல்**

*பறப்பனவற்றுள் சிறகுடையவை எல்லாம் 'சேவல்' எனும் பெயருக்குரி யனவாகும். பெரிய சிறகினைக் கொண்ட மயில் மட்டும் அப்பெயரினைப் பெறுவதில்லை என்பதனை,*

*"சேவல் பெயர்க் கொடை சிறகொடு சிவணும்*
*மா இருந்தூவி மயில் அலங்கடையே" (மரபி.49)*

*என்ற நூற்பா அறியச் செய்கிறது.*

**ஏற்றை**

*ஆற்றல் பொருந்திய ஆண்பாற் உயிரினங்களுக்கெல்லாம் 'ஏற்றை' எனும் மரபுப்பெயர் பொருந்துவதாகும் என்பதனை,*

*"ஆற்றலொடு புணர்ந்த ஆண்பால் எல்லாம்*
*ஏற்றைக் கிளவி உரித்துஎன மொழிப" (மரபி.50)*

*எனும் நூற்பா வழி அறிய முடிகின்றது.*

**முடிபு**

*ஆண், பெண்பாற்பெயர்களுக்கு முடிபுரை கூறுகிறது இந்நூற்பா,*

*"ஆண்பால் எல்லாம் ஆண் எனற்கு உரிய*
*பெண்பால் எல்லாம் பெண் எனற்கு உரிய*
*காண்ப அவை அவை அப்பாலான" (மரபி.51)*

*ஆண்பால் உயிரெல்லாம் 'ஆண்' என்னும் பெயரினைப் பெற்றும்; பெண்பால் உயிர் எல்லாம் 'பெண்' எனும் பெயரினைப் பெற்றும் ; ஆண், பெண் எவையென கண்டறிந்து அவற்றிற்கு அப்பெயர்கள் குறிக்கப்பெறுவன என்று சுட்டியுரைக்கின்றது.*

*ஆண்பாற்பெயர்கள் பதினைந்தும் பிறவுமென்று தொகுத்துக் கூறிய பொழுதும் வகுத்துக் கூறுவனவற்றுள் 'எருது, சே, கண்டி, கடுவன்' என்பன குறிக்க*

ப்படவில்லை. இவற்றுள் 'கண்டி, கடுவன்' மட்டும் சிறப்பு வழக்காறுகளுள் இடம்பெற்றுள்ளன.

**ஆண்பாற்பெயர்கள் பெறும் உயிரினங்கள்**

| வ. எண் | ஆண்பால் பெயர் | உயிரினங்கள் | மரபியல் நூற்பா எண் |
|---|---|---|---|
| 1. | அப்பர் | யாடு | 48 |
| 2. | இரலை | புல்வாய் | 46 |
| 3. | உதள் | யாடு | 48 |
| 4. | ஏற்றை | ஆற்றலொடு புணரும் ஆணினங்கள் | 50 |
| 5. | ஏறு | உழை | 40 |
| | | எருமை | 41 |
| | | கவரி | 40 |
| | | சுறவு | 42 |
| | | பன்றி | 40 |
| | | புல்வாய் | 40 |
| | | பெற்றம் | 41 |
| | | மரை | 41 |
| 6. | ஒருத்தல் | உழை | 37 |
| | | எருமை | 39 |
| | | கராம் | 37 |
| | | கவரி | 37 |
| | | பன்றி | 38 |
| | | புலி | 37 |
| | | புல்வாய் | 37 |
| | | மரை | 37 |
| | | யானை | 38 |
| 7. | கலை | உழை | 47 |

| | | | |
|---|---|---|---|
| | | புல்வாய் | 46 |
| | | முசு | 47 |
| 8. | களிறு | கேழல் | 36 |
| | | வேழம் | 35 |
| 9. | சேவல் | மயில் அல்லாத பிற சிறகுடைய பறப்பவை அனைத்தும் | 49 |
| 10. | தகர் | யாடு | 48 |
| 11. | போத்து | எருமை | 43 |
| | | எழால் (வல்லூறு) | 45 |
| | | நீர் வாழ் சாதி (சுறா, முதலை, வரால், வாளை) | 44 |
| | | புலி | 43 |
| | | புல்வாய் | 43 |
| | | பெற்றம் | 43 |
| | | மயில் | 45 |
| | | மரை | 43 |
| 12. | மோத்தை | யாடு | 48 |

**பெண்பாற்பெயர்கள் குறிக்கும் உயிரினங்கள்**

பெண்பாற்பெயர்களாகத் தொகுத்தவற்றை வகுத்துக் கூறும் பொருட்டு அவ்வப் பெயர்களுக்குரிய உயிரினங்கள் குறித்துக் கூறிய தொல்காப்பியர், 'பிடி' என்பது பெண் யானையும் ; 'பெட்டை' என்பது ஒட்டகம், குதிரை, கழுதை, மரை ஆகியவற்றையும் ; 'பெட்டை,' 'பேடை,' 'பெடை' என்பன பறவைகளையும் ; 'அளகு' என்பது கோழி, ஆந்தை, மயில் என்பனவற்றையும் ; 'பிணை' என்பது புல்வாய், நவ்வி, உழை, கவரி ஆகிய நான்கினையும் ; 'பிணவு,' 'பிணவல்,' என்பன பன்றி, புல்வாய், நாயையும் ; 'ஆ' என்பது பசு, எருமை, மரையின் பெண்பாற்பெயரையும் ; 'பெண்,' 'பிணா' என்னும் பெயர்கள் மக்களின் பெண்பாற்பெயரையும் ; 'நாகு' என்பது எருமை, மரை, பெற்றம், நந்து முதலியவற்றையும்

; ‘மூடு,’ ‘கடமை’ என்பவை ஆட்டின் பெண்பாற் பெயரையும்; ‘பாட்டி’ என்பது பன்றி, நாயையும் ; ‘மந்தி’ என்பது குரங்கு, முசு, ஊகம் என்னும் குரங்கினங்களின் பெண்பாற்பெயரையும் குறிப்பதாகச் சுட்டியுள்ளார். இதனை,

“பிடி என் பெண்பெயர் யானை மேற்றே” (மரபி.52),

“ஒட்டகம் குதிரை கழுதை மரை இவை
பெட்டை என்னும் பெயர்க் கொடைக்கு உரிய” (மரபி.53),

“புள்ளும் உரிய அப்பெயருக்கு என்ப” (மரபி.54),

“பேடையும் பெடையும் நாடின் ஒன்றும்” (மரபி.55),

“கோழி கூகை ஆயிரண்டு அல்லவை
சூழும் காலை அளகு எனல் அமையா” (மரபி.56),

“அப்பெயர்க் கிழமை மயிற்கும் உரித்தே” (மரபி.57),

“புல்வாய் நவ்வி உழையே கவரி
சொல்வாய் நாடின் பிணை எனப்படும்” (மரபி.58),

“பன்றி புல்வாய் நாய் என மூன்றும்
ஒன்றிய என்ப பிணவின் பெயர்க்கொடை” (மரபி.59),

“பிணவல் எனினும் அவற்றின் மேற்றே” (மரபி.60),

“பெற்றமும் எருமையும் மரையும் ஆவே” (மரபி.61),

“பெண்ணும் பிணாவும் மக்கட்கு உரிய” (மரபி.62),

“எருமையும் மரையும் பெற்றமும் நாகே” (மரபி.63),

“நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே” (மரபி.64),

“மூடும் கடமையும் யாடு அலபெறாஅ” (மரபி.65),

“பாட்டி என்ப பன்றியும் நரியும்” (மரபி.66),

“நரியும் அற்றே நாடினர் கொளினே” (மரபி.67),

“குரங்கும் முசுவும் ஊகமும் மந்தி” (மரபி.68)

என்னும் நூற்பாக்களின் வழி அறியமுடிகின்றது.

இவ்வாறாகப் பெண்பாற்பெயர்களென்று வரையறுத்துத் தொகுத்தவைகளான பேடை முதல் பிடி ஈறாக பதின்மூன்றும் ; உயிரினங்களுக்கு வகுத்துரைக்கின்ற பொழுது சுட்டப்பட்ட 'பிணவல்,' 'ஆ,' 'பிணா' ஆகிய மூன்றும் தொகுத்தவற்றுள் இடம்பெறாதவைகளாகும்.

**பெண்பாற்பெயர் பெறும் உயிரினங்கள்**

| வ. எண் | பெண்பால் பெயர் | உயிரினங்கள் | மரபியல் நூற்பா எண் |
|---|---|---|---|
| 1. | அளகு | கூகை | 56 |
| | | கோழி | 56 |
| | | மயில் | 57 |
| 2. | ஆ | எருமை | 61 |
| | | பெற்றம் | 61 |
| | | மரை | 61 |
| 3. | கடமை | யாடு | 65 |
| 4. | நாகு | எருமை | 63 |
| | | நந்து | 64 |
| | | பெற்றம் | 63 |
| | | மரை | 63 |
| 5. | பாட்டி | நரி | 67 |
| | | நாய் | 66 |
| | | பன்றி | 66 |
| 6. | பிடி | யானை | 52 |
| 7. | பிணவல் | நாய் | 60 |
| | | பன்றி | 60 |
| | | புல்வாய் | 60 |
| 8. | பிணவு | நாய் | 59 |
| | | பன்றி | 59 |
| | | புல்வாய் | 59 |

| | | | |
|---|---|---|---|
| 9. | பிணா | மக்கள் | 62 |
| 10. | பிணை | உழை | 58 |
| | | கவரி | 58 |
| | | நவ்வி | 58 |
| | | புல்வாய் | 58 |
| 11. | பெடை | புள் (பறவை) | 55 |
| 12. | பெட்டை | ஒட்டகம் | 53 |
| | | கழுதை | 53 |
| | | குதிரை | 53 |
| | | புள் | 54 |
| | | மரை | 53 |
| 13. | பெண் | மக்கள் | 62 |
| 14. | பேடை | புள் (பறவை) | 55 |
| 15. | மந்தி | ஊகம் | 68 |
| | | குரங்கு | 68 |
| | | முசு | 68 |
| 16. | மூடு | யாடு (ஆடு) | 65 |

**சிறப்பு மரபு வழக்காறுகள்**

உயிரினங்களுக்கு வழங்கப்பெறும் சிறப்பு மரபு வழக்காறுகளாவன;

"குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்
மரம் பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிளியைத் தத்தை என்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்

இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்
எருமையுள் ஆணினைக் கண்டி என்றலும்
முடிய வந்த அவ்வழக்கு உண்மையின்
கடியல் ஆகா கடன் அறிந்தோர்க்கே" (மரபி.69)

என்று இந்நூற்பா குறிப்பிடுகின்றது.

அதாவது, ஆண் குரங்கினைக் 'கடுவன்' என்று கூறுதலும், மரத்தில் வாழும் கூகையைக் 'கோட்டான்' என கூறலும், சிவந்த வாயினைக் கொண்ட கிளியைத் 'தத்தை' என்று சுட்டலும், ஊன் தின்னும் கொடிய வாயையுடைய வெருகினைப் 'பூசை' என்று கூறலும், குதிரையுள் ஆணினைச் 'சேவல்' என்று குறித்தலும், இருண்ட நிறத்தைக் கொண்ட பன்றியை 'ஏனம்' என குறிப்பிடலும், எருமையுள் ஆணினைக் 'கண்டி' என்று வழங்கலும் முடிபாக வந்த உலக வழக்கிற்கு உண்மையானதும் கடன் அறிந்தோர்க்கு நீங்கலாகாத சிறப்பு மரபு வழக்காறுகளாகும் என்கிறார் தொல்காப்பியர்.

**பிள்ளை, ஆண், பெண்பாற்பெயர்க்கு முடிபு**

"பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே" (மரபி.70)

இவ்வாறாக எடுத்துரைக்கப்பட்ட இளமைப்பெயர்களும், ஆண்பாற் பெயர்களும், பெண்பாற்பெயர்களும் மரபிற்கு உரித்தானதாகுமென்று தொல்காப்பியர் இந்நூற்பாவில் சுட்டிரைக்கின்றார்.

**தொழில் மரபுகள்**

பழந்தமிழ் மக்களின் தொழில்சார் மரபு குறித்து ந.சுப்புரெட்டியார், "தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழ்நாட்டில் மக்களிடையே பலவிதப் பிரிவுகள் ஏற்பட்டிருந்தன. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவுகள் இருந்தன. இவை யாவும் அவர்கள் செய்யும் தொழிலினால் ஏற்பட்ட பிரிவுகளாகும். இவர்களைத் தவிர பாணர், கூத்தர், பொருநர், பார்ப்பார், அடிமைவேலை

ல செய்வோர், தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் போன்ற பல பிரிவுகளும் இரு ந்தன"[122] என்கின்றார்.

தொல்காப்பியர் மக்கள் குறித்துச் சுட்டுவது திணை சார்ந்த வகைமைக் கு உட்பட்டதேயாகும். இவர் 'சாதி' என்ற சொல்லை எடுத்தாண்டுள்ளார். அச்சொல்லானது, 'வகைமை'யைக் குறிப்பதற்காக மட்டும் என்பதனைப் பின்வரும் நூற்பாக்களின் வழி தெளியமுடிகின்றது,

"நீர் வாழ் சாதியுள் அது பெறற்கு உரிய" (மரபி.44),

"நீர் வாழ் சாதியுள் நந்தும் நாகே" (மரபி.64)

என்பனவாகும்.

மரபியலுள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்போர் தொழில் மரபுக்குரியவர்களென்று எழுபத்தொன்றாம் (71 ஆம்) நூற்பா முதல் எண்பத்தைந்தாம் (85 ஆம்) நூற்பா வரை விளக்கப்பட்டுள்ளது. அவற்றுள் அந்தணர்க்குரிய மரபுகள் ; அரசர்க்குரிய மரபுகள் ; அந்தணர், அரசர் இருவருக்குமுரிய மரபுகள் ; அரசர்க்குரிய சில அந்தணர்க்குரியவாதல் இன்மை ; நால்வகைத் தொழில் மரபினர்க்கும் உரியவை ; தலைமைக்கு உரியவை ; படை வகைக்கு உரியவர்கள் ; வணிகர்க்கு உரியவை ; வேளாண் மாந்தர்க்குரியவை ; வேளாளர் அரசரிடமிருந்து பெறும் மரபு ; அந்தணர் அரசுத்தொழிலுக்கு உரியவராகும் மரபு ; ஏனோர்க்குரிய மரபு குறித்தும் ; இழிநிலைக்கு ஆட்படுவோர் மேற்கூறிய மரபிற்குரியோராகார் என்று கட்டமைக்கப்பட்டுள்ளன.

அந்தணர்க்கு நூல், கமண்டலம், முக்கோல், மணை முதலானவை உரியனவாகும் (மரபி.71). அரசர்க்குரிய படை, கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர், தார் (மாலை), முடி, பிறமுடிகளை நீக்கி தன் முடியாக்குதல், செங்கோல் என்பனவாகும் (மரபி.72). நூல் முதலியன அரசர்க்கும் உரியவையாகும் (மரபி.73). அரசர்க்கே உரியவைகளான பரிசில் முதல் செம்மல் ஈறாக அந்தணர்க்கும் உரித்தாகும் (மரபி.74). ஊர், பெயர், தொழில், கருவி அனைவர்க்கும் (ந

ால்வர்) பொதுவாகும் (மரபி.75). தலைமைக்குணச் சொல் அனைவரது தகுதிக்கும் உரியனவாகும் (மரபி.76). அரசர், வணிகர் இருவர் மட்டுமே படைக்கு உரியவராவர் (மரபி.77). வணிகர்க்குரிய வாழ்வானது வாணிக வாழ்க்கையேயாகும் ; உண்மை, எண்வகைத் தானியங்களையும், உழுது விளைவித்தலையும் அறிந்ததுடன் ; தலை - அடையாளமாலை பெறுதற்குரியர் (மரபி.78;79;80). வேளாளர் உழுதுண்ணும் வாழ்க்கைக்கு உரியவராதலுடன் ; வேந்தரால் வழங்கப்படும் தொழிலைப் பெறுவதால் படை, கண்ணிக்குரியவராதல் (மரபி.81, 82). அந்தணர் அரசராதல் (மரபி.83). அரசு பெறும் நிலைக்குரியோர் (குறுநில மன்னர்) வில், வேல், கண்ணி, தார், மாலை, தேர், குதிரை முதலியவற்றைப் பெறுதல் (மரபி.84). நான்கு வகைத் தொழில் மரபினரானாலும் இழிநிலைக்காட்படும் போது மேற்சுட்டப்பட்ட மரபிற்குரியவராகமாட்டார் (மரபி.85) என்பன அனைத்தும் தொழில் மரபென்று கட்டமைக்கப்பட்டுள்ளனவற்றிற்குரிய விளக்கங்களாகும்.

இந்நூற்பாக்களுள் சுட்டப்பட்டுள்ள நால்வகைத் தொழில் மரபினரின் கட்டமைவுகள் முறையின்றி காணப்படுவதாகக் குறிப்பிடுகின்றார் ஞா.தேவநேயப் பாவாணர். அதாவது, “வேளாளர், வணிகர், அரசர், அந்தணர் என்பதே இயற்கை முறையாயினும், பொருளிலக்கண நூலார், ஆக்க வழிப்பாற்றல் பற்றியும் முக்கால அறிவு பற்றியும் முழுத்தூய்மை பற்றியும் அந்தணரை முன்னும், இறைவன் போல் எல்லாரையும் முறைசெய்து காத்தல் பற்றி அரசரை இரண்டாவதும், நாட்டை வளப்படுத்தியும் போர்க்காலத்தில் அரசர்க்குப் பொருள் கொடுத்தும் உதவும் வணிகரை மூன்றாவதும் வைத்து, அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் எனத் தலைகீழாச் செயற்கை முறைப்படுத்தினர்”[123] என்று சுட்டுகின்றார்.

**புல் - மர வேறுபாடுகள்**

புல், மர வேறுபாடுகள், உறுப்புவகைகள், இரண்டிற்கும் பொதுவானவையென்று ‘ஐந்து’ நூற்பாக்களுள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**புல் வகை**

*"புறக் காழனவே புல்என மொழிப" (மரபி.86)*

*வெளியே வயிரமுடையனவாகக் காணப்படும் அனைத்தும் 'புல்' என்று சுட்டப்படும். அவை தென்னை, பனை, கமுகு (பாக்கு), மூங்கில் போன்றவை களாகும்.*

**மர வகை**

*உள்பகுதியில் வயிரமுடையதாகக் காணப்படும் அனைத்தும் 'மரம்' என ப்படும். மரமாவது புளி, வேம்பு, விளா, பலா, ஆலம் போன்றவைகளாகும். இ தனை*

*"அகக் காழனவே மரம் என மொழிப" (மரபி.87)*
*எனும் நூற்பா விளக்குகிறது.*

**புல்வகை உறுப்புக்கள்**

*"தோடே மடலே ஓலை என்றா*
*ஏடே இதழே பாளை என்றா*
*ஈர்க்கே குலை என நேர்ந்தன பிறவும்*
*புல்லொடு வரும் எனச் சொல்லினர் புலவர்" (மரபி.88)*
*எனும் நூற்பாவின் வழி தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை போன்றனவும் பிறவும் புல்வகையின் உறுப்புக்களென்று சுட்டியுள்ளனர் புலவர் என்பதனை அறிய முடிகின்றது.*

**மரவகை உறுப்புகள்**

*இலை, தளிர், முறி, தோடு, சினை, குழை, பூ, அரும்பு, நனை ஆகியவை அனைத்தும் மரவகைகளுக்குரிய உறுப்புக்களாகும் என்பதனை,*

"இலையே தளிரே முறியே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனை உள்ளுறுத்த அனையவை எல்லாம்
மரனொடு வரூஉம் கிளவி என்ப" (மரபி.89)

எனும் நூற்பா எடுத்துரைக்கின்றது.

**புல், மரத்திற்குப் பொதுவானவை**

"காயே பழமே தோலே செதிளே
வீழொடு என்று ஆங்கு அவையும் அன்ன" (மரபி.90)

எனும் நூற்பா புல், மரம் ஆகிய இரண்டிற்கும் காய், பழம், தோல், செதிள் (துளி-பூந்தாது), வீழ் (விழுது) என்பன பொதுவாகக் காணப்படும் உறுப்புக்கள் என்கிறது.

**உலகப் பொதுமரபு**

உலகமானது நிலம், தீ, நீர், காற்று, ஆகாயம் என்னும் ஐந்தும் ஒன்றுடனொன்று கலந்து இயங்குவதாகும். ஆகவே, இதுவரை கூறப்பட்ட 'திணை, பால்' என்பனவற்றிற்கு மரபாகக் கூறிவருவதிலிருந்து மாற்றிக் கூறாமல் இயல்பிற்கும் முறைமைக்கும் ஏற்றச் சொற்களைக் கூறவேண்டுமென்பதனை,

"நிலம் தீ நீர் வளி விசும்பொடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிவுஇல் சொல்லொடு தழாஅல் வேண்டும்" (மரபி.91)

என்று இந்நூற்பா விளக்குகின்றது.

**மரபின் இன்றியமையாமை**

மரபு வழக்கிற்கு உட்பட்ட சொற்களைக் கொண்டு செய்யுள் இயற்றப்பட வேண்டும். இவ்இலக்கணத்திலிருந்து மாறுதல் செய்யுளுக்குப் பொருந்துவ

து இல்லை. மரபுக்கு மாறாகச் செய்யுள் இயற்றப்படும் நிலையில் பொருள் விளங்காமலும் வெவ்வேறாக மாறியும் பொருள்கெட்டுப் புரியாத நிலைக்குச் சென்றுவிடும் என்பதனை 92, 93 ஆம் நூற்பாக்கள் எடுத்தியம்புகின்றன.

**மரபின் இயல்பு**

'வழக்கு' என்பது உயர்ந்தோரால் வழங்கப்பட்ட சொல் வழக்கு முறைமையேயாகும். உலக இயல்புகள் அனைத்தும் முன்னோர்கள் குறித்து வழங்கிய வழக்குகளுக்கு உட்பட்டே அமையப் பெறும் என்பதனை,

"வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட்கு ஆகல் ஆன" (மரபி.94)

என்று இந்நூற்பா சுட்டிக்காட்டுகின்றது.

**நூலின் மரபுகள்**

தொல்காப்பியத்தில் முதல் இயலாக அமையப்பெற்றுள்ளது நூன் மரபு ஆகும். சொல்லதிகாரப் புறனடையில் 'நூல்நெறி பிழையாது' (எச்சவி.67) என்றும் சுட்டப்பட்டுள்ளது. பொருளதிகாரத்தில் செய்யுளியளுள் இலக்கிய உறுப்புக்களும், நூலின் இலக்கணமும் உட்பிரிவுகளும், சூத்திரம், உரை முதலானவை இடம்பெற்றுள்ளன. இவற்றை விடுத்தும், முரண்பாட்டிற்கு ஆட்பட்டு இவ்வியலுள் நூலின் மரபுகளென்று பதினெட்டு நூற்பாக்களில் விளக்கப்பட்டு மரபியலை நிறைவு செய்துள்ளது.

நூலின் மரபுகளென்று ; நூலினது வகைமை, இயல்புகள், சூத்திர இயல்பு, காண்டிகையின் இயல்பு, உரை இயல்பு, குறை நேர்தல், பெருமை, குறைகள், பத்துவகைக் குற்றங்கள், முப்பத்திரண்டு உத்திகள் முதலியன இடம்பெற்றுள்ளன.

இவ்வாறாக, தொல்காப்பிய மரபியலில் கூறப்பட்டுள்ள மரபுகள் சில; தொல்காப்பியத்தின் வழிநின்று தோன்றிய நன்னூலில் காணக்கிடைக்கின்றன.

தொல்காப்பியம் கூறியுள்ள நூலினது மரபுகள், நன்னூல் எழுத்ததிகாரத்தில் பொதுப்பாயிரத்துள் அடக்கப் பெற்றுள்ளன. சொல்லதிகாரத்தில் பொதுவியலுள் மரபு, மரபுவழுநிலை; வழாநிலை, வழுவமைதி ; வழுவமைதி காத்தல் ; வழுவாமல் காத்தல் ஆகியவை 'மரபியலுள்' குறிப்பிட்டவற்றையே எடுத்தியம்பியுள்ளன. உரியியலுள் உயிரினப் பாகுபாடுகள் குறித்து விளக்கப்பட்டுள்ளன. இவையும் 'மரபியலில்' இடம்பெற்றவையாகும்.

**மரபியலுள் இடைச்செருகல்கள் - அறிஞர்களின் கருத்துரைகள்**

மரபியலுள் தொழில் மரபு, நூல் மரபு ஆகியவை இடைச்செருகல்கள் என்று அறிஞர் பெருமக்கள் குறிப்பிடுகின்றனர். அதனை மெய்ப்பிக்கப் பின்வரும் கருத்துரைகள் சான்றுகளாக அமையப்பெறுகின்றன.

இவ்இடைச்செருகல்கள் குறித்து, பழைமை உரைகாரர்களான இளம்பூரணரும், பேராசிரியரும் கருத்துரைக்கவில்லை. "பேராசிரியர் மட்டும், அந்தணர்க்குரியவற்றுள் சில அரசர்க்குமுரியவை என்று சுட்டும் நூற்பாவிற்குரிய உரையினுள், தொல்காப்பியர் புறத்திணையியலில் குறிப்பிட்ட,

'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்' (புறத்.20)

பற்றி வாகைப் பொருள் பிறத்தலின் அவற்றைப் புறத்திணையியலுள் கூறினாராயினும், ஈண்டுத் தழீஇக் கொள்ளப்படும் மரபு வகையானென்பது ; என்போலவெனின் ;

'அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு' (தொல்.எழுத்.31)

என நூன்மரபினுள் ஓதிய மூவகைச் சுட்டினை இடைச்சொலோத்தினுள் ஓதானாயினான், அதுபோலவென்பது"[124] என்ற செய்தியை இங்கு எடுத்துக் காட்டியதன் பொருட்டுக் கூறியது கூறலாகச் சுட்டிக்காட்டுகின்றார்.

**க.வெள்ளைவாரணன்**

“மக்களை நிலத்தாற் பிரித்துரைப்பதன்றி நிறத்தாற் (வருணத்தால்) பிரித்துப் பேசுதல் பழந்தமிழர் மரபன்றாம். அயலாரால் இந்நாட்டிற்குப் பிற்றை நாளிற் புகுதப்பட்ட நால்வகைச் சாதிப்பிரிவு, தொன்மை வாய்ந்த தொல்காப்பிய மரபியலிலும் பிற்காலத்தவரால் நுழைத்துரைக்கப்பட்டுள்ளது. இளமை, ஆண்மை, பெண்மை முதலிய காரணமாக உயிர்களுக்கு வழங்கும் மரபுப்பெயர்களை விரித்துரைக்கும் பகுதியாக அமைந்தது தொல்காப்பிய மரபியலாகும். இவ்வியலில் 1 முதல் 70 வரை அமைந்த நூற்பாக்கள் முற்கூறிய மரபினையே விரித்துரைப்பனவாம். இவற்றின் பின் 86 முதல் 90 வரையுள்ள நூற்பாக்களும் இம்மரபினையே தொடர்ந்து பேசுவன. ஒன்றற்கொன்று நீங்காத தொடர்புடையனவாய் அமைந்த இச்சூத்திரங்களினிடையே,

“நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க் குரிய”

என்பது முதல்,

“அந்தணாளர்க் கரசு வரைவின்றே”

என்பது முடியவுள்ள பதினைந்து சூத்திரங்களும் சிறிதுந்தொடர்பற்ற நிலையில் பின்வந்தவரொருவரால் நுழைக்கப்பட்ட இடைச்செருகலாகும்”[125] என்றும், “செய்யுளியலுள் நூலைப் பற்றியும் அதன் பகுதிகளாகிய சூத்திரம், ஓத்து, படலம் என்பனவற்றைப் பற்றியும் உரைவகை நடையைப் பற்றியும் விளக்கிய ஆசிரியர், மீண்டும் அவற்றின் இயல்பினை ஈண்டுக் கூறுதல் கூறியது கூறலாமாதலானும், இப்பொருள் பற்றிச் செய்யுளியலில் அமைந்த சூத்திரங்களையும் இவ்வியலிலுள்ள சூத்திரங்களையும் ஒப்ப வைத்து நோக்குங்கால் இவ்விருவகைச் சூத்திரங்களும் சொல் நடையாலும் பொருளமைப்பாலும் தம்முள் வேறுபாடுடையனவாதல் நன்கு புலனாமாதலானும், நூன்மரபு பற்றிய இச்சூத்திரங்கள், தொல்காப்பியனார் காலத்திற்குப் பின்பு இயற்றப் பெற்று வழங்கியவை, பிற்காலத்தவரால் எல்லா நூற்கும் உரிய பொதுப் பாயிர மரபாக இந்நூலின் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளது”[126] என்றும் தொழில் மரபும், நூல்மரபும் மரபியலுள் இடைச்செருகப்பட்டுள்ளன என்பதை நிறுவியுள்ளார்.

**சி.இலக்குவனார்**

*"மரபுகளை விளக்கும் இம்மரபியலில் ஆசிரியர் கூறிபோந்தவாறு நமக்குக் கிடைத்திலது என்று எண்ண வேண்டியுள்ளது. தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கட்டுக்கோப்புக்குட்படுத்திச் சொல்லும் ஆற்றல் பெற்றுள்ள ஆசிரியர் போக்குக்கேற்ப மரபியல் அமைந்திலது. முறை பிறழ்ந்து கிடக்கின்றது. ஆசிரியர் கருத்துக்குப் பொருந்தாத செய்திகள் கூறப்பட்டுள்ளன. இடைச்செருகல் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு நிற்கின்றது.*

*மரம், செடி, கொடி முதலிய நிற்பன பற்றிய சொற்கள், பறவைகள், விலங்குகள், ஊர்வன முதலிய இயங்குவன பற்றிய சொற்கள் யாவும் புலவர் தெரிந்திருத்தல் வேண்டும். மக்களைப் பற்றியும் அவர்களைச் சார்ந்தவற்றைப் பற்றியும் பிற இயல்களில் விளக்கப்பட்டுள்ளன. அங்ஙனமிருந்தும், விலங்குகளைப் பற்றியும், மரங்களைப் பற்றியும் கூறுமிடத்தில் எவ்விதத் தொடர்புமின்றி வருண வேறுபாடுகளைக் குறிக்கும் செய்திகள் கூறப்படுகின்றன. இங்ஙனம் கூறும் பதினைந்து நூற்பாக்களும் (மரபியல் 71 முதல் 85 முடிய) பின்னுள்ளோரால் இடையில் நுழைக்கப்பட்டனவே என்பதில் ஐயமே இன்று. 'வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை' என்ற நூற்பாவும், "வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது இல் என மொழிப பிறவகை நிகழ்ச்சி" என்ற நூற்பாவும் குன்றின் விளக்கெனத் தெற்றெனப் புலப்படுத்தி நிற்கின்றன.*

*நூல்களைப் பற்றியும் அவற்றின் வகை பற்றியும் செய்யுளியலில் ஆசிரியர் கூறுகின்றார். கூறவேண்டுவனவற்றை ஆங்கே கூறாமல் மரபியலில் கூறத் தலைப்பட்டதன் பொருத்தம் விளங்கவில்லை. உலகியல் மரபினையும் செய்யுளியல் மரபினையும் இங்கு விளக்குகின்றார் என உரையாசிரியர்கள் உள்ளதற்கு அமைதி கூறும் வகையில் உரைத்துள்ளனரேனும் நுணுகி ஆராய்வார்க்கு உண்மை வெளிப்படுதலில் தவறாது. 'சூத்திரம்' என்ற சொல்லும் 'உத்தி' என்ற சொல்லும் தாம் இடையில் புகுத்தப்பட்ட தன்மையை எளிதே புலப்படுத்துகி*

*ன்றன. ஆதலின் நூறு முதல் நூற்றிப்பன்னிரண்டு முடிய உள்ள நூற்பாக்கள் ஆசிரியருடையனவல்ல என்பது அங்கை நெல்லிக்கனி போல் விளங்குகின்றது.*

*நூற்பாவின் இறுதியில் நூலின் புறநடையாக உரைக்கப்பட்டிருப்பது ஏனைய புறநடைகளோடு ஒப்பிடுமிடத்துத்தான் பின்வந்த பேதைப் புலவன் படைப்பெனப் பேசா நிற்கின்றது"*[127] *என இடையில் நுழைக்கப்பட்டதனை மெய்ப்பித்துள்ளார்.*

**லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார்**

*"இம்மரபியலில் உயர்திணைச் சாதிகள் நான்கனைப் பற்றியும் உத்தி முதலியன பற்றியும் கூறப்பட்டுள்ளன. இத்தகைய நூற்பாக்கள், தொல்காப்பியனாரால் இயற்றப்பட்டன அல்ல ; அவை பிற்காலத்தாரால் இடையில் புகுத்தப் பெற்றன என்று கருதுவார் உள்ளனர்"*[128] *என்று தொழில் மரபுகள் இடையில் புகுத்தப்பெற்றதனைச் சுட்டியுரைக்கின்றார். நூல் மரபு குறித்து இவர் பேசவே இல்லையென்பது குறிப்பிடத்தக்கதாகும்.*

**சோ.ந.கந்தசாமி**

*"மரபியல் என்ற தலைப்பின் பொருளைப் புரிந்துகொள்ளாத பிற்காலத்தவர் மரபு = சாதி எனக் கொண்டு சாதிகளைப் பற்றிய நூற்பாக்களைப் (71-85) புனைந்து சேர்த்தனர் போலும்! அதிகாரப் புறநடைக்குப் பிறகு காணப்படும் நூல், சூத்திரம், காண்டிகை உரை, பத்துவகைக் குற்றம், முப்பத்திரண்டு தந்திர வுத்திகள் (நூ.100-112) முதலியன எல்லாம், சங்கம் மருவிய காலத்தும் பின்னரும் எழுதப் பெற்ற உரைகளிலும் இலக்கண நூல்களிலும் இடம்பெற்றவை சற்று உருமாறித் தொல்காப்பியப் பிற்சேர்க்கையாக ஒட்டப்பெற்றன என்பதில் ஐயமில்லை"*[129] *என்று புனைந்து ஒட்டப்பட்டதாகக் குறிப்பிடுகின்றார்.*

**தெ.பொ.மீனாட்சிசுந்தரம்**

*“தொல்காப்பியத்தில் சில இடங்களில் தட்டுப்பாடுகள் காணப்படுவதாக எண்ணித் தொல்காப்பியத்தைப் பயின்ற மாணவர் சிலர் சில நூற்பாக்களைத் தாங்களாகவே சேர்த்திருக்கலாம்”[130] என்றும், “தொல்காப்பிய பொருளதிகார இறுதியில் உள்ள மரபியலில் வரும் சில நூற்பாக்கள் செய்யுளியலில் ‘நூல்’ பற்றிக் கூறப்பட்டவைகளின் தேவையற்ற ‘விரிவே’ ஆகும். இந்நூற்பாக்கள் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டவையாக இருக்க வேண்டும்”[131] என்றும் கூறியுள்ளார்.*

**ச.பாலசுந்தரம்**

*“தமிழ் நூலோர் வகுத்த நாற்பால் மரபினைத் திரித்தல் வேண்டிப் பிறப்பினை (நிறத்தினை) அடிப்படையாகக் கொண்ட ஆரியரது வருணக்கோட்பாடுகள் தமிழகத்தில் ஆங்காங்கே ஊடுருவிய நிலையைப் ‘பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப’ என்னும் ஆசிரியர் கூற்றான் அறியலாம் (கற்பி-உரை. காண்க) ஆரியர் தம் வருணக் கோட்பாட்டினை நீதி முறைமையொடு இணைத்துப் புராணங்கள் வாயிலாகவும் சமயநூல்கள் வாயிலாகவும் ஆளுவோர் துணையொடு பரப்பி வந்தமையான் தமிழ்நெறி மரபுகள் இடைக்காலத்தே சிதைந்துபோய் ஆரியக் கோட்பாடு இடம்பெறத் தலைப்பட்டது. அவ்வாற்றான் அவர் வகுத்த நாலாம் பிரிவாகிய சூத்திரர் மேல் மூவர்க்கும் பணியாளர், அடியோர், தன்னுரிமையில்லாதவர் என ஆரிய மனுநூல்களாற் பரப்பி விட்டமையானும் இம்மரபியல் நூற்பாக்களுக்கு உரையாசிரியன்மார் தெளிவின்றிக் கூறியுள்ள மயக்க உரைகளானும் ஆரியக் கோட்பாடுகளையே தொல்காப்பியம் கூறுவதாகப் பிறழக்கருதிய பிற்காலத்தாரும் இற்றைய தமிழ் ஆய்வாளர் சிலரும் இந்நூற்பாக்களை இடைச்செருகல் எனக் கூறுவாராயினர்”[132] என்றும், இவற்றுடன், “இச்சூத்திரங்களுக்கெல்லாம் பேராசிரியர் கூறும் உரை தமிழ்நெறி மரபிற்கொவ்வாதனவும் சூத்திரச் சொற்கிடக்கைக்கு ஏலாதனவாகவுமாக அமைந்து தன்னான் ஒரு பொருள் கருதிக் கூறலாக நிற்றலை ஓர்ந்து கொள்க”[133] எனச் சுட்டியுரைக்கின்றார்.*

**வி.பி.புருஷோத்தமன்**

"தொல்காப்பியத்தைப் பயின்ற பிற்காலத்தவர், தம் காலத்து வழக்குகள், கருத்துகள் தொல்காப்பியத்தில் இல்லாத குறையைத் தீர்க்க வேண்டி, சில நூற்பாக்களை இயற்றி தொல்காப்பியத்தின் இறுதியில் பிற்சேர்க்கையாகச் சேர்த்துள்ளனர். எடுத்துக்காட்டாக 'பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்' என்ற நால்வகைப் பாகுபாடு தமிழ்நாட்டில் தொல்காப்பியர் காலத்தில் இல்லை இந்தக் குறையைத் தீர்க்க பிற்காலத்தில் ஒருவர் அந்தணர், அரசர், வைசிகன், வேளாளரைப் பற்றிப் பதினைந்து நூற்பாக்களை இயற்றித் தொல்காப்பிய மரபியலில் சேர்த்துள்ளார்.

'நூல்' என்ற சொல் தொல்காப்பியத்தில் அறிவியல் நூற்களையே குறிப்பிடுகிறது. இலக்கண நூல், வான நூல், கட்டிட நூல் போன்றவையே நூல் என்ற பெயரால் சுட்டப்படுவனவாகும். இத்தகைய நூலின் இலக்கணத்தைச் செய்யுளியலில் தொல்காப்பியர் கூறுகிறார். மரபியலின் கடைசி '18' நூற்பாக்களிலும் நூலைப் பற்றிக் கூறப்படுகிறது. இந்த நூல் வேறு; தொல்காப்பியர் செய்யுளியலில் கூறும் நூல் வேறு, தொல்காப்பியர் நூலைப் பற்றிக் கூற, மரபியலில் வரும் நூல் பொதுவாக எல்லா வகை இலக்கிய நூலைப் பற்றியும் பேசுகிறது. சமஸ்கிருத இலக்கியக் கருத்துக்களை - குறிப்பாக அர்த்தசாஸ்கிரத்தில் காணப்படுவதை - மரபியலில் வரும் நூலைப் பற்றிய நூற்பாக்கள் கூறுகின்றன. இவை பிற்காலத்தில் வாழ்ந்த ஒருவரால் இயற்றப்பட்டு தொல்காப்பியத்தின் இறுதியில் பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டவையாகும்.

இந்த இரண்டு பிற்சேர்க்கைகளைத் தவிர மூன்றாவது ஒரு சேர்க்கையும் மரபியலில் உள்ளது. .....மரபியல் விலங்கைப் பற்றியும் தாவரத்தைப் பற்றியும் கூறுவதைக் கண்ட பிற்காலத்தில் வாழ்ந்த ஒருவர் இவை ஓர்அறிவு முதல் ஆறு அறிவு கொண்டவை என்று எட்டு நூற்பாக்களில் எழுதி, விலங்குகளின் இளமைப்பெயர் கூறும் நூற்பாக்களுக்கும், ஆண்களின் பெயர் கூறும் நூற்பாக்க

ளுக்கும் இடையில் சேர்த்திருக்கிறார். உயிர்களை அறிவு எண்ணிக்கையின் அடிப்படையில் பாகுபாடு செய்யும் இந்த எட்டு நூற்பாக்கள் மிக அழகாக இருப்பதாலும், அறிவியல் அடிப்படையில் அமைந்தவையாதலாலும், அவற்றை இடைச்செருகல் என்றும் யாரும் கூறவில்லை. ஆண் - பெண், இளமைப்பெயர்களைக் கூறும் மரபியல் அவற்றின் அறிவுப் பாகுபாட்டைக் கூறவேண்டிய அவசியமில்லை. சமண மதம் தமிழ் நாட்டில் தழைத்தோங்கிய போது இந்நூற்பாக்கள் எழுதப்பட்டு மரபியலில் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

இனி, தொல்காப்பிய மரபியலில் இன்று காணப்படும் 112 நூற்பாக்களைப் பற்றிக் காண்போம்.

| மரபியல் நூற்பா | பொருள் | குறிப்பு |
|---|---|---|
| 1-26 | விலங்குகளின் இளமைப்பெயர் | --- |
| 27-34 | உயிர்களின் பாகுபாடு : ஒன்று முதல் ஆறு அறிவு கொண்ட உயிர்கள் | பிற்சேர்க்கை |
| 35-70 | விலங்குகளின் ஆண் - பெண் பெயர்கள் | --- |
| 71-85 | அந்தணர், அரசர், வைசிகர், வேளாளர் இலக்கணம் | பிற்சேர்க்கை |
| 86-90 | தாவரங்களின் உறுப்புப் பெயர் | --- |
| 91-94 | மரபு திரியாமல் செய்யுள் செய்யவேண்டும் | --- |
| 95-112 | நூலின் இலக்கணம் - முதல்நூல், வழிநூல் - சூத்திரம், காண்டிகை, உரை - நூலின் குற்றங்கள் - நூலின் உத்திகள் | பிற்சேர்க்கை |

‘112’ மரபியல் நூற்பாக்களில், தொல்காப்பியர் இயற்றியவை விலங்குகளின் இளமைப்பெயர், ஆண்-பெண் பெயர்கள், தாவரங்களின் உறுப்புப்பெய

ர், மரபு திரிதல் கூடாது என்பவற்றைச் சொல்லும் '71' நூற்பாக்களே ஆகும். எஞ்சிய '41' நூற்பாக்கள் பிற்காலத்தவரால் எழுதப்பட்ட பிற்சேர்க்கைகளாகும். உயிர்களின் பாகுபாடு, நால்வருணப் பாகுபாடு, இலக்கிய நூலின் இலக்கணம் ஆகியவற்றை இந்தப் பிற்சேர்க்கைகள் கூறுகின்றன"[134] என்று விளக்கியுள்ளார். இதில் உயிரினப் பாகுபாடும் இடைச்செருகலே என்பது இவரது கருத்தாகும்.

**தமிழண்ணல்**

"தொல்காப்பியர் 'மரபியலில்' வகுத்திருப்பது பெரிதும் அகத்திணைப் பாடல்களுக்கென்றே தோற்றுகிறது. அவற்றில்தான் கருப்பொருள்கள் என மரம், செடி, கொடி முதல் விலங்கு, பறவை இனம் வரை வருகின்றன. அவற்றின் இளமைப்பெயர்கள், ஆண்பாற் பெயர்கள், பெண்மைப்பெயர்கள் பட்டியலிடப்படுகின்றன. யானை 'மேய்ப்பவன்' பாகன் ; ஆடு மேய்ப்பவன் இடையன். இவை இரண்டும் ஒரு தன்மைபட்ட தொழிலினவாயினும் மாற்றிக் கூறல் கூடாது. உலக வழக்குப் பற்றி, இலக்கியத்துள்ளும் ஆளப்படுவது இது.

தொடர்ந்து மக்களின் குல மரபு வருவது வியப்பாக உளது (1570-1584). அதன் பிறகு மீண்டும் மரங்கள் பற்றியும் அவற்றின் உறுப்புக்கள் பற்றியும் வருகிறது. பின்னர் நூலின் மரபு என ஒன்று மிக விரிவாக இடம்பெற்று முடிகிறது.

பொருளதிகாரம் - செய்யுளியலுட்படப் பெரிதும் திணையிலக்கியம் பற்றியே அமைகிறது. அதிலும் குறிப்பாக அகத்திணைக்கே பேரிடம் தருகிறது. இம்மரபியலாலும் அது விளங்குகிறது.

குலமரபு பற்றி வருவனவும் நூன்மரபு பற்றி வருவனவும் இடைச்செருகல்களே என்பது, தொல்காப்பியத்தை ஐயமற, ஆழமாகப் பயின்ற அறிஞர் முடிபு. திணைப் பாடல்களில் அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் என்று குல

த்தொழில்கள் பற்றி யாண்டும் வரவில்லை. வைசியர் என்பது மிகப்பிற்பட்ட காலத்து வழக்கு. நூல், அதன் உட்பிரிவுகள், சூத்திரம், அதன் உரை பற்றிய யாவும் செய்யுளியலுள் வந்துள்ளன. மீண்டும் மரபியலில் அவை இடம்பெறுவது கூறியது கூறியதலாகும். தொல்காப்பியர் 'முறைப்பட எண்ணிப் புலம் தொகுத்துப் போக்கு (குற்றம்) அற்ற பனுவல்' படைத்தவர். அவர் இவ்வாறு எழுதியிருப்பர் என எண்ணுவது தவறான முடிபாகும்"[135] என்று இடைச்செருகல்கள் குறித்த சிந்தனைக்கு வலுச்சேர்த்துள்ளார்.

**இரா.இளங்குமரனார்**

"இவ்வியலில் விடுபாடு உண்டு ; இடைப்பாடு உண்டு ; முன்பின் தள்ளல் உண்டு ; பொருந்தாச் சேர்ப்பும் உண்டு ; மரபு காக்கவென்றே ஆக்கப்பட்ட அருமையமைந்த இவ்வியலில் உள்ள மரபுக்கேடுகள் பலப்பல."[136]

"இடைச்செருகல் உண்டென்பதற்குத் தக்க சான்றுகளும் உள. அவற்றுள் மிகவாகக் கிடப்பது மரபியலிலேயேயாம்.

தொல்காப்பியரின் மரபியல் கட்டொழுங்கு மரபியலிலேயே அமைந்துகிடத்தல்திட்டமிட்ட திணிப்பு என்பதை உறுதிப்படுத்துகின்றது.

'மாற்றருஞ் சிறப்பின் மரபியல்' என்று மரபிலக்கணம் கூறி மரபியலைத் தொடுக்கும் அவர் இளமைப்பெயர், ஆண்பாற்பெயர், பெண்பாற்பெயர் ஆகியவற்றைக் குறிக்கிறார். அக்குறிப்பொழுங்குப்படியே இளமைப்பெயர்கள் இவை இவை இவ்விவற்றுக்குரிய என்பதை விளக்கி முடித்து,

"சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையல திலவே"

என நிறைவிக்கிறார். அடுத்து ஓரறிவு உயிரி முதல் ஆறறிவுடைய மாந்தர் ஈறாக ஆண்பால், பெண்பால் பெயர்களை விளக்க வரும் அவர் ஓரறிவு தொடங்கி வளர்நிலையில் கூறி எடுத்துக்காட்டும் சொல்லி ஆண்பாற் பெயர்களையும் பெ

*பண்பாற்பெயர்களையும் இவை இவை இவற்றுக்குரிய என்பதை விளக்கி நிறைவிக்கிறார்.*

*ஆண்பால் தொகுதி நிறைவுக்கும் பெண்பால் தொகுதித் தொடக்கத்திற்கும் இடையே*

*"ஆண்பா லெல்லாம் ஆணெனற் குரிய*
*பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய*
*காண்ப அவையவை அப்பா லான"*

*என்கிறார். பின்னர் பெண்பாற்பெயர்களைத் தொடுத்து முடித்து,*

*"பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே"*

*என்று இயல் தொடக்கத்தில் கூறிய பொருளெல்லாம் நிறைந்த நிறைவைச் சுட்டுகிறார். ஆனால் இயல் நிறைவுறாமல் தொடர்நிலைக் காண்கிறோம். எப்படி ?*

*"நூலே கரகம் முக்கோல் மணையே*
*ஆயுங் காலை அந்தணர்க் குரிய"*

*என்பது முதலாக வருணப் பாகுபாடுகளும் அவ்வவர்க்குரியவையும் 15 நூற்பாக்களில் தொடர்கின்றன. கூறப்போவது இவையென்று பகுத்த பகுப்பில் இல்லாத பொருள் கூற வேண்டுவ கூறி முடித்தபின் தொடரும் பொருள், 'மரபியல்' செய்தியொடு தொடர்பிலாப் பொருள் என்பன திகைக்க வைக்கின்றன.*

*நூலும் கரகமும் முக்கோலும் மணையும் படையும் கொடியும் குடையும் பிறவும் மாற்றருஞ் சிறப்பின் மரபினவோ? எனின் இல்லை என்பதே மறுமொழியாம்.*

*"வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை"*

*என்னும் நூற்பா நடை தொல்காப்பியர் வழிப்பட்டதென அவர் நூற்பாவியலில் தோய்ந்தோர் கூறார்.*

“வாணிகன் பெறுமே வாணிக வாழ்க்கை”

என நூற்கத் தெரியாரோ அவர்? இளமை ஆண்மை பெண்மை என்பன மாறா இயலவை. பிறவியொடு வழிவழி வருபவை. நூல், கரகம் முதலியன பிறவியெ ாடு பட்டவை அல்ல. வேண்டுமாயின் கொள்ளவும் வேண்டாக்கால் தள்ளவு ம் உரியவை. முன்னை மரபுகள் தற்கிழமைப் பொருள ; பிரிக்க முடியாதவை. பின்னைக் கூறப்பட்டவை பிறிதின் கிழமைப் பொருளவை ; கையாம் தற்கிழ மைப் பொருளும், எழுதுகோலாம் பிறிதின் கிழமைப் பொருளும் ‘கிழமை’ எ ன்னும் வகையால் ஒருமையுடையவை ஆயினும் ஒருமையுடையவை என உ ணர்வுடையோர் கொள்ளார்.

இவ்வொட்டு நூற்பாக்கள் வெளிப்படாதிருக்க ஒட்டியிருந்த ‘புறக்காழ், ’ ‘அகக்காழ்,’ ‘இலைமுறி,’ ‘காய்பழம்’ இன்னவை பற்றிய ஐந்து நூற்பாக்களை ப் பின்னே பிரித்துத் தள்ளி ஒட்டா ஒட்டாய் ஒட்டி வைத்தனர். இதனை மேலோட்டமாகக் காண்பாரும் அறிவர்.

“நிலம் தீ நீர் வளி விசும்போ டைந்தும்”

என்னும் நூற்பாவே மரபியல் முடிநிலை நூற்பாவாக இருத்தல் வேண்டும்.

பின்னுள்ள ‘நூலின் மரபு’ பொதுப்பாயிரம் எனத்தக்கது. அது சிறப்புப் பாயிரத்தைத் தொடுத்தோ, நூன் முடிவில் தனிப்பட்டோ இருந்திருக்க வேண் டும். அதுவும் நூலாசிரியர் காலத்திற்குப் பிற்பட்டுச் சேர்த்ததாக இருத்தல் வே ண்டும். அதிலும் சிதைவுகளும் செறிப்புகளும் பல உள. “அவற்றுள், சூத்திரந்த ானே” என வரும் செய்யுளியல் நூற்பாவையும் (1425) “சூத்திரத்தியல்பென ய ாத்தனர் புலவர்” என வரும் மரபியல் நூற்பாவையும் (1600) ஒப்பிட்டுக் காண் பார் ஒரு நூலில் ஒருவர் யாத்ததெனக் கொள்ளார். மரபியல் ஆய்வு தனியாய் வு எனக் கூறி அமைதல் சாலும். இவ்வியல் நூற்பாக்கள் அனைத்திற்கும் இளம் பூரணர் உரையும் பேராசிரியர் உரையும் கிடைத்திருத்தலால் அவர்கள் காலத் திற்கு முன்னரே இம்மாற்றங்கள் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது தெளிவான

*செய்தி"[137] என்று மரபியலை உற்றறிந்து நோக்கி தெளிவுறும் வகையிலும், இடைச்செருகல்களின் கட்டமைவுகளையும் தெளிவுபடுத்தி நிறுவியுள்ளார்.*

**சி.யசோதா**

*"மரபியலில் 71 ஆவது செய்யுளில் தொடங்கி 85 ஆவது செய்யுள் வரை மனுதரும சாத்திரச் செய்திகளையும், அர்த்த சாத்திரக் கருத்துக்களையும் பிரதிபலிப்பதால் அவை இடைச்செருகல் எனக் கொள்ளப்படுகின்றன. மேலும் 95 முதல் 112 வரையான சூத்திரங்கள் அர்த்த சாத்திரம் கூறும் நூல்வகைகளையும், தந்திர உத்திகளையும் விளக்குகின்றன. எனவே மரபியலில் மொத்தம் '33' செய்யுட்கள் மட்டும் முறை பிறழ்ந்து கிடக்கின்றன. ஆசிரியரின் போக்குக்கு ஏற்ப மரபியல் அமைந்திலது"[138] என்று இடைச்செருகல்களைக் குறிப்பிடுகின்றனர்.*

**ச.வே.சுப்பிரமணியன்**

*"மரபில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் இவர்கள் பற்றிய மரபு செய்திகளும், நூல்கள் பற்றிய மரபுச் செய்திகளும், இடைச்செருகல்கள் என்று கருதுவதுண்டு. தொல்காப்பியர் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் இலக்கணம் கூறுவதால், நால்வகைப் பகுப்பு முறையெல்லாம் நம் முன்னோரிடம் இல்லை."[139]*

*"1570 முதல் 1584 வரை வருணாசிரமம் பற்றியவை. இவை பற்றிய உணர்வுகள் தொல்காப்பியருக்கு இருந்ததாக முன்பகுதிகளில் தெரியவில்லை. அதனால் அவை இடைச்செருகல்கள் என்பதில் ஐயமில்லை. அதேபோன்று 1590 முதல் 1610 வரை செய்யுளியல் தொடர்பான செய்திகள் மறுபடியும் கூறப்பெறுவன போல் தோன்றுகின்றன. அவையும் இடைச்செருகல்களாக இருக்கலாம்"[140] என்று இடைச்செருகல்களைக் குறிப்பிட்டுள்ளார்.*

**சு.இராசாராம்**

"இடைச்செருகல்கள் பொதுவாக முந்திய மரபோடு கருத்தோட்டத்தை இணைத்துச் செல்லவும், உரையாசிரியர் மற்றும் பதிப்பாசிரியரின் சமகால வழக்கில் ஏற்பட்டுள்ள மொழி மாற்றங்களை இணைத்துக் கூறவும் போதுமான விளக்கம் இல்லாத போது கூடுதல் விளக்கம் அளிக்கவும் உரையாசிரியரும் பதிப்பாசிரியரும் மேற்கொள்ளும் முயற்சிகளாகும். இம்முயற்சிகளுக்கு நூலாசிரியர் மற்றும் பதிப்பாசிரியர் காலத்திற்கு இடைப்பட்ட காலத்தில் வழக்கில் ஏற்படும் மாற்றங்களை முக்கியக் காரணங்களாகக் குறிப்பிடலாம்"[141] என்று இடைச்செருகல்கள் ஏற்படுவதற்கான காரணங்களையும், அவற்றை உட்புகுத்திய திறத்தினையும் சுட்டிக்காட்டுகின்றார்.

மேற்கண்ட பன்னிரு சான்றோர் பெருமக்கள், மரபியலுள் கட்டமைத்த இடைச்செருகல்களென்று தொழில் மரபுகளையும் நூல் மரபுகளையும் சுட்டிக் காட்ட ; இவர்களுள் வி.பி.புருஷோத்தமன் மட்டும் மேற்சுட்டிய இரண்டுடன் 'உயிரினப் பாகுபாடுகளையும்' இடைச்செருகல் என்று குறிப்பிடுகிறார். கடை அறிஞர் இங்குப் புறநடையாளராகத் திகழ்கிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தொகுப்புரை**

- *மரபு இயற்கை தழுவியது, வாழ்வு மரபுடையது, இலக்கியம் வாழ்விலிருந்து மலர்ந்தது. ஆகவே அதுவும் மரபுடையதாயிற்று. இலக்கியம் அறிவோர்க்கு மரபு பற்றிய அறிவு இன்றியமையாதது. இலக்கியங்களை ஆராய்ந்த தொல் காப்பியர் அவற்றில் அமையவேண்டிய மரபுகளை மரபியலுள் வடிவமைத் துள்ளார். தொல்காப்பியத்துள்ளும் நூன்மரபு தொடங்கி மரபியலில் நிறை வுசெய்து 'மரபு' என்பதனைத் தொல்காப்பியரும் காத்துள்ளார் என்பதை அ றியமுடிகின்றது.*
- *மரபுடன் புணர்ந்த இயல், மரபியல். மரபு, இயல், மரபியல் ஆகியவற்றிற்கு அகராதிகள், நிகண்டுகள் முதலியன விளக்கங்கள் தருகின்றன. 'மரபு' எனும் சொல்லிற்கு ; இயல்பு, இலக்கணம், ஒழுக்கம், குடிவழி, குணம், சந்ததி, சா ன்றோரின் சொல்வழக்குமுறை, தந்தைவழி, தன்மை, தாய்வழி, நல்லொழுக் கம், நியாயம், பயிற்சி, பரம்பரை, பருவம், பழமை (பழைமை), பாடு, பார ம்பரியம், பெருமை, முறைமை, மேம்பாடு, வமிசம், வழக்கம், வழக்குமுறை , வழிபாடு எனக் குறிப்பிடுகின்றன. 'இயல்' என்னும் சொல்லின் பொருண் மைகளாக ; அசைதல், அரசியல், அழகு, அன்பு, ஆகமம், ஆற்றல், இசை, இந்திரகோபம், இயங்குதல், இயல, இயலாத, இயலாமல், இயலுதல், இயெ லன்னேவல், இயல், இயல்பு, இயற்கை, இயற்பாட்டு, இயற்றமிழ், இயற்றுத ல், இயன்றது, இயன்றால், இலக்கணம், இலக்கிய இலக்கணம், உட்பிரிவு, உழுவலன்பு, ஒத்து, ஒப்பு, ஒப்புமை, ஒழுக்கம், ஒழுங்கு, ஓத்து, குணம், கூடி யதாயிரு, கூறுபாடு, சாயல், சுகுமாரதை, செய்தி, செலவு, சொல், தகுதி, தம் பலப்பூச்சி, தன்மை, திவ்யபிரபந்தத்தைக் குழுவாக நின்று ஓதுகை, தெரிநி ல வினைப்பகுதி ; நட, நடை, நாட்டியத்தாளம், நூல், நூலின் உட்பிரிவு, நூ லின் பகுதி, நூற்பொருட்பாகுபாடு, பகுதி, பெருமை, பொருந்துதல், பொரு ந்தென்னேவல், பொருள், பொன், மாயை, மாறுபாடு, மென்மை, வழிபாடு, விதி எனப் பொருள் தருகின்றன. முன்னோர் வழங்கிய சொல்வழக்கைக் கூ றும் இலக்கணப் பகுதி, சொல் வழங்கும் மரபைக் கூறும் இலக்கணப்பகுதி,*

உயிரினங்கள் எவ்வாறு பண்பு நலன்களைப் பெறுகின்றன, மரபிலக்கணம் என்று மரபியலுக்கு விளக்கங்கள் தந்துள்ளன. இவையே மரபு, இயல், மரபியல் என்பவற்றின் விளக்கங்களென்று தெளிய முடிகின்றது.

- மரபு என்பதற்குத் தொன்றுதொட்டு வருவது, அறிவான் உயர்ந்தோரால் உண்டாக்கப்பட்டு வழக்கமாகப் பயன்பாட்டில் வழங்கிவருவது. அவற்றை வழங்கிய முறைப்படியே கூறி, காரண காரிய இயைபுக்கு உட்பட்டு விளக்கப்படுகின்ற நெறிமுறைகளன்றி உயர்ந்தோர் வழக்காக அமைந்த கருத்துக்கள் எனச் சுட்டுகின்றனர். மரத்திலிருந்து வித்து, வித்திலிருந்து மரம் இப்படியே மாறி மாறி மரமும் வித்தும் தொடர்ந்து வருதல் மரத்தின் இயல்பு. இது மரபின் இயல்புமாக அமையப்பெறுகிறது. மரபானது எழுதப்படாத சட்டம், இதனைச் சமூகம் உள ஒருமைப்பாட்டால் உருவாக்குகின்றது. இது சமுதாய நலன் கருதி உருவாக்கப்பட்டு வழக்கமாகத் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்பட்டு, மரபை மீறாமலும் மாற்றாமலும் வளர்ச்சியைக் காட்டும் இலக்கியத்தின் தனித்திற வெளிப்பாடுகளாகும் என்று பல்வேறு கருத்துக்களைத் தருகின்றார்கள்.
- 'மரபு' எனும் சொல் தொல்காப்பியத்துள், எழுத்ததிகாரத்தில் 'பத்து (10)' இடங்களிலும், சொல்லதிகாரத்தில் 'இருபத்தைந்து (25)' இடங்களிலும், பொருளதிகாரத்தில் 'ஐம்பத்தினான்கு (54)' இடங்களிலும் என 'எண்பத்தொன்பது (89)' இடங்களில் ஏறுமுகமாகக் காணப்படுகிறது. சங்க இலக்கியங்களில் 'தொண்ணூற்றியிரண்டு (92)' இடங்களில் நற்.5, குறுந்.3, ஐங்.2, பதிற்.17, பரி. 13, கலித்.2, அகநா.11, புறநா.19, திருமுரு.3, பெரும்பாண்.4, சிறுபாண்.4, மதுரக்.2, குறிஞ்சி.1, பட்டினப்.1, மலைபடு.5 என பயின்று வந்துள்ளது. மேலும் இச்சொல்லானது இயல்பு, இலக்கணம், தகுதி, தன்மை, பண்பு, குணம், பரம்பரை, பழைமை, பெருமை, மரபு, முந்தையோர் முறை, முறை, முறைமை, மேம்பாடு, வரலாற்றுமுறைமை, வழக்குமுறை, வழிபாடு, வழிமுறை எனும் பொருண்மைகளைத் தருவதனை இந்நூல்களின் வழி அறியமுடிகிறது.

♦ தொல்காப்பியத்தில் பிறப்பியல், புணரியல், உருபியல், உயிர் மயங்கியல், வேற்றுமையியல், மெய்ப்பாட்டியல் ஆகிய இயல்களைத் தவிர்த்து ஏனைய இயல்களுள் 'மரபு' குறித்த சொல் எடுத்தாளப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகை நூற்கள் அனைத்திலும், பத்துப்பாட்டுள் பொருநராற்றுப்படை, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை நீங்கலாக ஏனைய நூற்களில் 'மரபு' என்னும் சொல் எடுத்தாண்டுள்ளமையைக் காண முடிகின்றது.

♦ 'மரபு' எனும் சொல் பெரும்பான்மையாகத் தொல்காப்பியத்துள் இலக்கணத்தைக் குறித்ததாகவும், சங்க இலக்கியங்களுள் முறைமையைச் சுட்டுவதாகவும் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

♦ மரபு என்பது முன்னோர்களால் வழங்கப்பட்ட வழக்குமுறைகள் காலப்போக்கில் மரபாக அமையப்பெற்றுள்ளமையை அறியலாகின்றது.

♦ பன்னெடுங்காலமாகக் குறிக்கப்பட்டு வழக்கில் கொண்டு, கையாளுகின்ற பொருண்மைகள், வழக்காறுகள், சொற்பெயர்கள், குறிப்பு நிலைகள் மரபாக வழங்கப்பட்டுவந்தன. அவற்றைக் காப்பது பெருமைக்குரியதாகவும் காக்க வேண்டியது போற்றுதலுக்கும் சிறப்பிற்கும் உரியதாகுமென்று சுட்டியுரைப்பது அவசியமாகின்றது.

♦ முன்னோர் வழங்கிய சொல் முறைமைகளை முறைபிறழாது சுட்டியுரைக்கின்ற பொழுது அதன் இயல்பு தனித்துவம் நமக்குப் புலப்படுவதில்லை. அவ்வாறு சுட்டிய முறைமைகளை மாற்றும் பொழுதும் புது முறைமைகளையும் வகுக்கப்பட்ட இலக்கணங்களையும் மாற்றி உட்புகுத்த முயலும் பொழுது மரபுப்பெயர்களின் தனித்துவம் அவசியமென்பதை அறியமுடிகின்றது.

♦ தமிழில் தோன்றிய பிற இலக்கண நூல்களில் 'மரபியல்' இடம்பெறாத போதும் காலத்தாற் முற்பட்ட தொல்காப்பியத்தில் தனியொரு இயலாக வகுக்கப்பெற்று '112' நூற்பாக்களுடன் தனிப்பெருமையைக் கொண்டிலங்குவது தொல்காப்பியர் மரபியலுக்குக் கொடுத்த முதன்மையை நமக்குப் புலப்படுத்துகிறது.

- மரபுச் சொற்கள் மாறாமல் இலக்கியங்களுள் படைப்பாக்கம் பெறுவதன் வ ாயிலாகப் படைப்பானது கருத்து நுகர்வோருக்குச் சென்று சேரும் நிலையில் அதுவே மரபியலின் பயனாகும் என்பதனைத் தெளியச் செய்கின்றது.
- 'மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்' எனத் தொடங்கி நூலின் முப்பத்தி ரண்டு உத்திகளுடன் நிறைவு பெற்றுள்ள 'மரபியல்' தொல்காப்பியத்தின் க டை இயலாக அமையப் பெற்றுள்ளது. இவ்வியலுள் அமைந்துள்ள நூற்பாக் களை '112' ஆக இளம்பூரணரும், '110' ஆகப் பேராசிரியரும் குறிப்பிடுகின் றனர்.
- இவ்வோத்து இவ்இயலிற்குக் கூறப்பட்ட பொருட்கு மரபு உணர்த்தினமை யால் மரபியல் என்னும் பெயர்த்து ; விலக்கருஞ் சிறப்பின் மரபிலக்கணம் கூ றின்; விலக்குதற்கு அரிய சிறப்பினையுடைய மரபுச் சொற்களின் இலக்கணங்க ளைக் கூறுமிடத்து; மாற்றிச் சொல்லுதற்கு அரிய, மாற்றுதற்கு அருமையா ன சிறப்பினையுடைய முறைமையைக் கூறும் பகுதி ; பிறிதொன்றனொடு ஒ ப்பிட்டுக் கூறுதற்கரிய சிறப்பினையுடைய மரபிலக்கணம் என்பன 'மாற்றரு ஞ் சிறப்பின் மரபியல்' என்பதற்கு எடுத்துரைக்கப்பட்ட உரை விளக்கங்கள ாக அமைகின்றன.
- உலக வழக்கிற்கும் இலக்கிய வழக்கிற்கும் பொதுவான மரபுப் பெயர்கள் இ ளமை, ஆண் - பெண்பாற்குரிய பெயர்களாகும் என்பதனை மரபியலின் வ ழி அறியமுடிகிறது.
- இளமை, ஆண் - பெண்பாற்பெயர்களுக்கென்று முதல் மூன்று நூற்பாக்களு ள் தொகுக்கப்பட்டுள்ளன.
- நான்காவது நூற்பா முதல் இருபத்தைந்தாம் நூற்பா வரை இளமைப் பெயர் பெறும் உயிரினங்கள் வகுத்துரைக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியர் 'போத் து' என்பதனைத் தொகுத்தவற்றுள் குறிக்காது, வகுத்துரைக்கின்ற நிலையில் ஓரறிவுயிர்களுக்குரியவென்று குறிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இ ருபத்தாறாம் நூற்பா புறனடையாக அமையப்பெற்றுள்ளது.

♦ உயிரினப் பாகுபாடுகள் குறித்து இருபத்தேழாம் நூற்பா முதல் முப்பத்திநான்காம் நூற்பா வரை 'எட்டு' நூற்பாக்களுள் விளக்கப்பட்டுள்ளன.

♦ ஆண்பாற்பெயர்கள் பதினைந்தும் பிறவுமென்று தொகுத்துக் கூறி ; வகுத்தவற்றுள் 'எருது,' 'சே,' 'கண்டி,' 'கடுவன்' என்ற நான்கினைப் பற்றிக் குறிப்பிடவில்லை. இவற்றுள் 'கண்டி,' 'கடுவன்' மட்டும் சிறப்பு வழக்காறுகளுள் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

♦ பெண்பாற்பெயர்களென்று தொகுத்தவைகளான பேடை முதல் பிடி ஈறாக பதிமூன்றும் ; உயிரினங்களுக்கு வகுத்துரைக்கின்ற பொழுது சுட்டடப்பட்டுள்ள 'பிணவல்,' 'ஆ,' 'பிணா' ஆகிய மூன்றும் தொகுத்தவற்றுள் இடம் பெறாதவைகளாகும்.

♦ தொல்காப்பியர் மக்கள் குறித்துச் சுட்டுவது திணை சார்ந்த வகைமைக்குட்பட்டதேயாகும். இவர் 'சாதி' என்ற சொல்லை மரபியலுள் '44,' '64' ஆகிய இரண்டு நூற்பாக்களில் சுட்டியுள்ளார். ஏனைய நூற்பாக்களில் இச்சொல் இடம்பெறவில்லை. அதுவும் வகைமையைக் குறிக்கும் பொருட்டு இவை பயின்று வந்துள்ளதை அறியமுடிகின்றது.

♦ மரபியலுள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்போர் தொழில் மரபுக்குரியவர்களென்று 71 ஆம் நூற்பா முதல் 85 ஆம் நூற்பா வரை விளக்கப்பட்டுள்ள இப்பகுதி முரண்பாட்டிற்கு உரியதென்பதனை அறியலாகின்றது.

♦ புல் - மர வேறுபாடுகள், உறுப்பு வகைகள், இரண்டிற்கும் பொதுவானவையென்று 'ஐந்து' நூற்பாக்களுள் இவை இடம்பெற்றுள்ளன.

♦ உலக இயல்பும் அவற்றில் மரபாகக் கூறப்படும் சொற்களை மாற்றிக் கூறாது உரிய சொற்களை எடுத்தோம்புதல் வேண்டுமென்பதன் ஆணையும் நோக்கத்தக்கது.

♦ மரபின் இன்றியமையாமையை 92, 93, 94 ஆம் நூற்பாக்களின் மூலம் அறிய முடிகின்றது.

- தொல்காப்பியத்தில் முதல் இயலாக அமையப்பெற்றுள்ளது நூன்மரபு ஆகும். சொல்லதிகாரப் புறனடையில் 'நூல் நெறி பிழையாது' (தொல். எச்சவி. 67) எனச் சுட்டடப்பட்டுள்ளது. பொருளதிகாரச் செய்யுளியலுள் இலக்கிய உறுப்புக்களும், நூலின் இலக்கணமும், உட்பிரிவுகளும், சூத்திரமும், உரை முதலானவையும் இடம்பெற்றுள்ளன. இவற்றை விடுத்தும் முரண்பாட்டிற்கு ஆட்பட்டும் மரபியலுள் நூலின் மரபுகளென்று தனியாக வகுக்கப்பெற்று 'பதினெட்டு (18)' நூற்பாக்களில் விளக்கப்பட்டுள்ளமையும் கவனித்தற்குரியது.
- மரபியலுள் தொழில்மரபு, நூன்மரபு ஆகிய இரண்டும் இடைச் செருகல்களே என்று பன்னிரு சான்றோர் பெருமக்கள் சுட்டிக் காட்ட; வி.பி.புருஷோத்தமன் என்பார் மட்டும் மேற்சுட்டிய இரண்டுடன் 'உயிரினப் பாகுபாடுகளையும் இடைச்செருகல் என்று நிறுவியுள்ளார். இவ் அறிஞர்களின் கருத்துப்படி தொழில் மரபும் நூல்மரபும் இடைச்செருகல்கள் என்பதனை உய்த்துணரமுடிகின்றது. கடை அறிஞரின் கருத்தானது புறனடையாக அமையப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்


1. *பி.இராமனாதன், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி,* Vol.2, *ப.192*
2. Published under the authority of the University of madras, Tamil Laxicon, vol.I, Part.I, P.3085, 3086
3. *ப.கணேசமுதலியார் (உ.ஆ.), சூடாமணி நிகண்டு, ப.45*
4. V.Visvanathapillai, A Tamil - English Dictionary, P.608
5. *நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ் மொழி அகராதி, ப.1124*
6. *ந.சி.கந்தையா, செந்தமிழ் அகராதி, ப.590*
7. J.P.Rottler, A Dictionary Tamil and English, Part IV, P.28
8. *செந்தமிழ் அறிஞர் மாருதிதாசன், கே.மாணிக்க முதலியார், என்.அங்கமுத்து, என்.கலைவாணி, எஸ்.பத்மாவதி (ப.ஆ.), நர்மதாவின் தமிழ் அகராதி, ப .724*
9. *எஸ்.இராமகிருஷ்ணன் (ப.ஆ.), க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.810*
10. *ப.அருளி (ப.ஆ.), அருங்கலைச் சொல் அகர முதலி, ப.1122*
11. *ஐயன்பெருமாள் கோனார், கோனார் தமிழ் அகராதி, ப.513*
12. *ச.பவானந்தம் பிள்ளை, பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி, ப.379*
13. *த.கோவேந்தன், சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், ப.224*
14. *ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி (தமிழ்க் கலைக்களஞ்சியம்), ப.1538*
15. *ச.வே.சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.934*
16. *கழகப்புலவர் குழு, கழகத் தமிழ் அகராதி, ப.342*
17. *எஸ்.கௌமாரீஸ்வரி (ப.ஆ.), கௌரா தமிழ் அகராதி, ப.548*
18. S.V.Subramanian, Tolkaappiyam and other Indian Grammatical treatises, P.90
19. *சு.இலம்போதரன் (ப.ஆ.), திவாகர அகராதி (நிகண்டு), ப.136*

20. பி.இராமனாதன், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, Vol.I, ப.196

21. Published under the authority of the University of madras, Tamil Laxicon, vol.I, P.301

22. ப.கணேச முதலியார் (உ.ஆ.), சூடாமணி நிகண்டு, ப.45

23. V.Visvanathapillai, A Tamil - English Dictionary, P.103

24. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.218

25. இரா.சாரங்கபாணி (ப.ஆ.), சங்க இக்கியப் பொருட்களஞ்சியம், ப.231

26. முத்து.சண்முகம்பிள்ளை (ப.ஆ.), பெருஞ்சொல் அகராதி, தொகுதி 2, பக். 417, 418, 419

27. ந.சி.கந்தையா, செந்தமிழ் அகராதி, ப.50

28. இரா.மதிவாணன், செந்தமிழ் சொற்பிறப்பியல் பேரகர முதலி, பக்.300, 30 1

29. J.P.Rottler, A Dictionary Tamil and English, Part I, P.164

30. செந்தமிழ் அறிஞர் மாருதிதாசன், கே.மாணிக்க முதலியார், என்.அங்கமுத் து, என்.கலைவாணி, எஸ்.பத்மாவதி (ப.ஆ.), நர்மதாவின் தமிழ் அகராதி, ப .97

31. எஸ்.இராமகிருஷ்ணன் (ப.ஆ.), க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, பக்.1 00, 101

32. ஐயன்பெருமாள்கோனார், கோனார் தமிழ் அகராதி, ப.68

33. ச.பவானந்தம் பிள்ளை, பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி, ப.57

34. த.கோவேந்தன், சங்க இலக்கியச் செய்திக்களஞ்சியம், ப.87

35. ச.வே.சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.136

36. கழகப்புலவர் குழு, கழகத் தமிழ் அகராதி, ப.113

37. எஸ்.கௌமாரீஸ்வரி (ப.ஆ.), கௌரா தமிழ் அகராதி, ப.87

38. S.V.Subramanian, Tolkappiyam and other Indian Gramatical treatises, P.90

39. சு.இலம்போதரன் (ப.ஆ.), திவாகர அகராதி (நிகண்டு), ப.120

40. Published under the authority of the University of madras, Tamil Laxicon, vol.V, Part.I, P.3085

41. ந.சி.கந்தையா, செந்தமிழ் அகராதி, ப.590

42. ச.வே.சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.934

43. செந்தமிழ் அறிஞர் மாருதிதாசன், கே.மாணிக்க முதலியார், என்.அங்கமுத்து, என்.கலைவாணி, எஸ்.பத்மாவதி (ப.ஆ.), நர்மதாவின் தமிழ் அகராதி, ப.724

44. எஸ்.இராமகிருஷ்ணன் (ப.ஆ.), க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.810

45. கழகப்புலவர்குழு, கழகத் தமிழ் அகராதி, ப.742

46. எஸ்.கௌமாரீஸ்வரி (ப.ஆ.), கௌரா தமிழ் அகராதி, ப.548

47. மு.இராகவையங்கார், தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி, ப.172

48. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப.250

49. லெ.ப.கரு.இராமநாதன், தொல்காப்பியச் செல்வம், ப.97

50. மா.இராசமாணிக்கனார், தமிழ் மொழி இலக்கிய வரலாறு (சங்ககாலம்), ப.92

51. சிற்பி பாலசுப்பிரமணியன், மரபுக் கவிதை, தமிழில் இலக்கிய வடிவங்கள், ப.72

52. நா.செயராமன் (க.ஆ.), இலக்கண ஆய்வடங்கல் (எழுத்தும் சொல்லும்), முதல் தொகுதி, ப.539

53. ச.சிவகாமி, செவ்வியல் தமிழ் ஆய்வுகள், ப.2

54. சா.கிருஷ்ணமூர்த்தி, உரைச்சொற் களஞ்சியம், ப.204

55. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.28

56. க.தமிழரசன், நன்னூல் காண்டிகை, ப.185

57. க.வெள்ளைவாரணன், தொல்காப்பிய மரபியல் உரைவளம், ப.5

58. வி.பி.புருஷோத்தமன், தொல்காப்பியம் ஒரு கண்ணோட்டம், ப.149

59. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.396

60. மருதூர் அரங்கராசன், தமிழில் மரபுத் தொடர்கள், ப.36

61. இரா.இளங்குமரனார், தொல்காப்பிய மரபியல் ஆராய்ச்சி, ப.1

62. சே.செந்தமிழ்ப்பாவை (இரா.பாலசுப்பிரமணியன், அணிந்துரை), சங்கப் பாடல்களில் மரபு மாற்றங்கள், ப.9

63. க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.15

64. க.காந்தி, (கரு.அழ.குணசேகரன், அணிந்துரை) தமிழர் பழக்கவழக்கங்களு ம் நம்பிக்கைகளும், ப.I

65. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.48

66. தமிழண்ணல், தொல்காப்பிய இலக்கிய இயல், ப.14

67. தமிழண்ணல், செவ்விலக்கியச் சிந்தனைகள், பக்.87, 88

68. ச.சிவகாமி, செவ்வியல் தமிழ் ஆய்வுகள், ப.3

69. அ.ச.ஞானசம்பந்தன், தமிழ்க்கலை, பக்.371, 372

70. சு.இராசாராம், இலக்கணவியல் மீட்கோட்பாடும் கோட்பாடுகளும், ப.10 7

71. மேலது, ப.154

72. ஓ.முத்தையா (க.ஆ.), வளர்தமிழ் ஆய்வு, தொகுதி-3, ப.181

73. சு.இராசாராம், சங்கத் தமிழர் கருத்தியல் மரபு (நூன்முகம்)

74. ஜெ.சந்தியா சந்திரசேகரன் (க.ஆ.), பல்துறை நோக்கில் தொல்காப்பியம், தொகுதி-1, ப.185

75. சு.வேலாயுதம் (க.ஆ.), பல்துறை நோக்கில் தொல்காப்பியம், தொகுதி-1, ப.401

76. கு.மோகனராசு, திருக்குறளில் மரபுகள், ப.XI

77. தொல்காப்பியம், பெயரியல், நூ.1

78. தொல்காப்பியம், மரபியல், நூ.94

79. நன்னூல் பொதுவியல், நூ.388

80. ச.சிவகாமி, செவ்வியல் தமிழ் ஆய்வுகள், ப.8

81. தொல்காப்பியம், மரபியல், நூ.92

*82. மேலது, நூ.93*

*83. மேலது, அகத்திணையியல், நூ.48, மரபியல், நூ.95*

*84. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம், கழக வெளியீடு, ப.55 3*

*85. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பிய பொருளதிகார மூலமும் பேராசிரிய ருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.621*

*86. கே.பகவதி (ப.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம் உரைவளம், மரபி யல், ப.1*

*87. க.வெள்ளைவாரணன் (உ.ஆ.), தொல்காப்பியம், மரபியல் உரைவளம், ப. 5*

*88. தமிழண்ணல், தொல்காப்பியம், பொருளதிகாரம் (தொகுதி- 3), ப.143*

*89. ச.வே.சுப்பிரமணியன் (உ.ஆ.), தொல்காப்பியம் உரைவளக் கோவை, பொருளதி காரம் மரபியல், ப.60*

*90. மேலது, ப.63*

*91. ச.பாலசுந்தரம், தொல்காப்பியம், பொருளதிகாரம், ஆராய்ச்சிக் காண்டிகை கயுரை, செய்யுளியல் & மரபியல், ப.185*

*92. மு.சதாசிவம், இலக்கண ஆய்வடங்கல், தொகுதி - 2, ப.222*

*93. சொ.சிங்காரவேலன், தொல்காப்பியம் எளிய உரை (பொருள்.), ப.181*

*94. ச.சிவகாமி, செவ்வியல் தமிழ் ஆய்வுகள், ப.1*

*95. கா.சுப்பிரமணிய பிள்ளை, பழந்தமிழர் நாகரிகம், ப.160*

*96. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பிய பொருளதிகார மூலமும் பேராசிரிய ருரையும், பின்னான்கியல்கள் பாகம் இரண்டு, பக்.621-622*

*97. க.வெள்ளைவாரணன் (உ.ஆ.), தொல்காப்பியம், மரபியல் உரைவளம், ப. 6*

*98. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பிய பொருளதிகார மூலமும் பேராசிரிய ருரையும், பின்னான்கியல்கள் பாகம் இரண்டு, ப.624*

*99. மேலது, பக்.624-625*

100. மேலது, ப.632

101. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம் , கழக வெளியீடு, ப.558

102. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பிய பொருளதிகார மூலமும் பேராசிரி யருரையும், பின்னான்கியல்கள் பாகம் இரண்டு, ப.637

103. க.வெள்ளைவாரணன் (உ.ஆ.), தொல்காப்பியம், மரபியல் உரைவளம், ப .38

104. தமிழண்ணல், தொல்காப்பியம், பொருளதிகாரம், தொகுதி -3, ப.152

105. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம் , கழக வெளியீடு, ப.560

106. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசி ரியருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.641

107. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம் , கழக வெளியீடு, ப.561

108. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசி ரியருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.642

109. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம் இளம்பூரணம், கழக வெளியீடு, ப.561

110. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசி ரியருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.642

111. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம், கழக வெளியீடு, ப.561

112. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசி ரியருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.643

113. மேலது, ப.643

114. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம் , கழக வெளியீடு, ப.561

115. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசி ரியருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.643

116. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம் , கழக வெளியீடுடு, ப.561

117. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசி ரியருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.643

118. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம் , கழக வெளியீடு, ப.562

119. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம் மூலமும் பேரா சிரியருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, ப.644

120. மேலது, பக்.644-645

121. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம் , கழக வெளியீடு, ப.562

122. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.434

123. ஞா.தேவநேயப் பாவாணர், தமிழ் இலக்கிய வரலாறு, ப.48

124. பேராசிரியர் (உ.ஆ.), தொல்காப்பிய பொருளதிகார மூலமும் பேராசிரி யருரையும், பின்னான்கியல்கள், பாகம் இரண்டு, பக்.664-665

125. க.வெள்ளைவாரணன், தமிழிலக்கிய வரலாறு - தொல்காப்பியம், ப.16

126. மேலது, ப.305

127. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, பக்.249, 250

128. லெ.ப.கரு.இராமநாதன், தொல்காப்பியச் செல்வம், ப.102

129. சோ.ந.கந்தசாமி, தொல்காப்பியத் தெளிவு, பக்.21-22

130. தெ.பொ.மீனாட்சிசுந்தரம், தமிழ் மொழி வரலாறு, ப.69

131. மேலது, ப.70

132. ச.பாலசுந்தரம், தொல்காப்பியம், பொருளதிகாரம், ஆராய்ச்சிக் காண்டி கையுரை, செய்யுளியல் & மரபியல், பக்.218-219

133. மேலது, ப.221

134. வி.பி.புருஷோத்தமன், தொல்காப்பியம் ஒரு கண்ணோட்டம், பக்.137-13
9

135. தமிழண்ணல், தொல்காப்பியம், பொருளதிகாரம், தொகுதி-3, பக்.136-13
7

136. இரா.இளங்குமரனார், தொல்காப்பிய மரபியல் ஆராய்ச்சி, ப.IV

137. இரா.இளங்குமரனார், இலக்கண வரலாறு, பக்.94-96

138. சி.யசோதா (க.ஆ.), தொல்காப்பியம் காலமும் பண்பாடும், பக்.279-280

139. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் உரைவளக் கோவை, பொருளதிகாரம் ம
ரபியல், ப.56

140. மேலது, ப.60

141. சு.இராசாராம், இலக்கணவியல் மீக்கோட்பாடும் கோட்பாடுகளும், ப.151.

# சங்க அக இலக்கியங்களில் இளமைப்பெயர்கள்

ஒரு மொழிக்கு வளம் சேர்ப்பதும் சிறப்புத் தருவதும் அம் மொழியினிடையே வழங்கிவரும் மரபுச்சொற்களேயாகும். அவ்வகையினில் பண்டைத் தமிழகத்தில் பல்வேறு பகுதிகளில் வழங்கப்பட்ட வழக்குச் சொற்களைச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. தொல்காப்பியர் மரபுச் சொற்களைக் காக்கும் முகத்தான் மரபியலை இயற்றியுள்ளார். அவ்வியலில் முதன்மையாக எடுத்தோம்பியிருப்பது இளமைப் பெயர்களேயாகும். அப்பெயர்கள் தொகுத்தும் வகுத்தும் வரையறுக்கப் பட்டுள்ளன. இவ்இளமைப்பெயர்கள் சங்க அக இலக்கியங்களுள் இடம்பெற்றுள்ளமை குறித்து ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**இளமை**

இளமை என்பது சிறுபருவம், அறிவின்மை, மென்மை, குழவி, குழவு, மழவு, இளையதன்மை, இளவயதும் அந்த வயதுக்குரிய தன்மையும் என்பனவற்றைக் குறிப்பதாக அமைகின்றது.

**மரபியல் சுட்டும் இளமைப்பெயர்கள்**

தொல்காப்பியர் பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி, போத்து என்பன இளமைப்பெயர்களுக்குரியவென்று சுட்டியுள்ளார். தொல்காப்பியர் சொல்லாத இளமைப்பெயர்கள் குறித்து, “அணங்கு, கசளி, கயந்தலை, கரு, கருந்து, குஞ்சு, குருமன், குழந்தை, குன்னி, செள், சேய், நன்னி, நாகு, பொடி, முனி எனப் பலவுள. இவையெல்லாம் பிற்காலத்தனவென்று சொல்லமுடியாது”[1] என்கின்றார் ஞா.தேவநேயப்பாவாணர்.

**நிகண்டுகளில் இளமைப்பெயர்கள்**

சொற்களுக்குப் பொருள் விளக்கம் தரும் நிகண்டுகளில் இளமைப்பெயர்கள் பின்வருமாறு இடம்பெற்றுள்ளன.

**திவாகர நிகண்டு (9ஆம்நூற்றாண்டு)**

"இளைமை(16) : மழவு, நவ்வி, சேய், போதகம், மஞ்சு, குழவு, குருளை, கயம், இளை, புருவை, முருகு, தருணம், பீழ், பருவம், சேடு, கொம்மை"[2] என்று பதினாறு இளமைப்பெயர்களைக் குறிப்பிடுகிறது. இவற்றுடன்,

"யானைக்கன்று (4) : போதகம், துடியடி, கயம், முனி.

ஆட்டுக்குட்டி (5) : குட்டன், சோரன், மணங்கு, மறி, பறழ்.

விலங்கின் பிள்ளை (8) : குருளை, குட்டி, பறழ், பார்ப்பு, பிள்ளை, மறி, கன்று, குழவி.

குருளை, பறழ் : புலி, பன்றி, முயல், நாய், நரி.

பிள்ளை : நாயன்றிப் பெறும்.

மறி : ஆடு, மான், குதிரை, அழுங்கு.

கன்று : கடமை, யானை, குதிரை, கழுதை, மரை, எருமை, மான், ஒட்டகம், கவரி, கராம்.

குழவி : யானை, கடமை, எருமை, மரை, ஆன்.

பறழ் - குட்டி : வெருகு, பன்றி, அணில்.

குருளை, கன்று, குழவி :

குருளையும் கன்றும் ஆனில் கொளலும்,

குழவியும் குருளையும் முசுவிற் பெறலும்.

ஒரு சார் விலங்கின் பெயர்.

பிள்ளை - பார்ப்பு : பிள்ளையும் பார்ப்பும் தவழ் சாதி பெறும்.

ஏற்றை - குருளை : நந்தின் ஏற்றையும், அரவில் குருளையும் ஒருசார் வழங்குவர்.

குரங்கு முதலிய கோடு வாழ்விலங்கின்பிள்ளை : குழவி, மகவு, குட்டி, பிள்ளை, பறழ், பார்ப்பு.

பார்ப்பு, பிள்ளை : பறப்பவற்றிளமை"[3]

என்றும் மொழிந்துள்ளது.

**பிங்கல நிகண்டு**

பிங்கல நிகண்டு (10 ஆம் நூற்றாண்டு) இளமைப்பெயர்களைப் பின்வருமாறு சுட்டியுள்ளது. அவை, "மழவு, முருகு, தருணம், மஞ்சு, குழவு, விளர், கொம்மை, புருவை, கோமளம், போதகம் (10).

"மழவும் முருகுந் தருணமு மஞ்சுங்
குழவும் விளருங் கொம்மையும் புருவையுங்
கோமளமும் போதகமு மிளமையின் கூற்றே"[4]

என்பவையாகும்.

**விலங்கின் பிள்ளை மரபு**

"விலங்கின் பிள்ளை : குருளை, குட்டி, பறழ், பிள்ளை, மறி, கன்று, குழவி, பார்ப்பு, மகவு (9).

குருளையும் குட்டியும் பறழும் பிள்ளையும்
மறியுங் கன்றுங் குழவியும் பார்ப்பும்
மகவும் விலங்கின் பிள்ளைப் பெயரே" (2586)

அவற்றுள்,

குருளை, பறழ், குட்டி : புலி, முயல், பன்றி, நரி, நாய் (5). அவற்றுள்,

புலிமுயல் பன்றி நரி நாயென்றிவை
குருளையும் பறழுங் குட்டியுமாம் (2587).

பிள்ளை : நாய் ஒழிந்தவற்றிற்கு ஆம் (1).

பிள்ளைப் பெயர் நாயொழியப் பெறுமே (2588).

மறி : ஆடு, குதிரை, மான், அழுங்கு (4).

ஆடுங் குதிரையுமா னழுங்கு மறியெனல் (2589).

*கன்று : கலை, மான், கழுதை, மரை, பசு, எருமை, கடமை, யானை, ஒட்டகம், கவரி, கராம் (11).*

*கலையு மானுங் கழுதையு மரையும்*
*பசுவு மெருமையுங் கடமையும் யானையு*
*மொட்டகமுங் கவரியுங் கராமுங்கன் றென்ப (2590).*

*குழவி, மகவு, குட்டி, பறழ், பிள்ளை, பார்ப்பு : குரங்கு முதல் மரக்கோட்டில் வாழ் விலங்கின் பிள்ளைகட்காம்.*

*குரங்கு முதலாய்க் கோட்டில் வாழும்*
*விலங்கின் பிள்ளைப் பெயரினை விளம்பிற்*
*குழவியு மகவுங் குட்டியும் பிள்ளையும்*
*பறழும் பார்ப்புமப் பண்பா கும்மே (2591).*

*பறழ், குட்டி : வெருகு, நரி, முயல் (3).*
*வெருகு நரியு முயலு மென்றிவை*
*பறழும் குட்டியு மாகும் பண்பே (2592).*

*பிள்ளை, பார்ப்பு, பறழ் : தவழ் சாதிகட்கு ஆம்.*
*பிள்ளையும் பார்ப்பும் பறழுமென் பெயர்க*
*டள்ளருஞ் சிறப்பிற் றவழ்வன பெறுமே (2593).*

*குழவி : யானை, கடமை, மரை, எருமை, மான் (5).*
*யானையுங் கடமையு மரையு மெருமையு*
*மானுங் குழவிப் பெயரோ டடையும் (2594).*

*குருளை, கன்று : மான் (1)*
*குருளையுங் கன்று மானிற் கொளலே (2595).*

*குழவி : முசு (1).*

*குழவி முசுவின் குணநடை பெறுமே (2596).*

*பிள்ளை : சங்கேறு, மான் குருளை (2).*

*நந்தின் னேற்றையும் மானின் குருளையும்*

*வந்துழி யொருசார் வழங்கும்பிள்ளைப்பெயர் (2597).*

*பறழ், குட்டி : பாக்கன், அணில் (2).*

*(பாக்கன் - பூனை)*

*பாக்கனு மணிலும் பறழொடு குட்டி (2598).*

*பார்ப்பு, பிள்ளை : தவழ்சாதிகட்கு ஆம்.*

*பார்ப்பும் பிள்ளையுந் தவழ்சாதிக் குரிய (2599)"*[5]

*என்கிறது பிங்கல நிகண்டு.*

**சூடாமணி நிகண்டு** ***(16 ஆம் நூற்றாண்டு)***

*மக்கட்குரிய "பிள்ளைப் பன்மையின் பெயர் - குறுமக்கள், மகார், சிறார் ."*[6]

*"இளமையின் பெயர் - குருளை, மழவு, வெண்மை, குழவு, கோமளம், கொம்மை, புருவை, யௌவனம், நாகு, போதகம், தருணம், நவ்வி, முருகு, இளை (14)."*[7]

**விலங்கின் பிள்ளை மரபு**

*"பறழ்பிள்ளைகுழவிகுட்டிபார்ப்பொடுகுருளைகன்று*

*மறியேபோதகமிவ்வொன்பான்வல்விலங்கின்பிள்ளைப்பேர்*

*பறழொடுகுருளைகுட்டிபற்றியமூன்றுபேரும்*

*உறுபுலிமுயல்வராகமோதியநரிநாயாமே (37).*

*விலங்கின் பிள்ளைப் பெயர் - பறழ், பிள்ளை, குழவி, குட்டி, பார்ப்பு, குருளை , கன்று, மறி, போதகம் (9).*

*பறழ் குருளை குட்டி யென்னும் பெயர்கள் - புலி, முயல், வராகம், நரி, நாய் (5).*

*பிள்ளையென்னும் பெயர் - நாயொழிந்தவற்றிற்காம்.*

*மறியென்னும் பெயர் - ஆடு, அழுங்கு, மான், குதிரை (4).*

*பறழ் பிள்ளை குழவி குட்டி பார்ப்பென்னும் பெயர்கள் - குரங்கு முதன் மரக்கோட்டில் வாழ் விலங்கின் பிள்ளைகட்காம்.*

*கன்றென்னும் பெயர் - கடமை, மான், எருமை, பெற்றம், கவயம், ஒட்டகம், யானை, பரி, மரை, கராம், கவரி (11).*

*குழவியென்னும் பெயர் - கடமை, மான், எருமை, யானை (4).*

*போதகமென்னும் பெயர் - புலி, சிங்கம், யானை (3).*

*பறழ்குட்டி பிள்ளை யென்னும் பெயர்கள் - கீரி, பூனை, முயல், அணில் (4).*

*பறழ்குட்டி யென்னும் பெயர்கள் - பார்க்கன், அணில் (2).*

*பறழ் பிள்ளை யென்னும் பெயர்கள் - பார்ப்பு, தவழ்சாதி (2).*

*குருளை கன்றென்னும் பெயர்கள் - மான் (1).*

*குழவி குருளை யென்னும் பெயர்கள் - யாளி (1).*

*குழவி குருளை யென்னும் பெயர்கள் - முசு (1)"*[8]

*என்பனவாக இளமைப்பெயர்களை சுட்டியுரைத்துள்ளது.*

**உயர்தரக் கட்டுரை இலக்கணம் சுட்டும் இளமைப்பெயர் வகைப்பாடு :**

| ***உயிரினப்பெயர்*** | ***இளமைப்பெயர்*** |
|---|---|
| *பறவைகள், ஊர்வன* | *பார்ப்பு, பிள்ளை* |
| *பறவைகள், நண்டு, மீன், தேள்* | *குஞ்சு* |

| | |
|---|---|
| காக்கை, கிளி, கீரி | பிள்ளை |
| மூங்கா, வெருகு | குட்டி, பறழ் |
| அணில் | குட்டி, பறழ், பிள்ளை |
| எலி | குட்டி, குஞ்சு |
| பன்றி, புலி, முயல், நரி | குருளை, குட்டி, பறழ், பிள்ளை |
| நாய் | குருளை, குட்டி, பறழ் |
| ஆடு, குதிரை, நவ்வி, உழை, புல்வாய், மான், அழுங்கு | மறி |
| குரங்கு | குட்டி, மகவு, பிள்ளை, பறழ், பார்ப்பு |
| ஆடு, குதிரை, மான் | குட்டி |
| யானை, குதிரை, கழுதை, கடமை, ஆன், எருமை, மரை, கவரி, கராம், ஒட்டகம் | கன்று |
| யானை, ஆ, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊகம் | குழவி |
| அரிமா, ஓநாய் | குருளை, குட்டி |
| மாந்தன் | குழவி, மகவு, பிள்ளை, சேய், குழந்தை, பாப்பா |
| ஆளி | அணங்கு |
| யானை | கயந்தலை, களபம், கன்று |
| கரடி | குராவடி, குட்டி |
| காசறை (கத்தூரி மான்) | கரு |
| நாவி (புனுகுப் பூனை) | பிள்ளை |
| உடும்பு, ஓணான், பாம்பு | குட்டி |
| மாடு, எருமை | கன்று |
| பூனை, வாவல் (வௌவால்) | குட்டி |
| பேன் | செள் |
| பயிர்கள், செடிகள் | நாற்று |

மரங்கள் கன்று

தென்னை பிள்ளை

பொதுவாக முட்டையிடுவனவற்றின் இளமைப்பெயர் குஞ்சு என்பதும், நேரடியாக ஈனுவனவற்றின் இளமைப்பெயர் குட்டி என்பதுமாகும்.

பிள்ளைகுட்டி, கடைக்குட்டி முதலிய வழக்குகளில் குட்டி என்னும் பெயர் மக்கட்கும் உரியதாகும் (கடைசியாகப் பிறந்த குழந்தையைக் குட்டி என விளிப்பர்).

சில உயிரினங்களின் இளமைப்பெயர், ஏதேனும் ஓர் அடைமொழி பெற்ற பொதுப்பெயராகவே வழங்கும். எ.டு. நரிக் கெளிறு, அரைத்தவளை, குட்டிவிளா, பிள்ளை விளாத்தி”[9] என்று உயர்தர கட்டுரை இலக்கணத்தில் ‘மரபியல்’ என்ற தலைப்பினுள் உயிரினங்களுக்குரிய இளமைப்பெயர்களை அட்டவணைப் படுத்தியுள்ளார் தேவநேயப்பாவாணர்.

இவ்வாறாக நிகண்டுகளும், உயர்தரக் கட்டுரை இலக்கணமும் தொல்காப்பிய மரபியல் வழி நின்று பிற்கால வழக்குமுறைமைகளையும் எடுத்து விளம்பியுள்ளன.

## சங்க அக இலக்கியங்களில் இளமைப்பெயர்கள்

### பார்ப்பு

இளமைப்பெயர்களுள் முதன்மையாகச் சுட்டப்பட்டிருப்பது பார்ப்பு என்பதாகும். இப்பெயர் சங்க அக இலக்கியங்களில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகியவற்றில் எடுத்தாளப்பட்டுள்ளன.

தொல்காப்பியம் பறப்பவைகளும் தவழ்பவைகளும் மட்டும் ‘பார்ப்பு’ எனும் பெயரினைப் பெறுவன என்கிறது.

*சங்க அக இலக்கியங்களுள் பறவை, அன்னம், கழுகு, நாரை ஆகியன பறப்பனவற்றுள்ளும், யாமை, முதலை, குரங்கு ஆகியன தவழ்வனவற்றுள்ளும் ‘பார்ப்பு’ எனும் பெயரினைப் பெற்றுள்ளன.*

**பறவைப் பார்ப்பு**

*‘பார்ப்பு’ எனும் இளமைப்பெயரினைப் பறவைக்குரியனவாக நற்றிணை, கலித்தொகையுள் ‘இரண்டு (2)’ இடங்களில் காணமுடிகின்றது. அவை,*

*“பறவை பார்ப்பு வயின் அடைய,”*[10]

*“பறவை தம் பார்ப்பு உள்ள”*[11]

*எனும் அடிகளின் வழி தெளிய முடிகின்றது.*

**அன்னப் பார்ப்பு**

*“விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்*

…………………………………………………

…………………………………………………

*வளராப் பார்ப்பிற்கு அலகுஇரை ஒய்யும்”*[12]

*என்ற அடிகளில் அன்னத்திற்குரிய இளமைப்பெயராக ‘பார்ப்பு’ என்பதனை அறியலாகின்றது.*

**கழுகுப் பார்ப்பு**

*அகநானூற்றில் கழுகின் இளமைப்பெயரைச் சுட்டுவதாக,*

*“மேற்கவட்டு இருந்த பார்ப்பினங்கட்கு*

…………………………………………………

…………………………………………………

…………………………………………………

*கண் உமிழ் கழுகின் கானம் நீந்தி”*[13]

*என்கின்ற அடிகளுள் காணக் கிடைக்கின்றது.*

**நாரைப் பார்ப்பு**

*நாரைக்குரிய இளமைப்பெயராகப் பார்ப்பு என்பதனை,*

*"தனிப்பார்ப்பு உள்ளிய தண்பறை நாரை"*[14]

*எனும் அகநானூற்று அடியில் எழுஉப்பன்றி நாகன்குமரனார் எடுத்துரைத்துள் ளார்.*

**பார்ப்பு - தவழ்பவைகள்**

*தவழ்பவைகளில் யாமை, ஊகம், மந்தி, முதலை ஆகியன பார்ப்பு எனும் இளமைப் பெயரினைத் தாங்கியுள்ளன.*

**யாமைப் பார்ப்பு**

*ஆமையின் இளமைப்பெயராக பார்ப்பு என்பது நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய இலக்கியங்களுள் 'ஆறு (6)' இடங்களில் இடம்பெற்றுள்ளது. இதனை,*

*"புலவுநீர் அடைகரை யாமைப் பார்ப்பு,"*[15]

*"யாமைப் பார்ப்பின் அன்ன,"*[16]

*"அம்பணத்து அன்ன யாமை ஏறி*
*செம்பின் அன்ன பார்ப்புப் பல துஞ்சும்,"*[17]

*"தீம்பெரும் பொய்கை யாமை இளம்பார்ப்பு,"*[18]

*"கொடுந்தாள் யாமை பார்ப்பொடு,"*[19]

*"நிறைசூல் யாமை மறைத்துஈன்று புதைந்த*
*..........................................................*
*பார்ப்பு இடனாகும் அளவைப் பகுவாய்"*[20]

*எனும் பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது. மேலும், இம்முறைமையினைப் பொருநராற்றுப்படையும் (186) குறிப்பிடுகிறது.*

**குரங்கினங்கள் - ஊகம் பார்ப்பு**

ஊகத்துக்குரிய இளமைப்பெயராக 'பார்ப்பு' குறுந்தொகையில் இடம்பெற்றுள்ளது. அது,

"நரைமுக ஊகம் பார்ப்பொடு"[21]

எனும் அடியின் வழியே புலப்படுகின்றது.

இம்மரபுப் பெயரினை மலைபடுகடாமும் (208) அறியச் செய்கிறது.

**மந்திப் பார்ப்பு**

மந்திக்குரிய பெயராகக் குறுந்தொகையில் 'இரண்டு (2)' இடங்களிலும் ஐங்குறுநூறு, அகநானூறு முறையே ஓரிடத்திலுமாக 'நான்கு (4)' இடங்களில் குறிப்பிடுகின்றன. அவை,

"பார்ப்புடை மந்திய மலை இறந்தோரே,"[22]

"பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்,"[23]

"கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு,"[24]

"கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்
பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்"[25]

என்ற பாடலடிகளில் காணமுடிகின்றது. இப்பெயரினை மலைபடுகடாம் (312) ஓரிடத்தில் எடுத்துரைத்துள்ளது.

**முதலைப் பார்ப்பு**

முதலையின் இளமைப்பெயராக 'பார்ப்பு' இடம்பெற்றுள்ளதை ஐங்குறுநூறு சுட்டிக்காட்டுகிறது. இதனை,

"தன் பார்ப்புத் தின்னும் அன்புஇல் முதலையோடு"[26]

என்னும் அடி வழியாக அறியலாகிறது.

மேலும், அரவம் (பாம்பு) என்பதற்குரிய பெயராகவும் (பரி.19:73), நண்டுக்குரிய பெயராகவும் (பெரும்பாண்.167) 'பார்ப்பு' இடம்பெற்றுள்ளது.

இவ்வாறாக பார்ப்பு எனும் இளமைப் பெயரினை, சங்க அக இலக்கிய ங்களுள் 'பதினேழு (17)' இடங்களிலும், அகப்புற இலக்கியத்தில் ஓரிடத்திலு ம், ஆற்றுப்படை நூல்களில் 'நான்கு (4)' இடத்திலுமாக 'இருபத்திரண்டு (22)' இடங்களுள் காணமுடிகின்றது.

**பறழ்**

மரபியல், 'பறழ்' எனும் பெயரினை மூங்கா, வெருகு, எலி, அணில், நா ய், பன்றி, புலி, முயல், நரி, குரங்கு ஆகிய உயிரினங்கள் பெறுவன என்கின்றது .

சங்க அக இலக்கிய நூற்களுள் 'பறழ்' குறித்த பதிவுகள் பின்வருமாறு இ டம்பெற்றுள்ளன.

**மந்திப் பறழ்**

"துஞ்சு பதம் பெற்ற துய்த்தலை மந்தி
.............................................................
.............................................................
கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்,"[27]
"துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்க,"[28]
"புன்தலை மந்தி வன்பறழ் நக்கும்,"[29]
"மடமா மந்தி மாணா வன்பறழ்,"[30]
"புன்தலை மந்திக் கல்லா வன்பறழ்,"[31]
"கைம்மை உய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளை முதல் சேர்த்தி,"[32]
"கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்,"[33]
"புன்தலை மந்தி வன்பறழ் ஆகும்."[34]

**கடுவனின் பறழ்**

*“வரை ஆடு வன்பறழ்த் தந்தைக்*

*கடுவனும் அறியும் அக்கொடியோனையே,”*[35]

**குரங்குப் பறழ்**

*“குரங்கின் வன்பறழ் பாய்ந்தென,”*[36]

**ஆண்டலைப் பறழ்**

*“ஆண்டலைக்கு ஈன்ற பறழ் மகன்,”*[37]

**பன்றிப் பறழ்**

*“வயநாய் எறிந்து வன்பறழ் தழீஇ*

……………………………………………

……………………………………………

*தறுகண் பன்றி நோக்கி …………,”*[38]

*“பறழ்ப் பன்றி ………………,”*[39]

**நீர்நாய்ப் பறழ்**

*“பாசிப் பரப்பில் பறழொடு வதிந்த*

……………………………………………

*நாள்இரை தரீஇய எழுந்த நீர்நாய்,”*[40]

**முயல் பறழ்**

*“முயல் பறழ் உகளும் முல்லையம் புறவில்”*[41]

*என்பனவாகப் ‘பதினைந்து (15)’ இடங்களில் ‘பறழ்’ எனும் இளமைப்பெயர் இடம்பெற்றுள்ளது. அவற்றுள் ‘பத்து’ இடங்களில் குரங்கினத்திற்குரியனவாக நற்றிணையில் ‘5,’ குறுந்தொகையில் ‘2,’ ஐங்குறுநூற்றில் ‘3’ இடங்களிலும் காணப்படுகிறது. பன்றிக்குரியனவாக அகநானூற்றிலும் பட்டினப்பாலையிலும் ஓரிடத்தில் இ*

டம்பெற்றுள்ளது. நீர்நாய், முயல் என்பனவற்றிற்கு அகநானூறு ஓரிடத்தில் இப்பெயர்க்குரியதாக எடுத்தாண்டுள்ளது.

தொல்காப்பியர், 'பறழ்' விலங்கினத்திற்குரியனவென்று சுட்டியிருக்க, கலித்தொகையில் ஆண்டலைப் பறவைக்குரியதாக இப்பெயர் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

'பறழ்' என்னும் இளமைப்பெயரைச் சங்க அக நூற்கள் மட்டும் எடுத்தாண்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.

**குட்டி**

இளமைப்பெயர்களுள் 'குட்டி' என்பதும் ஒன்றாகும். தொல்காப்பியர், 'மூங்கா (கீரி), வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல், நரி, குரங்கு' முதலிய விலங்கினங்கள் இப்பெயரினைப் பெறுவன என்கின்றார்.

'குட்டி' என்னும் இளமைப்பெயர் சங்க அக இலக்கியங்களில் இடம்பெறவில்லை என்பது சுட்டத்தக்கதாகும்.

புற இலக்கியங்களில் இப்பெயரானது இடம்பெறவில்லை. பெரும்பாணாற்றுப்படையில் மட்டும் ஓரிடத்தில் காணலாகின்றது. அவை,

"ஈர்ஞ்சேறு ஆடிய இரும்பல் குட்டி" (பெரும்பாண்.341)

எனும் அடியில் பன்றிக்குட்டி என்று குறிக்கப்பட்டுள்ளது.

**குருளை**

'குருளை' என்பது இளமைப்பெயர்களுள் ஒன்று. இப்பெயரினை நாய், பன்றி, புலி, முயல், நரி ஆகிய விலங்கினங்களுக்கு உரியதாகும் என்கிறார் தொல்காப்பியர். இப்பெயரினை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, பட்டினப்பாலை போன்ற சங்க அக நூற்கள் எடுத்தாண்டுள்ளன. அவற்றுள் புலி, கரடி, நீர்நாய், குரங்கு, பாம்பு, பன்றிக்குரியனவாகச் சுட்டப்பட்டுள்

ளன. கரடி, குரங்கு, பாம்பு ஆகிய மூன்றும் மரபியலில் குறிக்கப்படாத உயிரி னங்களாகும்.

**புலிக் குருளை**

நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, பட்டினப்பாலை ஆகிய நூற்கள் புலிக்குரிய பெயரென்று,

"வல்லியம் பெருந்தலைக் குருளை,"[42]

"அலங்கல் அம்தொடலை அன்ன குருளை
வயப்புனிற்று இரும்பிணப் பசித்தென வயப்புலி,"[43]

"இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை,"[44]

"மறப்புலிக் குருளை கோள் இடம் கரக்கும்,"[45]

"ஊன்பொதி அவிழாக் கோட்டுஉகிர்க் குருளை
.......................................................................
.......................................................................
பொறிகிளர் உழுவைப் போழ்வாய்,"[46]

"உறுவெரிந் ஒடிக்கும் சிறுவரிக் குருளை
.......................................................................
.......................................................................
புலிபுக்கு ஈனும் வறுஞ்சுனை,"[47]

"......................... கூர் உகிர்க்
கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு"[48]

எனும் பாடலடிகளின் வழி அறியச் செய்கிறது. மேலும், இப்பெயரினைப் புற நானூறும் (42:10) பெரும்பாணாற்றுப்படையும் (449) சுட்டியுள்ளன.

**கரடிக் குருளை**

கரடிக்குரிய பெயராக,

"பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை
இருள்துணிந் தன்ன குவவுமயிர்க் குருளை,"[49]

"குருளை எண்கின் இருங்கிளை கவரும்"[50]

என்ற அகநானூற்று அடிகளின் வாயிலாக 'இரண்டு (2)' இடங்களில் இடம்பெ ற்றுள்ளதைக் காணமுடிகின்றது. இவற்றுடன், மலைபடுகடாமும் (501) ஓரிடத்தில் இப்பெயரைக் குறிப்பிடுகிறது.

**நீர்நாய்க் குருளை**

நற்றிணையில் மட்டும் நீர்நாய்க்குரிய பெயராக,

"குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தி"[51]

என்று குறிப்பிடுகின்றது.

**குரங்குக் குரளை**

குருளை எனும் பெயர் குரங்கிற்குரியதாகக் குறுந்தொகைச் சுட்டுகிறது. அதாவது,

"வெயில் ஆடு முசுவின் குருளை"[52]

என்றடியின் வாயிலாகத் தெரிய வருகின்றது.

**அரவுக் குருளை**

பாம்பிற்குரிய பெயரென்று குறுந்தொகை மட்டும் குறிப்பிடுகிறது. அது,

"சிறுவெள் அரவின் அவ்வரிக் குருளை"[53]

என்ற பாடலடி வழி புலனாகின்றது.

**பன்றிக் குருளை**

ஐங்குறுநூற்றில் பன்றிக்குரிய பெயராக 'மூன்று (3)' இடங்களில் 'குருளை' சுட்டப்பட்டுள்ளது.

"புலிகொல் பெண்பால் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்"[54]

என்றும்,

"தாஅய் இழந்த தழுவரிக் குருளையொடு

...............................................................

வரை ஓங்கு உயர்சிமைக் கேழல் உறங்கும்"[55]

என்றும்,

"குருளைப் பன்றி கொள்ளாது கழியும்"[56]

என்றும் இப்பாடலடிகளின் வழியே அறியச் செய்கின்றது.

**யாளி, நாய்க் குருளை**

குருளைப் பெயரை யாளிக்குரியதென்றும் (பொருந.139) நாய்க்குரியதென்றும் (சிறுபாண்.130) ஆற்றுப்படை நூற்கள் சுட்டுகின்றன.

இவ்வாறாகக் குருளை எனும் பெயரானது சங்க அக இலக்கியங்களுள் 'பதினைந்து (15)' இடங்களிலும், புற இலக்கியத்தில் ஓரிடத்திலும், ஆற்றுப்படை நூற்களில் 'நான்கு' இடங்களிலும் இடம் பெற்றுள்ளது. புலிக்குரியதாக '9' இடங்களிலும், நாய்க்குரியதாக '2' இடங்களிலும், பன்றிக்குரியதாக '3' இடங்களிலும், கரடிக்குரியதாக '3' இடங்களிலும், குரங்கு, பாம்பு, யாளி ஆகியவற்றிற்குரியதாக ஓரிடத்திலும் மொத்தம் 'இருபது (20)' இடங்களுள் இப்பெயரானது எடுத்தாளப்பட்டுள்ளது.

**கன்று**

'கன்று' என்ற பெயரினை யானை, குதிரை, கழுதை, கடமை, மான், எருமை, மரை (மான்வகை), கவரி (மானினம்), கராம் (முதலை), ஒட்டகம், ஓரறிவுயிர்களான மரஞ்செடி, கொடிகள் முதலியவற்றிற்குரியதாக மரபியல் சுட்டுகின்றது.

சங்க அக இலக்கிய நூற்களுள் பட்டினப்பாலைத் தவிர்த்து ஏனைய நூற்களில் 'கன்று' எனும் இளமைப்பெயர் எடுத்தாளப்பட்டுள்ளது. அவற்றுள், யானை, எருமை, ஆமான், மாடு ஆகிய விலங்கினங் கட்குரியதாகக் காணப்படுகின்றன

.

**யானைக் கன்று**

யானைக்குரிய பெயராக நற்றிணையில் ‘ஏழு (7)’ இடங்களிலும், குறுந் தொகையில் ஓரிடத்திலும், அகநானூற்றில் ‘ஒன்பது (9)’ இடங்களிலும் ‘கன்று ’ எனும் இளமைப்பெயரினைக் காணமுடிகின்றது.

**நற்றிணையில்**

“கன்றுடை வேழம் நின்று காத்து அல்கும்,”[57]

“புன்தலை மடப்பிடி கன்றொடு ஆர,”[58]

“கடுநடை யானை கன்றொடு வருந்த,”[59]

“கன்றுடை மருங்கின் பிடி புணர்ந்து இயலும்,”[60]

“வன்சுவல் பராரை முருக்கி கன்றொடு
மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்,”[61]

“கடுஞ்சூழல் வயப்பிடி கன்று ஈன்று உயங்க,”[62]

“ஒளிதிகழ் விளக்கத்து ஈன்ற மடப்பிடி
களிறு புறங்காப்ப கன்றொடு வதியும்”[63]

என்றும்; குறுந்தொகையில்,

“கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட”[64]

என்றும்; அகநானூற்றில்,

“கன்று கால் ஒய்யும் கடுஞ்சுழி நீத்தம்
புன்தலை மடப்பிடிப் பூசல் பலஉடன்,”[65]

“களிற்றுக் கன்று ஒழிந்த உவகையர்,”[66]

“கன்று பசி களைஇய பைங்கண் யானை,”[67]

“இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்,”[68]

“கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணி,”[69]

“இனம்சால் வேழம் கன்று ஊர்பு,”[70]

“குழியிடைக் கொண்ட கன்றுடை பெருநிரை

பிடிபடு பூசலின் எய்தாது ஒழிய,"[71]

"கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்,"[72]

"கன்று ஒழித்து ஓடிய புன்தலை மடப்பிடி"[73]

என்ற பாடலடிகளின் வாயிலாக 'யானைக்கன்று' என்பதனை அறியச் செய்கி ன்றது.

இவற்றுடன் பதிற்றுப்பத்தில் (12:13) ஓரிடத்திலும், புறநானூற்றில் (135:11, 1 81:3, 389:9) மூன்றிடங்களிலும், மலைபடுகடாமில் (307) ஓரிடத்திலும் யானைக்கன்று இடம் பெற்றுள்ளது.

'கன்று' எனும் பெயர் யானைக்குரியதாக 'இருபத்திரண்டு (22)' இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.

**எருமைக் கன்று**

எருமைக்குரிய பெயராக நற்றிணை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்தில் காணமுடிகின்றது. அவற்றை,

"மன்ற எருமை மலர்தலைக் காரான்

இன்தீம் பாற்பயம் கொண்மார்க் கன்றுவிட்டு"[74]

என்றும்,

"கருந்தாள் எருமைக்கன்று வெரூஉம்"[75]

என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது.

**மாட்டுக் கன்று**

மாட்டுக்குரிய (ஆ) பெயராகக் கன்று இடம்பெறுவதை நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு, குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு ஆகிய அக நூற்கள் 'இருபத்தெட்டு (28)' இடங்களில் எடுத்துரைத்துள்ளன. நற்றிணையில் 'நான்கு' இடங்களிலும், குறுந்தொகையில் 'நான்கு' இடங்களிலும், கலித்தொகையில் 'ஒன்பது' இடங்களிலும், அகநானூற்றுள் 'பதினொரு (11)' இடங்களிலும், குறி

ஞ்சிப்பாட்டிலும்முல்லைப்பாட்டிலும்ஓரிடத்தில்இடம்பெறுவதைப் பின்வரும் பாடலடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. அவை,

*"ஊர் ஆன் கன்றொடு புகுதும் நாடன்,"*[76]

*"கன்று கால்யாத்த மன்றப் பலவின்,"*[77]

*"கன்றுடை புனிற்றா தின்ற மிச்சில்,"*[78]

*"சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா*

*..............................................................*

*கன்று தாய் மருளும் குன்ற நாடன்,"*[79]

*"கன்றும் உண்ணாது கலத்தினும் படாது*

*நல்ஆன் தீம்பால் நிலத்து உக்காஅங்கு,"*[80]

*"கறவை கன்று வயின் படர புறவில்,"*[81]

*"கன்று ஆற்றுப்படுத்த புன்தலைச் சிறாஅர்,"*[82]

*"கன்று இல் ஓர்ஆ விலங்கிய,"*[83]

*"தாவா விருப்பொடு கன்று யாத்துழிச் செல்லும்*

*ஆபோல் படர்தக நாம்,"*[84]

*"திணைக் காலுள் யாய்விட்ட கன்று மேய்க்கிற்பதோ,"*[85]

*"கொடுந் தொழுவினுள் பட்ட கன்றிற்குச் சூழும்*

*கடுஞ்சூல் ஆ நாகுபோல் நிற்கண்டு நாளும்,"*[86]

*"நின்றாய் நீ சென்றீ எமர் காண்பர் நாளையும்*

*கன்றொடு சேறும் புலத்து,"*[87]

*"தீம்பால் கறந்த கலம்மாற்றி கன்று எல்லாம்,"*[88]

*"ஓஓ! வழங்காப் பொழுது நீ கன்று மேய்ப்பாய் போல,"*[89]

*"பாங்கு அரும் பாட்டங்கால் கன்றொடு செல்வேம் எம்,"*[90]

*"நீ நீங்கு கன்று சேர்ந்தார்கண் கதஈற்றாச் சென்றாங்கு,"*[91]

*"பறவை தம் பார்ப்பு உள்ள, கறவைதம் பதிவயின்*

*கன்று அமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர,"*[92]

*"கன்று புகுமாலை நின்றோள் எய்தி,"*[93]

"பதவு மேயல் அருந்து மதவு நடை நல்ஆன்

......................................................................

கன்று பயிர் குரல மன்று நிறை புகுதரும்,"[94]

"கன்று காணாது புன்கண்ண செவிசாய்த்து

....................................................................

கறவை தந்த கடுங்கால் மறவர்,"[95]

"கன்று பயிர்குரல மன்று நிறைபுகுதரும்
ஆபூண் தெண்மணி ஐது இயம்பு இன்இசை,"[96]

"கன்று வாய் சுவைப்ப முன்றில் தூங்கும்,"[97]

"நுரை தெரி மத்தம் கொளீஇ நிரைப்புறத்து

.....................................................................

கடிபுலம் கவர்ந்த கன்றுடைக் கொள்ளையர்,"[98]

"நாள்ஆ உய்த்த நாமவெஞ் சுரத்து
நடை மெலிந்து ஒழிந்த சேண்படர் கன்றின்,"[99]

"கன்றுடைப் பெருநிரை மன்றுநிரை தரூஉம்,"[100]

"வென்றுகொடி எடுத்தனன் வேந்தனும் ; கன்றொடு
கறவைப் புல்லினம் புறவுதொறு உகள,"[101]

"சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்,"[102]

"மான்கணம் மரமுதல் தெவிட்ட ஆன்கணம்
கன்று பயிர் குரல மன்றுநிறை புகுதர."[103]

இவற்றுள் ஆன், சேதா (சிவந்த பசு), புனிற்றா, ஆ, கறவை என்று மாட்டினைக் குறித்து கன்றுப் பெயரினைத் தாங்கியுள்ளமை புலனாகின்றது. மேலும் பழங்கன்று (136:11) என்றும் கற்று (381:7) என்றும் அகநானூறு சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

*மேற்சுட்டியவற்றுடன் பதிற்றுப்பத்தில் (71:14) ஓரிடத்திலும், புறநானூற்றில் (230:1, 260:18, 264:4, 275:8, 323:2, 355:2, 383:22) 'ஏழு' இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படையில் (176, 297) 'இரண்டு' இடங்களிலும், நெடுநல்வாடை (11), மலைபடுகடாம் (339) முறையே ஓரிடத்திலும் இப்பெயர் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.*

*மாட்டுக்குரிய (ஆ) இளமைப்பெயராக சங்க அக நூற்களுள் 'முப்பது (30)' இடங்களிலும், புறநூற்களுள் '9' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களுள் '3' இடங்களிலுமாக 'நாற்பத்திரண்டு (42)' இடங்களிலும் 'கன்று' இடம் பெற்றுள்ளது.*

**ஆமான் கன்று**

*ஆமானுக்குரிய பெயரென்று நற்றிணை மட்டும் எடுத்தாண்டுள்ளமையை,*

*"தடங்கோட்டு ஆமான் மடங்கல் மாநிரைக்*
*குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தென"[104]*

*என்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன. மேலும், புறநானூறும் (319:11) ஆமானுக்குரிய பெயரென்று விளம்பியுள்ளது.*

**மரையான் கன்று**

*மரையான் கன்று என்று புறநானூற்றில் (297:4) மட்டும் ஓரிடத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.*

**அசோகமரக் கன்று (ஓரறிவுயிர்)**

*ஓரறிவுயிர்க்குரிய பெயராக கன்று என்பதை மலைபடுகடாமில் (159) மட்டும் காணமுடிகின்றது.*

*இவ்வாறாக 'கன்று' எனும் இளமைப்பெயர் சங்க அக இலக்கியங்களுள் 'ஐம்பது (50)' இடங்களிலும், புறநூற்களில் 'பதினைந்து (15)' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் '5' இடங்களிலுமாக 'எழுபது (70)' இடங்களில் இடம்பெற்றுள்ளன.*

*கன்றுப் பெயரினைச் சங்க இலக்கியங்கள் மாட்டுக்குரியதாகவும், ஆமானுக்குரியதாகவும் குறிப்பிட்டுள்ளன. இவ்விலங்குகள் தொல்காப்பியர் வரையறுத்தவற்றுள் இடம்பெறாதவை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.*

**பிள்ளை**

*தொல்காப்பியர் இளமைப்பெயர்களுள் 'பிள்ளை' என்பதையும் ஒன்றாகச் சுட்டி இப்பெயர் பறவைகள், பன்றி, புலி, முயல், நரி, குரங்கு, ஓரறிவுயிர்கள் முதலிய உயிரினங்களுக்குரியவை என்று குறிப்பிட்டுள்ளார்.*

*பிள்ளை எனும் பெயரினை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு சங்க அகநூல்களில் இடம்பெற்றுள்ளமையைக் காணமுடிகின்றது.*

**பறப்பவை - தவழ்பவைகளின் பிள்ளை**

*பறப்பனவற்றுள் நாரைப் பிள்ளை, குருவிப் பிள்ளை, காக்கைப் பிள்ளை, பறவைப் பிள்ளை, கோழிப் பிள்ளை, வெள்ளாங்குருகின் பிள்ளை, கழுகுப் பிள்ளை, கொக்குப் பிள்ளை, கிளிப் பிள்ளை என்றும், தவழ்வனவற்றுள் முதலைப் பிள்ளை என்று சங்க அக நூற்களுள் எடுத்தாண்டுள்ளமையைப் பின்வரும் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.*

**நாரைப் பிள்ளை**

*நாரைப் பிள்ளை என்று நற்றிணை மட்டும் எடுத்தியம்பியுள்ளதை,*

*"உடங்கு இரைதேரும் தடந்தாள் நாரை*

*..............................................................*

*..................................................................*

*தாய்ப் பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்”*[105]

*என்ற அடிகளின் மூலம் அறியமுடிகின்றது.*

**குருவிப் பிள்ளை**

*குருவிப் பிள்ளை என்பதனை,*

*“உள்இறைக் குரீஇக்கார் அணற்சேவல்*

*..............................................................*

*..............................................................*

*சிறுபல் பிள்ளையொடு குடம்பை கடிதலின்”*[106]

*என்றும்,*

*“கூம்பிய சிறகர் மனைஉறை குரீஇ*

*..........................................................*

*..........................................................*

*இல்இறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்”*[107]

*என்ற அடிகளுள் நற்றிணையும் குறுந்தொகையும் எடுத்தாண்டுள்ளன.*

**காக்கைப் பிள்ளை**

*“கொடுங்கண் காக்கை கூர்வாய் பேடை*

*நடுங்கு சிறைப்பிள்ளை தழீஇ கிளைபயிர்ந்து”*[108]

*என்ற அடிகளின் வழி நற்றிணை மட்டும் காக்கைப் பிள்ளையைக் குறிப்பிட்டு ள்ளது.*

**பறவைப் பிள்ளை**

*பறவைக்குரிய பிள்ளைப் பெயரினை நற்றிணையும் குறுந்தொகையும் எ டுத்தியம்பியுள்ளதை,*

*“புள்ளும் பிள்ளையொடு வதிந்தென,”*[109]

*“அளியதாமே கொடுஞ் சிறைப் பறவை*

…………………………………………………………

*பிள்ளை உள்வாய்ச் செரீஇய"*[110]

*என்ற அடிகளின் வாயிலாக அறியலாகிறது.*

**கோழிப் பிள்ளை**

*குறுந்தொகையில் மட்டும் கோழிப் பிள்ளை இடம்பெற்றுள்ளதை,*

*"மனை உறை கோழிக் குறுங்கால்பேடை*

…………………………………………………………

…………………………………………………………

*பைதல் பிள்ளைக் கிளை பயிர்ந்தாங்கு"*[111]

*என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன.*

**வெள்ளாங்குருகின் பிள்ளை**

*ஐங்குறுநூற்றுள் 'வெள்ளாங்குருகு பத்தில்' பிள்ளைப் பெயரினை,*

*"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தென"*[112]

*என்று பத்துப்பாடல்களிலும் முதலடியில் வெள்ளாங்குருகுப் பிள்ளை எடுத்தியம்பியுள்ளதனை அறியமுடிகின்றது.*

**கழுகுப் பிள்ளை**

*கழுகுப் பிள்ளை என்பதனை,*

*"அணிந்த போலும் செஞ்செவி எருவை*

…………………………………………………………

*அருங்கவட்டு உயர்சினைப் பிள்ளை ஊட்ட"*[113]

*என அகநானூற்றுப் பாடலடியில் மட்டும் இப்பெயர் இடம்பெற்றுள்ளது.*

**கொக்குப் பிள்ளை**

*அகநானூற்றில் கொக்குப் பிள்ளை எடுத்தாளப்பட்டுள்ளது. அதனை,*

*"குடுமிக் கொக்கின் பைங்காற்பேடை*

*.........................................................*

*.........................................................*

*பைதல் பிள்ளை தழீஇ ஒய்யென"*[114]

*என்ற அடிகள் அறியச் செய்கின்றது.*

*மேலும் புறநானூற்றில் (342:7) மட்டும் கொக்குப் பிள்ளையைக் காண முடிகின்றது.*

**கிளிப் பிள்ளை**

*கிளிப் பிள்ளையென்று அகநானூறு மட்டும் எடுத்தியம்பியிருப்பதை,*

*"தளிரியல் கிள்ளை இனிதினின் எடுத்த*

*வளராப் பிள்ளைத் தூவி அன்ன"*[115]

*என்ற அடிகளின் மூலம் புலப்படுத்துகின்றது.*

*இவற்றுடன் குறும்பூழ்ப் பிள்ளையென்று பெரும்பாணாற்றுப்படை (204-205) குறிப்பிடுகின்றது.*

**முதலைப் பிள்ளை**

*ஐங்குறுநூறு மட்டும் தவழ்பவற்றுள் ஒன்றான முதலைக்குரிய பெயராக 'பிள்ளை' எடுத்தாளப்பட்டுள்ளது. அதனை,*

*"பிள்ளை தின்னும் முதலைத்து அவன்ஊர்"*[116]

*என்ற அடி சுட்டுகின்றது.*

**வெருகுப் பிள்ளை**

*வெருகுப் பிள்ளைப் பெயருக்குரிய வென்று,*

*"பிள்ளை வெருகிற்கு அல்கு இறைஆகி,"*[117]

*"எழுதியன்ன கொடிபடு வெருகின்*

*பூளை அன்ன பொங்குமயிர்ப் பிள்ளை"*[118]

என்ற அடிகளின் வழி அறியமுடிகின்றது. மேலும், புறநானூறும் (117:8) வெரு குப்பிள்ளை என்பதனைக் குறிப்பிடுகிறது.

**கரடிப் பிள்ளை**

"பிள்ளை எண்கின் மலைவயி னானே"[119]

என்ற அடியில் கரடிப் பிள்ளையென்று அகநானூறு சுட்டுகிறது.

சங்க அக நூற்களுள் நீர்வாழ் உயிரினங்களுக்குரிய பெயராக 'பிள்ளை' இடம்பெறாத நிலையில், புறநானூற்றில் (342:10) மட்டும் இறால் பிள்ளை என எடுத்தாளப்பட்டுள்ளது. மக்கட்குரிய பெயராகப் புறநானூறு (380:13, 389 :15) மட்டும் எடுத்தியம்பியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறாகப் பிள்ளைப் பெயர் நாரைக்குரியதாக ஓரிடத்திலும், குருவிக்குரியதாக 'இரண்டு' இடங்களிலும், காக்கைக்குரியதாக ஓரிடத்திலும், பறவைக்குரியதாக 'இரண்டு' இடங்களிலும், கோழிக்குரியதாக ஓரிடத்திலும், வெள்ளாங்குருகிற்குரியதாக 'பத்து (10)' இடங்களிலும், கழுகிற்குரியதாக ஓரிடத்திலும், கொக்குக்குரியதாக 'இரண்டு' இடங்களிலும், கிளி, குறும்பூழ், முதலை முறையே ஓரிடத்திலும், வெருகிற்குரியதாக 'மூன்று' இடங்களிலும், கரடி, இறால் மீன் முறையே ஓரிடத்திலும், மக்கட்குரியதாக 'இரண்டு' இடங்களிலும் இடம்பெற்றுள்ளன.

இவற்றுள் மரபியலில் குறிப்பிடாத உயிரினங்களான வெருகு, கரடி, இறால் (நீர்வாழ்சாதி) மக்கள் ஆகியவற்றிற்குரிய பெயராகச் சங்க நூல்களுள் எடுத்தாளப்பட்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.

சங்க அக நூற்களில் பிள்ளைப் பெயரினை இருபத்தி 'நான்கு (24)' இடங்களிலும், புறநூற்களில் 'ஐந்து' இடங்களிலும், ஆற்றுப்படையுள் ஓரிடத்திலுமாக 'முப்பது (30)' இடங்களில் பிள்ளைப் பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**மகவு**

மகவு எனும் இளமைப்பெயர் மக்களுக்கும் குரங்கிற்கும் உரியது என்கிற து மரபியல்.

இப்பெயரைச் சங்க அக இலக்கியங்களுள் குறுந்தொகை மட்டும் குரங் குக்குரியதாக ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளது.

**மந்தி மகவு**

"மகவுடை மந்தி போல"[120]

என்ற அடியின் மூலம் குருங்கிற்குரிய பெயராக அறியலாகிறது.

மக்கட்குரிய பெயராக சங்க அக இலக்கியங்களுள் இடம்பெறாத நிலை யில், பெரும்பாணாற்றுப்படையுள் (58, 89, 271) மட்டும் 'மூன்று' இடங்களில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

மேலும், புறநானூறு (117:4) புதுமையாக ஆமானுக்கும் உரிய பெயரெ ன்று சுட்டியுள்ளது.

இவ்வாறாக மகவு குறித்து 'ஐந்து' இடங்களில் காணப்பட்டாலும் சங்க அக நூற்களுள் குரங்கிற்கு மட்டும் ஓரிடத்தில் எடுத்தாளப் பட்டுள்ளது சுட்ட த்தக்கதாகும்.

**மறி**

இளமைப்பெயர்களுள் ஒன்றான 'மறி' யாடு (ஆடு), குதிரை, நவ்வி, உழை, புல்வாய் ஆகிய விலங்கினங்களுக்கு மட்டும் உரியதாகும் என்கிறது மரபிய ல். 'நவ்வி, உழை, புல்வாய்' ஆகிய மூன்றும் மானினமாகும்.

சங்க அக நூற்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொ கை, அகநானூறு ஆகியவற்றில் மட்டும் 'மறி' எனும் இளமைப்பெயரினைக் க

ாணமுடிகின்றது. அவற்றுள் ஆட்டினம், மானினம், கடல் அலைக்குரிய பெய ராக இடம்பெற்றுள்ளதனைப் பின்வரும் பாடலடிகள் புலப்படுத்துகிறது.

**ஆட்டு மறி**

'யாடு' எனும் விலங்கிற்குரிய இளமைப்பெயராக மறி இடம் பெற்றுள் ளதனை,

"வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறி அறுத்து,"[121]

"பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய"[122] (செம்மறியாடு),

"மறிக்குரல் அறுத்து தினைப்பரப்பு இரீஇ"[123] (வெள்ளாடு),

"சிறுமறி கொன்று இவள் நறுநுதல் நீவி"[124] (சிறிய ஆட்டுமறி),

"மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்"[125] (செம்மறியாடு),

"உள்இல் வயிற்ற வெள்ளை வெண்மறி"[126] (வெள்ளாடு),

"மறி உயிர் வழங்கா அளவை சென்றுயாம்,"[127]

"ஆடு தலைத் துருவின் தோடு ஏமார்ப்ப

தெறிமறி பார்க்கும் குறுநரி வெரீஇ"[128] (செம்மறியாடு),

"மறிகொலைப் படுத்தல் வேண்டிவெறிபுரி"[129]

போன்ற சங்க அக நூற்களின் (நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு மட்டும்) பாடலடிகளில் காணக்கிடைக்கின்றது. அவற்றுள், செம்மறியாடு, வெள்ளாடு என் றும் குறிப்பாகவும் ஆட்டினங்களுக்குரிய பெயராகச் சுட்டியுள்ளன.

சங்க அக நூற்களை விடுத்துப் பரிபாடலிலும் திருமுருகாற்றுப்படை (218-பொதுப்பெயர்), சிறுபாணாற்றுப்படையிலும் 'மறி' எனும் இளமைப்பெயரைக் காணமுடிகின்றது. பரிபாடலும் (5:62, 5:64) சிறுபாணாற்றுப்படையும்(197) வெள் ளாட்டு மறி என்று குறிப்பிட்டுள்ளது.

**வருடை மறி**

மானினமான வருடைக்குரிய பெயராகக் குறுந்தொகையும் கலித்தொகையும் முறையே ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளன. அவற்றை,

"செவ்வரைச் சேக்கை வருடைமான் மறி,"[130]

"வருடை மடமறி ஊர்வு இடைத்துஞ்சும்"[131]

என்ற பாடலடிகளின் வழியே அறியமுடிகின்றது.

**மான் மறி**

'மான் மறி' என்று குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய அக நூற்கள் இப்பெயரினை எடுத்தாண்டுள்ளதை,

"கவைத்தலை முதுகலை காலின் ஒற்றிப்

………………………………………………

………………………………………………

தெறித்து நடை மரபின் தன்மறிக்கு நிழலாகி,"[132]

"நவ்வி நாள்மறி கவ்விக்கடன் கழிக்கும்,"[133]

"மடமான் அம்பிணை மறியொடு திரங்க,"[134]

"மறியுடை மான்பிளை கொள்ளாது கழியும்,"[135]

"மறி இடைப் படுத்த மான்பிணை போல,"[136]

"மறியுடை மான்பிணை உகள,"[137]

"மாதர் மான்பிணை மறியொடு மறுக,"[138]

"இருதிரி மருப்பின் அண்ணல் இரலை

………………………………………………

மறி ஆடு மருங்கின் மடப்பிணை அருந்தி,"[139]

"சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
வலம்திரி மருப்பின் அண்ணல் இரலையொடு,"[140]

"மறியுடை மடப்பிணை தழீஇ புறவின்
திரிமருப்பு இரலை பைம்பயிர் உகள,"[141]

"குறுநெடுந் துணைய மறிபுடை ஆட
புன்கண் கொண்ட திரிமருப்பு இரலை"[142]

எனும் பாடலடிகளில் கண்டு தெளிய முடிகின்றது. இவற்றுள், குறுந்தொகை யில் '282' ஆம் பாடலில் மானினமான நவ்விக்குரிய பெயராக இடம்பெற்றுள் ளது சுட்டத்தக்கது. அகநானூறு '304' ஆம் பாடலில் சிறுமறி என்று சுட்டியிரு ப்பதால் சிறிய இளைய மானென்று எடுத்தாண்டு அழகுபடுத்தியுள்ளார் இடைக்காடனார்.

இவற்றை விடுத்துப் பரிபாடல் (9:8), புறநானூறு (23:19) ஆகியவற்றில்'மறி' எனும் இளமைப்பெயர் எடுத்தாளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**அலை மறி**

மரபியலுள் 'மறி' எனும் பெயரானது விலங்குகளுக்குரியதாகச் சுட்டப் பட்டிருப்பினும் சங்க அக நூற்களுள் கடல் அலைக்குரிய இளமைப்பெயராக எடுத்தாளப்பட்டுள்ளது சுட்டத்தக்கதாகும். அவற்றை,

"மறிதிரை வருந்தாமல் கொண் டாங்கு நெறிதாழ்ந்து,"[143]

"கராம் துஞ்சும் கல்உயர் மறிசுழி"[144]

எனும் பாடலடிகளின் வழி அறியலாகிறது.

இவற்றுடன் பரிபாடல் (1:66, 2:66) கடலைக்குரிய பெயராக 'இரண்டு ' இடங்களில் குறிப்பிடுகிறது.

இவ்வாறாக மறி எனும் இளமைப்பெயர், சங்க அக நூல்களுள் ஆட்டிற்கும் அதன் இனமானவற்றிற்கும் (செம்மறி, வெள்ளை) 'ஒன்பது' இடங்களிலும், மானும் அதன் இனத்திற்கும் 'பதின்மூன்று (13)' இடங்களிலும், கடல் அலக்கு 'இரண்டு' இடங்களிலும்  இடம்பெற்றுள்ளது. மேலும் புறநூற்களுள் 'ஒன்பது' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் 'இரண்டு' இடங்களிலுமாக 'முப்பத்தைந்து (35)' இடங்களில் மறி எனும் பெயர் காணப்படுவது சுட்டியுரைக்கத் தக்கதாகும்.

**குழவி**

இளமைப்பெயர்களாகத் தொகுத்தவற்றுள் இறுதியாகச் சுட்டப்பட்டிரு ப்பது ‘குழவி’ ஆகும். இப்பெயரினை யானை, ஆ, எருமை, கடமை, மான் (மா னிங்கள்), குரங்கு; முசு; ஊகம் (குரங்கினங்கள்), மக்கள், மரம், செடி, கொடிக ள் (ஓரறிவுயிர்கள்) ஆகிய உயிரினங்கள் பெறுவதற்குரியனவென்று மரபியல் சுட்டி யுரைக்கின்றது.

சங்க அக இலக்கியங்களுள் குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு தவிர்த் த ஏனைய அக நூற்கள் அனைத்தும் குழவிப் பெயரினை எடுத்தாண்டுள்ளன. யானை, ஆ, எருமை, மான், மக்கள், திங்கள் முதலானவற்றிற்குரிய பெயராக எ டுத்தாளப்பட்டிருக்கின்றது.

**யானைக் குழவி**

யானைக்குரிய பெயராக ‘குழவி’ இடம்பெற்றுள்ளதை,

“பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி

...............................................................

...............................................................

பைதல் அம் குழவி தழீஇ ஒய்யென,”[145]

“நீர் நசைக்கு ஊக்கிய உயவல் யானை

...............................................................

நிலம்செல செல்லாக் கயந்தலைக் குழவி,”[146]

“முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி,”[147]

“நெடும்புதல் கானத்து மடப்பிடி ஈன்ற

நடுங்கு நடைக் குழவி ..................,”[148]

“கயந்தலை மடப்பிடி பயம்பில் பட்டென

களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ

ஒய்யென எழுந்த செவ்வாய் குழவி,”[149]

"ஈன்றணி இரும்பிடி தழீஇ களிறு தன்

தூங்குநடைக் குழவி துயில்புறங் காப்ப,"[150]

"கயந்தலைக் குழவி கவிஉகிர் மடப்பிடி"[151]

என்ற பாடலடிகளின் வழியே அறிய முடிகின்றது. இவற்றுடன் பொருநராற்றுப்படையில் (125) ஓரிடத்திலும், புறநானூற்றில் (369:26) ஓரிடத்திலும் குழவி எனும் இளமைப்பெயர் இடம்பெற்றுள்ளதனைக் காணமுடிகின்றது.

**ஆக்குழவி**

'ஆ' (பசு) எனும் விலங்கிற்குரிய பெயராக 'குழவி' எடுத்தாளப் பெற்றுள்ளது. இதனை,

"குழவிச் சேதா மாந்தி அயலது,"[152]

"பல்ஆ நெடுநெறிக்கு அகன்று வந்தென

.................................................................

மடக்கண் குழவி ..............................,"[153]

"கடுஞ்சுரை நல்ஆன் நடுங்குதலைக் குழவி,"[154]

"பால் வார்பு குழவி உள்ளிநிரை இறந்து,"[155]

"கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத்து யாத்த

கடுங்கண் கறவையின் சிறுபுறம் நோக்கி,"[156]

"தாம்பு அசை குழவி வீங்குசுரை மடிய

.................................................................

படுமணி மிடற்ற பய நிரை ஆயம்,"[157]

"பண்புஇல் கோவலர் தாய் பிரித்து யாத்த

நெஞ்சு அமர் குழவிபோல நொந்து நொந்து"[158]

ஆகிய பாடலடிகளில் காணக் கிடைக்கின்றது. இவற்றுடன், பெரும்பாணாற்றுப்படையில் (243) இப்பெயர் இடம்பெற்றுள்ளமை காணலாகிறது.

**ஆமான் குழவி**

ஆமான் எனும் காட்டுப்பசுவிற்குரிய பெயராக 'குழவி' அகநூற்களில் குறுந்தொகை மட்டும் ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளது. அது,

"அமர்க்கண் ஆமான் அம்செவிக் குழவி"[159]

எனும் அடியின் வாயிலாகத் தெளிய முடிகின்றது.

இவற்றுடன் புறநானூற்றில் (319:10, 323:10) இரண்டு இடங்ளிலும், மலைபடு கடாமில் (500) ஓரிடத்திலும் இப்பெயரினைக் காண முடிகின்றது.

**எருமைக் குழவி**

"தட மருப்பு எருமை மடநடைக் குழவி,"[160]

"இரும்புனிற்று எருமை பெருஞ்செவிக் குழவி,"[161]

"இருமருப்பு எருமை ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியின் அகலாது,"[162]

"கருங்கோட்டு எருமைச் செங்கண் புனிற்றுஆ
காதல் குழவிக்கு ஊறுமுலை முடுக்கும்,"[163]

"மோட்டு எருமை முழுக் குழிவி"[164]

என்று நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பட்டினப்பாலையின் பாடலடி களில் எருமைக்குழவி என எடுத்தாளப்பட்டுள்ளன.

**மான் குழவி**

குழவிப் பெயர் வருடை மானுக்குரியதாகக் கலித்தொகையுள் இரண்டு இடங்களில் குறிப்பிடுகின்றமையை,

"வருடைமான் குழவிய வளமலை நாடனை,"[165]

"வழை வளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போல பாராட்டி"[166]

எனும் பாடலடிகளின் வழி அறியலாகின்றது.

மேலும், மரையானின் குழவி என்று மலைபடுகடாம் (506) குறிப்பிட்டு ள்ளது சுட்டத்தக்கது.

**மக்கட் குழவி**

மக்கட்குரிய இளமைப்பெயராக 'மகவு,' 'குழவி' என்று மரபியல் குறிப் பிடுகின்றது.

சங்க அக இலக்கியங்களுள் மகவு எனும் இளமைப்பெயர் இடம்பெறாத நிலையில் மக்களுக்குரியனவாக நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, பட்டினப்பாலை ஆகிய நூற்களில் இப்பெயர் இடம்பெற்றுள்ளது. இதனை,

"மாசுஇல் கற்பின் மடவோள் குழவி,"[167]

"தாய் உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு
அன்னாய் என்னும் குழவி போல,"[168]

"குழவியைப் பார்த்து உறூஉம் தாய்போல்,"[169]

"தாய்முலை தழுவிய குழவி போலவும்"[170]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இவற்றை விடுத்து, மக்கட்குரிய பெயராக புறநானூற்றில் (4:18, 5:7, 44:6, 68:8, 74:1, 230:7, 379:15) 'ஏழு' இடங்களிலும், திருமுருகாற்றுப்படையில் (259) ஓரிடத்திலும் இப்பெயர் காணக் கிடைக்கின்றது.

**ஓரறிவுயிர்கள்**

குழவிப் பெயர் ஓரறிவுயிர்களுக்கு (மரம், செடி, கொடிகள்) உரியவை என்கிறது மரபியல்.

சங்க அக இலக்கியங்களுள் ஓரறிவுயிர்களுக்குரிய பெயராக இடம்பெறவில்லை என்பது சுட்டத்தக்கதாகும். எனினும் பெரும்பாணாற்றுப்படை மட்டும் தாழைக்குழவியென்று (357) சுட்டியுரைக்கின்றது.

**திங்கள் - வேனிற் குழவி**

மரபியலுள் குழவிக்குரியதாக நிலவு, வேனில் (காலம்) வகுக்கப்படவில்லை. ஆனால் சங்க அக நூற்களுள் கலித்தொகையில் மட்டும் 'இரண்டு' இடங்களில் நிலவிற்குரிய பெயராகவும், வேனிற்காலத்திற்குரிய பெயராக ஓரிடத்திலும் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இதனை,

"ஐய திங்கட் குழவி வருக,"[171]

"கொலைவன் சூடிய குழவித்திங்கள் போல்"[172]

எனும் அடிகளில் காணலாகின்றது. மேலும், திங்கட்குரிய பெயராகப் பெரும்பாணாற்றுப்படை (384) எடுத்தாண்டுள்ளது சுட்டத்தக்கது.

குழவிப் பெயர் காலத்திற்குரியவை என்று கலித்தொகை சுட்டியுரைக்கின்றது. அது,

"குழவி வேனில் விழவுஎதிர் கொள்ளும்"[173]

எனும் பாடலடி வழி புலப்படுகின்றது.

மேலும் மரபியலின் வரையறைக்கு அப்பாற்பட்டு பரிபாடலுள் (10:83) அம்மிக்குழவி என்று எடுத்தாளப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறாகக் குழவிப் பெயர் சங்க அக நூற்களில் 'இருபத்தொன்பது (29)' இடங்களிலும், புறநூற்களில் 'பதினொன்று (11)' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் '7' இடங்களிலும், யானை, ஆ, எருமை, மான், மக்கள், தாழை, திங்கள், வேனில், அம்மி போன்றவற்றிற்குரியதாக 'நாற்பத்தேழு (47)' இடங்களிலும் காணப்படுகின்றன.

**போத்து**

மரபியலில் 'போத்து' எனும் இளமைப்பெயர், ஓரறிவுயிர்களான மரம், செடி, கொடி வகைகள் ஆகியவற்றிற்கு உரித்தாக்கியுள்ளது. சங்க அக நூற்களுள் கலித்தொகையில்,

"நல்வாயில் போத்தந்த பொழுதினான்"[174]

என்றும்,

"வாயில்வரை இறந்து போத்தந்து தாயர்"[175]

என்றும் உயர்திணைக்குரிய பெயராக இடம்பெற்றுள்ளது சுட்டத்தக்கதாகும்.

**நாகு**

மரபியலில் 'நாகு' எனும் பெயர் பெண்பாற்கு உரியவையாகச் சுட்டடப்ப ட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களுள்,

"நல்நாள் பூத்த நாகு இளவேங்கை,"[176]

"கணைக் கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு,"[177]

"நாகுபிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு,"[178]

"போர் ஆரா ஏற்றின் பொருநாகு இளம் பாண்டில்,"[179]

"கடுஞ்சூல் ஆநாகு போல்,"[180]

"கடுவய நாகுபோல்,"[181]

"உடன்நிலை வேட்கையின் மடநாகு,"[182]

"நாகு ஆ வீழ்த்து"[183]

என்ற அடிகளில் இளைய பெண் வேங்கை, இளைய பெண் வாளை, இளையபெ ண்யானை, இளைய பெண்பசு என்பனவாக இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இவற்றை விடுத்து இளைய பெண்மான் (புறநா.157:11), இளைய பெண் சங்கு (புறநா.266:5), இளைய பெண்கோழி (புறநா.326:2), இளைய பெண் வேங்கைமரம் (புறநா.352:12), இளமை முதிரிந்த நுணா மரம் (சிறுபாண்.51), இளமை முதிர்ந்த சுரபுன்னை (சிறுபாண்.108), இளமையான எருமைக்கன்று ( பெரும்பாண்.165) எனும் பொருண்மைகளிலும் 'நாகு' எனும் பெயர் இடம்பெ ற்றுள்ளது காணலாகிறது.

சங்க அக இலக்கியங்களில் மரபியல் குறிப்பிட்ட இளமைப் பெயர்கள் விடுத்து இள (இளங்கள்; இளங்கோசர்; இளங்கோடு; இளமழை; இளமுலை;

இளமுளை; இளவேனில்...), இளமை, இளம் (இளம்துணைப்புதல்வர்; இளம் துணைமகார்) இளையோர், இளையோள், சிறாஅர், சிறார், சிறியோர், சிறியோன், சிறிய (சிறிய இலை...), சிறு (சிறுகிளி...), சிறுவர், சிறுவன், செல்வன், துரு, புதல்வர், புதல்வன், புருவை (அகநா.88:4), பைதல் (நற்.47:4), மகாஅர், மகார், மட (மட எருமை; மடக்கண்; மடக்கிளி; மடத்தகை; மடத்தகுவி; மட நல்லாள்; மடப்பசு; மடப்பிடி; மடப்பிணை; மடமயில்; மடமான்; மடமொழி...), மாழை (கலித்.131:12), முனி (நற்.360:9), வெளிறு (அகநா.333:11) போன்ற இளமை குறித்தப் பெயர்களையும் காணமுடிகின்றது.

**தொகுப்புரை**

♦ *ஒரு மொழிக்கு வளம் சேர்ப்பதும் சிறப்புத் தருவதும் அம்மொழியினிடையே வழங்கி வரும் மரபுச் சொற்களாகும். தொல்காப்பியர் மரபியலை இயற்றி அதில் முதன்மையாக வெளிப்படுத்தியிருப்பது இளமைப்பெயர்களாகும். இப்பெயர்களைத் தொகுத்தும் வகுத்தும் கட்டமைத்துள்ளார்.*

♦ *இளமை என்பது சிறுபருவம், அறிவின்மை, மென்மை, குழவி, குழவு, மழவு, இளைய தன்மை, இளவயதும் அந்த வயதுக்குரிய தன்மையும் என்று பொருள் உணரப்படுகிறது.*

♦ *பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி, போத்து என்பன தொல்காப்பியர் கூறும் இளமைப்பெயர்களாகும்.*

♦ *அணங்கு, கசளி, கயந்தலை, கரு, கருந்து, குஞ்சு, குருமன், குழந்தை, குன்னி, செள், சேய், நன்னி, நாகு, பொடி, முனி என இளமைப்பெயர்கள் பலவுள்ளதாகவும் இவை பிற்காலத்தன என்று சொல்ல முடியாது என்றுரைக்கிறார் தேவநேயப்பாவாணர்.*

♦ *நிகண்டுகளிலும், உயர்தரக் கட்டுரை இலக்கணத்திலும் தொல்காப்பியர் சுட்டும் இளமைப்பெயர்களோடு மழவு, நவ்வி, போதகம், மஞ்சு, குழவு, கயம், இளை, புருவை, முருகு, தருணம், பீழ், பருவம், சேடு, கொம்மை, விளர், கோமளம், வெண்மை, யௌவனம், பாப்பா, களபம், குராவடி, நாற்று போன்ற பிற வழக்குமுறைகளையும் எடுத்தியம்பியுள்ளன.*

♦ *பார்ப்பு எனும் இளமைப்பெயர் பறவை, அன்னம், கழுகு, நாரை ஆகிய பறப்பனவற்றிற்கும், யாமை, முதலை, குரங்கு ஆகிய தவழ்வனவற்றிற்கும் உரியதாகச் சங்க அக நூற்களில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூற்றுள் இடம்பெற்றுள்ளது.*

♦ இப்பதிவுகள் முறையே சங்க அக இலக்கியங்களில் 'பதினேழு (17)' இடங்களிலும், அகப்புற இலக்கியத்தில் ஓரிடத்திலும், ஆற்றுப்படை நூற்களில் 'நான்கு' இடத்திலுமாக மொத்தம் 'இருபத்திரண்டு (22)' இடங்களில் பார்ப்பு எனும் இளமைப்பெயர் பயின்று வந்துள்ளது.

♦ அரவமும் நண்டும் பார்ப்பு எனும் இளமைப்பெயரைக் கொண்டிருப்பதைப் பரிபாடலும் பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுவது ஆய்வுக்குரியது.

♦ பறழ் எனும் இளமைப்பெயர் 'பதினைந்து (15)' இடங்களில் இடம்பெற்றுள்ளது. பெரும்பான்மையாகக் குட்டி போட்டுப் பால் கொடுக்கும் விலங்கினங்களுக்குரியதாக இப்பெயர் அமைந்துள்ளது.

♦ நற்றிணையில் '5,' குறுந்தொகையில் '2,' ஐங்குறுநூற்றில் '3' ஆக 'பத்து (10)' இடங்களில் குரங்கிற்குரிய இளமைப்பெயராகவும், பன்றிக்குரியதாக அகநானூறு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலும், நீர்நாய், முயல் என்பனவற்றிற்கு அகநானூற்றில் ஓரிடத்திலுமாக பறழ் எனும் இளமைப் பெயர் சங்க அக நூற்களில் மட்டும் இடம்பெற்றுள்ளது.

♦ பறழ் எனும் இளமைப்பெயர் விலங்கினத்திற்குரியது என்றுரைக்க கலித்தொகை ஆண்டலைப் பறவைக்குரியதாகச் சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

♦ குட்டி எனும் இளமைப்பெயர் சங்க அக, புற இலக்கியங்களில் இடம்பெறவில்லை. பெரும்பாணாற்றுப்படையில் மட்டும் பன்றியின் இளமைப்பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது.

♦ குருளை எனும் பெயர் சங்க அக இலக்கியங்களுள் புலி, கரடி, நீர்நாய், குரங்கு, பாம்பு, பன்றி ஆகியவற்றிற்கு 'பதினைந்து (15)' இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. மேலும் புற இலக்கியத்தில் ஓரிடத்திலும், ஆற்றுப்படை நூற்களில் 'நான்கு' இடங்களிலும் குருளைப்பெயர் காணலாகிறது.

- புலிக்குரியதாக ‘9’ இடங்களிலும், நீர்நாய், நாய் முறையே ஓரிடத்திலும், பன்றி, கரடி முறையே ‘மூன்று’ இடங்களிலும், குரங்கு, பாம்பு, ஆளி ஆகியவற்றின் முறையே ‘மூன்று’ இடங்களிலும், குரங்கு, பாம்பு, ஆளி ஆகியவற்றின் முறையே ஓரிடத்திலுமாக ‘இருபது (20)’ இடங்களில் இடம்பெற்றுள்ளது.

- கரடி, குரங்கு, பாம்பு, யாளி ஆகியவை மரபியலில் வகுக்கப்படாத உயிரினங்கள் என்பது சுட்டத்தக்கது.

- சங்க அக இலக்கிய நூற்களுள் பட்டினப்பாலைத் தவிர்த்து ஏனைய நூற்களில் ‘கன்று’ எனும் பெயர் இடம்பெற்றுள்ளது.

- யானைக்குரிய பெயராக அகநூற்களில் ‘பதினேழு (17),’ புறநூற்களில் ‘4,’ ஆற்றுப்படையில் ஓரிடத்திலுமாக ‘இருபத்திரண்டு (22)’ இடங்களிலும், எருமைக்குரிய பெயராக அக நூற்களில் மட்டும் ‘இரண்டு’ இடங்களிலும், மாட்டுக்குரிய பெயராக அகநூற்களில் ‘முப்பது (30),’ புறநூற்களில் ‘9,’ ஆற்றுப்படை நூற்களில் ‘மூன்று’ இடங்களிலுமாக ‘நாற்பத்திரண்டு (42)’ இடங்களிலும், ஆமானுக்குரியதாக அக, புறநூலில் முறையே ஓரிடத்திலும், ஓரறிவுயிர்க்காக ஆற்றுப்படையில் மட்டும் ஓரிடத்திலுமாக ‘எழுபது (70)’ இடங்களுள் கன்று எனும் இளமைப்பெயர் எடுத்தாளப்பட்டுள்ளது.

- ஆ, ஆமான் ஆகிய விலங்கினங்கள் மரபியலில் வகுக்கப்படாத உயிரினங்கள் என்பது நோக்கத்தக்கது.

- நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய அக நூற்கள் பறப்பனவற்றுள் நாரை, குருவி, காக்கை, பறவை, கோழி, வெள்ளாங்குருகு, கழுகு, கொக்கு, கிளி ஆகியனவற்றிற்கும், தவழ்வனவற்றுள் முதலைக்கும் உரிய பெயராக பிள்ளையை ‘இருபத்துநான்கு (24)’ இடங்களில் எடுத்தியம்பியு

*ள்ளன. இவற்றுடன் புறநூல் 'ஐந்து' இடங்களிலும், ஆற்றுப்படையில் ஓரிட த்திலுமாக 'முப்பது (30)' இடங்களில் பிள்ளைப் பெயரைக் காண முடிகின் றது.*

- *மரபியலில் குறிப்பிடாத வெருகு, கரடி, இறால் (நீர்வாழ் சாதி), மக்கள் ஆகி ய உயிரினங்களுக்குரிய பெயராக இடம்பெற்றுள்ளது ஆய்வுக்குரியது.*

- *மகவு எனும் பெயர் அக நூற்களுள் மக்களை விடுத்துக் குரங்கிற்குரியதாகக் குறுந்தொகை மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது. மக்களுக்குரிய பெயர ாகப் பெரும்பாணாற்றுப்படை 'மூன்று' இடங்களில் எடுத்துரைத்தள்ளது.*

- *புறநானூறு புதுமையாக ஆமானுக்குரிய பெயராக இதனை அடையாளப் ப டுத்தியுள்ளது கவனிக்கத்தக்கது.*

- *சங்க அக நூற்களுள் மறி எனும் இளமைப்பெயர் ஆட்டினத்திற்கு '9' இடங் களிலும் (புறநூல்-5, ஆற்றுப்படை-2), மானினத்திற்கு 'பதின்மூன்று (13)' இ டங்களிலும் (புறநூல்கள்-2), கடலலைக்கு 'இரண்டு' இடங்களிலும் (புறநூ ல்-2) எடுத்தாளப்பட்டுள்ளன.*

- *மரபியலில் வகுக்கப்படாது கடலலைக்குரிய பெயராக இடம்பெற்றுள்ளது குறிக்கத்தக்கது.*

- *குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு தவிர்த்த ஏனைய அகநூற்களுள் யானை, ஆ, எருமை, மான், மக்கள், திங்கள் முதலானவற்றிற்குரிய பெயராக'குழவி,' 'இ ருபத்தொன்பது (29)' இடங்களில் இடம்பெற்றுள்ளது. மேலும் புறநூற்களில் 'பதினெ ான்று (11)' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் '7' இடங்களிலும் குழ விப் பெயரினைக் காணமுடிகின்றது.*

- மரபியலின் வரையறைக்கு அப்பாற்பட்டு திங்கள், வேனில் (காலம்), அம்மி முதலானவற்றிற்குக் குழவிப்பெயர் எடுத்தாளப்பட்டிருப்பது சுட்டத்தக்கது.

- இளமைப்பெயர்களுள் போத்து ஓரறிவுயிர்களுக்கென்று மரபியலில் வகுக்கப்பட்டிருக்க; கலித்தொகை மட்டும் மக்களுக்குரிய பெயராக 'இரண்டு' இடங்களில் எடுத்தாண்டுள்ளது கவனித்தற்குரியது.

- மரபியலில் நாகு எனும் பெயர் பெண்பாற்குரியதாகக் குறித்துள்ளது. சங்க அக இலக்கியங்களுள் இளைய பெண் வேங்கை மரம், இளைய பெண் வாளைமீன், இளைய பெண் யானை, இளைய பெண்பசு என்பனவற்றைக் குறிப்பதாக இடம்பெற்றுள்ளது கவனிக்கத்தக்கது. இவற்றுடன் இளைய பெண் சங்கு, இளைய பெண் கோழி, இளைய பெண் வேங்கைமரம், இளமை முதிர்ந்த நுணா மரம், இளமை முதிர்ந்த சுரபுன்னைமரம், இளமையான எருமைக்கன்று என புறநூல், ஆற்றுப்படை நூற்கள் எடுத்தியம்பியுள்ளன.

- இளமைப்பெயர்களுள் கன்று 'எழுபது (70)' இடங்களிலும், குழவி, 'நாற்பத்தேழு (47)' இடங்களிலும், மறி 'முப்பத்தைந்து (35)' இடங்களிலும், பிள்ளை 'முப்பது (30)' இடங்களிலும், பார்ப்பு 'இருபத்திரண்டு (22)' இடங்களிலும், குருளை 'இருபது (20)' இடங்களிலும், பறழ், 'பதினைந்து (15)' இடங்களிலும், நாகு, 'பதினைந்து (15)' இடங்களிலும், மகவு '5' இடங்களிலும், போத்து '2' இடங்களிலும், குட்டி ஓரிடத்திலுமாக 'இருநூற்றி அறுபத்து இரண்டு (262)' இடங்களில் இடம்பெற்றுள்ளமையைக் காணமுடிகின்றது.

- மரபியல் சுட்டிய இளைமைப்பெயர்களை விடுத்துச் சங்க அக நூற்களுள் இள, இளமை, இளம், இளையோர், இளையோன், சிறாஅர், சிறார், சிறிய, சிறியோர், சிறு, சிறுவர், சிறுவன், செல்வன், துரு, புதல்வர், புதல்வன், புருவ, பைதல், மகாஅர், மகார், மட, மாழை, முனி, வெளிறு போன்ற இளமை குறித்த பெயர்களும் இடம் பெற்றுள்ளமை ஆய்விற்குரியது.

**சான்றெண் விளக்கம்**

1. ஞா.தேவநேயப்பாவாணர், தமிழ் இலக்கிய வரலாறு, ப.243
2. சு.இலம்போதரன் (ப.ஆ.), திவாகர நிகண்டு, ப.94
3. மேலது, பக்.31, 32, 35, 36, 39
4. பிங்கலமுனிவர், பிங்கல நிகண்டு, ப.271
5. மேலது, பக்.343-344
6. ப.கணேசமுதலியார் (உ.ஆ.), சூடாமணி நிகண்டு, ப.51
7. மேலது, ப.151
8. மேலது, பக்.66-69
9. ஞா.தேவநேயப்பாவாணர், உயர்தரக் கட்டுரை இலக்கணம், பக்.10-11
10. நற்.69:3
11. கலித்.119:9
12. நற்.356:2-5
13. அகநா.31:6-11
14. மேலது, 240:2
15. நற்.385:2
16. குறுந்.152:4
17. ஐங்.43:1-2
18. மேலது, 44:1
19. அகநா.117:16
20. மேலது, 160:5-7
21. குறுந்.249:2
22. மேலது, 278:7
23. மேலது, 335:4
24. ஐங்.280:1
25. அகநா.288:12-13

26. ஐங்.41:1

27. நற்.57:4-6

28. மேலது, 95:4

29. மேலது, 168:5

30. மேலது, 233:2

31. மேலது, 379:1

32. குறுந்.69:2-3

33. ஐங்.272:1

34. மேலது, 273:2

35. குறுந்.26:7-8

36. ஐங்.278:2

37. கலித்.94:6

38. அகநா.248:2

39. பட்டினப்.75

40. அகநா.336:2-4

41. மேலது, 384:5

42. நற்.2:5

43. மேலது, 383:2-3

44. குறுந்.47:2

45. மேலது, 209:2

46. அகநா.147:3-6

47. மேலது, 329:10-13

48. பட்டினப்.220-221

49. அகநா.201:16-17

50. மேலது, 275:12

51. நற்.195:2

52. குறுந்.38:2

53. மேலது, 119:1

54. ஐங்.265:1-2

55. மேலது, 268:1-3

56. ஐங்.397:2

57. நற்.85:5

58. மேலது, 92:7

59. மேலது, 105:4

60. மேலது, 194:3

61. மேலது, 202:3-4

62. மேலது, 393:2

63. மேலது, 399:6-7

64. குறுந்.225:1-2

65. அகநா.68:17-18

66. மேலது, 83:4

67. மேலது, 85:7

68. மேலது, 118:7

69. மேலது, 121:5

70. மேலது, 197:14

71. மேலது, 211:9-10

72. மேலது, 321:9

73. மேலது, 347:13

74. நற்.80:2

75. ஐங்.97:2

76. நற்.171:5

77. மேலது, 213:2

78. மேலது, 290:2

79. மேலது, 359:1-3

80. குறுந்.27:1-2

81. மேலது, 108:2

82. மேலது, 241:3

83. மேலது, 260:7

84. கலித்.81:36

85. மேலது, 108:33

86. மேலது, 110:13

87. மேலது, 110:23

88. மேலது, 111:1

89. மேலது, 112:12

90. மேலது, 116:1

91. மேலது, 116:8

92. மேலது, 119:10

93. அகநா.9:20

94. மேலது, 14:9-11

95. மேலது, 63:10-12

96. மேலது, 64:14-15

97. மேலது, 87:2

98. மேலது, 101:8-10

99. மேலது, 131:7-8

100. மேலது, 253:17

101. மேலது, 354:3-4

102. முல்லைப்.12

103. குறிஞ்சிப்.217-218

104. நற்.57:1-2

105. மேலது, 91:4-7

106. மேலது, 181:1-5

*107.* குறுந்.*46:2-5*

*108.* நற்.*367:2*

*109.* மேலது, *385:5*

*110.* குறுந்.*92:2-4*

*111.* மேலது, *139:1-4*

*112.* ஐங்.*151:1* முதல் *160:1* வரை

*113.* அகநா.*193:6-8*

*114.* மேலது, *290:1-6*

*115.* மேலது, *324:3-4*

*116.* ஐங்.*24:2*

*117.* குறுந்.*107:4*

*118.* அகநா.*297:13-14*

*119.* மேலது, *257:21*

*120.* குறுந்.*29:6*

*121.* நற்.*47:9*

*122.* குறுந்.*221:2*

*123.* மேலது, *263:1*

*124.* மேலது, *362:4*

*125.* அகநா.*94:4*

*126.* மேலது, *104:9*

*127.* மேலது, *242:12*

*128.* மேலது, *274:10*

*129.* மேலது, *292:4*

*130.* குறுந்.*187:1*

*131.* கலித்.*50:4*

*132.* குறுந்.*213:2-5*

*133.* மேலது, *282:3*

134. ஐங்.326:2

135. மேலது, 354:2

136. மேலது, 401:1

137. மேலது, 434:2

138. மேலது, 493:2

139. அகநா.34:4-6

140. மேலது, 304:8-9

141. மேலது, 314:5-6

142. மேலது, 371:4-5

143. கலித்.121:21

144. அகநா.18:3

145. நற்.47:1-4

146. மேலது, 171:1-3

147. குறுந்.394:1

148. ஐங்.216:2-3

149. அகநா.165:3

150. மேலது, 168:9-10

151. மேலது, 229:4

152. நற்.213:4

153. குறுந்.64:1-3

154. மேலது, 132:4

155. மேலது, 344:5

156. அகநா.49:4-5

157. மேலது, 54:7-9

158. மேலது, 293:11-12

159. குறுந்.322:1

160. நற்.120:1

161. மேலது, 271:1

162. குறுந்.181:3-4

163. ஐங்.92:2

164. பட்டினப்.14

165. கலித்.43:14

166. மேலது, 50:21-22

167. நற்.15:7

168. குறுந்.397:4-5

169. கலித்.99:4

170. பட்டினப்.96

171. கலித்.80:18

172. மேலது, 103:15

173. மேலது, 36:9

174. மேலது, 84:5

175. மேலது, 84:14

176. அகநா.85:10

177. குறுந்.164:1

178. மேலது, 346:1

179. கலித்.109:4

180. மேலது, 110:14

181. மேலது, 116:6

182. அகநா.64:12

183. மேலது, 249:13.

# சங்க அக இலக்கியங்களில் ஆண்பாற்பெயர்கள்

*உலகில் தோன்றிய பல்வேறு மொழிகளில் அழிந்தொழிந்த மொழிகள் பல; அழிந்து கொண்டிருப்பவை சில. இதனைக் கருத்தில் கொண்டு தமிழ் மொழியையும் அதன் வளத்தையும் (வழக்கு முறைமைகள்) காக்கும் பொருட்டுத் தொல்காப்பியர் தன் காலத்திற்கு முன்னும் ; தனது காலத்திலும் வழங்கிய மரபுச் சொற்களைக் காலங்காலமாக அழியாது காத்திட மரபியலை வகுத்துள்ளார். அவற்றுள் பெயர் மரபுகளுக்குத் தனிச்சிறப்பிடம் தந்துள்ளார். அச்சிறப்பினுள் இடம்பெற்றுள்ள இளமை, ஆண்பால், பெண்பாற்பெயர் மரபுகளின் படிச் சங்க அக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள ஆண்பாற்பெயர்கள் குறித்துக் காண்கின்றது இவ்வியல்.*

## மரபியல் கூறும் ஆண்பாற்பெயர்கள்

*மரபியலுள் இளமைப்பெயர்களுக்கு அடுத்ததாக ஆண்பாற் பெயர்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அவை எருது, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன், பிறவும் (தொல்.மரபி.2) என்பனவாகும். பிறவும் என்று சுட்டியதுடன் வகுக்கப் பெற்றனவற்றுள் 'ஏறு' என்பதனையும் காணமுடிகின்றது (தொல்.மரபி.39,40,41).*

## நிகண்டுகளில் ஆண்பாற்பெயர்கள்

*மரபியலுள் விளம்பியுள்ள ஆண்பாற்பெயர்களைக் கொண்டு நிகண்டுகளின் அமைவுகளை நோக்க பின்வருமாறு அறிய முடிகின்றது.*

### திவாகர நிகண்டு

*திவாகர நிகண்டு ஆண்பாற்பெயர்களென்று, "களிறு, ஆ, ஒருத்தல், ஏறு, போத்து, பகடு, கலை, உம்பல், கடுவன், சேவல், தகர், ஏட்டை (12)"[1] ஆகியவற்றைக் குறிப்பிட்டுள்ளது. இவற்றுடன்,*

| | |
|---|---|
| “களிறு (2) | : வேழம், கேழல் |
| மா (2) | : குதிரை, யானை |
| ஒருத்தல் (9) | : புலி, உழை, புல்வாய், மரை, எருமை, கவரி, யானை, பன்றி, கரடி |
| ஏறு (9) | : கவரி, பன்றி, மரை, உழை, புல்வாய், எருமை, எருது, சுறவு, துருவாடு |
| போத்து (9) | : புலி, மரை, புல்வாய், பெற்றம், எருமை, பூஞை, நீர்வாழ் சாதி, குதிரை ஆண், வெருகு |
| பகடு | : யானை, பெற்றம், எருமை, ஏற்றை |
| கலை | : மான், முசு |
| உம்பல் | : யானை, யாடு |
| கடுவன் | : குரங்கு, வெருகு |
| சேவல் | : கோழி, அன்னம் |
| தகர் | : சுறா, களிறு, ஆளி, துருவ ஆட்டுஏறு |
| ஏட்டை | : எருமைப்பகடு, வெருகின் ஏறு |
| சே | : எருமை, புல்வாய்”[2] |

என்றும்,

| | |
|---|---|
| “களிற்றியானை (2) | : மதகரி, தந்தி |
| ஆண் பசு (13) | : பாறல், புல்லம், பாண்டில், பசு, மூரி, ஏறு, பூணி, இறால், பெற்றம், எருது, சே, விடை, இடபம் |
| எருமை ஆண் (2) | : பகடு, கடா |
| துருவாடு ஏறு (4) | : ஏழகம், தகர், மேழகம், கடா |
| வெள்ளாட்டுஏறு(3) | : உதள், செச்சை, மோத்தை |
| மான் ஏறு (1) | : இரலை |
| புல்வாய் (1) | : இரலை |
| ஆண் பூனை (3) | : விலாளம், கடுவன், வெருகு |
| முசு (3) | : ஓரி, கலை, கடுவன் |

ஆண் : ஆண்பாலெவையும் ஆண் எனப்படும்

போதகம் : அரிமா, யானை, புலியே அணைய இணையவேற்றை

போதகம் என்பர்”[3]

என்று ஆண்பாற்பெயர் குறித்து விளக்கியுள்ளது.

**பிங்கல நிகண்டு**

விலங்கின் ஆண் மரபினை பிங்கல நிகண்டு பின்வருமாறு விளம்பியுள்ளது. அவைகளாவன,

“விலங்கு ஆண் : களிறு, போத்து, கலை, கடுவன், பகடு, சே, ஒருத்தல், தகர், ஏறு, உம்பல், ஏட்டை, மா, ஓரி, சேவல் (14)

‘களிறும் போத்துங் கலையுங் கடுவனும்
பகடுஞ் சேவு மொருத்தலுந் தகரு
மேறு மும்பலு மேட்டையு மாவு
மோரியுஞ் சேவலும் விலங்கி னாண்பெயர்’ (2555)

அவற்றுள்,

களிறு : கரி, சுறவு, கேழல் ஆகிய மூன்றற்கும் ஆம்

அவற்றுள், கரியுஞ் சுறவுங் கேழலுங் களிறே’ (2556)

போத்து : மரை, ஆன், காரான், காட்டா, புல்வாய், புலி, சலசாதி (7)

மரையான் காரான் காட்டாப் புல்வாய்
புலிசல சாதி யனைத்தும் போத்தே (2257)

போத்து தொடர்ச்சி : யானை, பூனை, குதிரை (3) (7+3 =10),

யானை வெருகு குதிரை போத்தே (2558)

(‘சலசாதிஅனைத்தும்’ என்றது : சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை இவ்வாறனையும். இதனை, “நீர்வாழ் சாதியுளறு பிறப்புரிய” என்ற தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் சூத்திரத்தால் உணர்க.)

கலை : மான், முசு (2)

மானு முசுவுங் கலையென வருமே (2559)

கடுவன் : குரங்கு, பூஞை (2)

கவியும் பூஞையுங் கடுவ னென்ப (2560)

பகடு : யானை, எருமை, பெற்றம் (3)

யானையு மெருமையும் பெற்றமு மற்றிவை

பான்மையி லுரைக்கிற் பகட்டென் றாமே (2561)

சே : குதிரை, எருது, புல்வாய் (3)

குதிரை யெருது புல்வாய் சேவெனல் (2562)

ஒருத்தல் : கவரி, யானை, பன்றி, கரடி (4)

கவரி யானை பன்றி கரடி

யுரிய வாகு மொருத்தற் பெயர்க்கொடை (2563)

தகர் : துருவாடு, வேழம், யாளி, சுறா (4)

துருவாடும் வேழமும் யாளியுஞ் சுறாவும்

தகரெனு நாமஞ் சாற்றப் பெறுமே (2564)

ஏறு : புலி, உழை, மரை, ஆ, புல்வாய், எருமை, பன்றி, சுறா, சங்கு (9)

புலியுழை மரையாப் புல்வா யெருமை

யரிசுறாச் சங்கே யேறென லாகும் (2565)

உம்பல் : யானை, யாடு (2)

யானையும் யாடு மும்ப லென்ப (2566)

ஏட்டை : எருமை, வெருகு (2)

எருமையும் வெருகு மேட்டை யென்ப (2567)

மா : குதிரை, யானை, பன்றி (3)

குதிரை யானை பன்றி மாவே (2568)

ஓரி : முசு, நரி (2)

முசுவு நரியு மோரி யாகும் (2569)

சேவல் : கோழி, அன்னம் (2)

கோழியும் மன்னஞ் சேவ லாகும் (2570)”[4]

என்பனவற்றின் மூலம் அறியலாகிறது.

**சூடாமணி நிகண்டு**

சூடாமணி நிகண்டும் விலங்கின் ஆண் மரபுகளைக் குறிப்பிடுகின்றது. அவை பின்வருமாறு இடம்பெற்றுள்ளன.

“விலங்கின் ஆண்மரபு :

கடுவன்மாவொருத்தல்போத்துக்கலைதகர்களிறுசேவி
னொடுபகடும்பலேறோடோரியீராறுமாண்போர்
வடுவறுகுரங்குபூஞைமற்றிவைகடுவனாமே
அடுதிறல்யானை பன்றியாடல்வெம்புரிமாவாம் (30)

விலங்கின் ஆண் பெயர் - கடுவன், மா, ஒருத்தல், போத்து, கலை, தகர், களிறு, சே, பகடு, உம்பல், ஏறு, ஓரி (12).

கடுவனென்னும் பெயர் - குரங்கு, பூஞை இரண்டுக்குமாம்.

மாவென்னும் பெயர் - யானை, பன்றி, புரவி (3)

கரடிபுல்வாய்மான்யானைகவரியோடெருமைபன்றி
பொருபுலிமரையென்றொன்பான்புகன்றிடுமொருத்தலாகும்
மரைபசுப்புலியேபூஞைமற்றைப்புல்வாயும்போத்தாம்
கருதியமுசுவுமானுங்கலையெனக்காட்டலாமே (31)

ஒருத்தலென்னும் பெயர் - கரடி, புல்வாய், மான், யானை, கவரி, எருமை, பன்றி, புலி, மரை (9)

போத்தென்னும் பெயர் - மரை, பசு, புலி, பூஞை, புல்வாய் (5)

கலையென்னும் பெயர் - முசு, மான் (2)

துருவாடுவேழம்யாளிசுறாத்தகரென்றேசொல்லும்
கரியொடுசுறவுபன்றிகளிறெனக்காட்டலாமே

*செருமலிகுதிரைபெற்றம்புல்வாயேசேவென்றாகும்*

*எருமையோடியானைபெற்றம்பகடிபமும்பலாமே (32)*

*தகரென்னும் பெயர் - துருவாடு, வேழம், யாளி, சுறா (4)*

*களிரென்னும் பெயர் - கரி, சுறவு, பன்றி (3)*

*சேவென்னும் பெயர் - குதிரை, பெற்றம், புல்வாய் (3)*

*பகடென்னும் பெயர் - எருமை, யானை, பெற்றம் (3)*

*உம்பலென்னும் பெயர் - இபம் (1)*

*ஆனுடனெருமைபன்றியாய்மயிர்கவரிசங்கு*

*மானொடுமரைபுல்வாயுமாறுகொள்சுறவுமேறாம்*

*ஊனுகர்நரியினோடுமுசுவிவையோரியாகும்*

*மானநூல்விலங்கினாணின்மரபெனவடைத்தவாறே (33)*

*ஏறென்னும் பெயர் - ஆண், எருமை, பன்றி, கவரி, சங்கு, மான், மரை, புல்வாய், சுறவு (9)*

*ஓரியென்னும் பெயர் - நரி, முசு (2).”*[5]

**உயர்தரக் கட்டுரை இலக்கணம்**

தேவநேயப்பாவாணர் உயர்தரக் கட்டுரை இலக்கணம் எனும் நூலில் மரபுப் பெயர்களுள் ஆண்பாற்பெயர்களை முதலாவதாக எடுத்தியம்பியுள்ளார். அவை,

| **உயிரினப் பெயர்** | **ஆண்பாற் பெயர்** |
|---|---|
| “யானை, பன்றி | களிறு |
| குரங்கு | கடுவன், திம்மன் |
| எருமை | கண்டி |
| பன்றி | கேழல் |
| புல்வாய், புலி, உழை, மரை | |

| | |
|---|---|
| கவரி, கராம், யானை, பன்றி, எருமை | ஒருத்தல் |
| அரிமா, பன்றி, புல்வாய், உழை, கவரி, எருமைமாடு, மரை, சுறா | ஏறு |
| அரிமா, புலி, குரங்கு, பனை | ஏற்றை |
| மாடு, எருமை, புலி, மரை, புல்வாய், சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை, மயில், புல்லூறு | போத்து |
| புல்வாய் | இரலை |
| புல்வாய், உழை, முசு | கலை |
| ஆடு | மோத்தை, தகர், உதள், அப்பர், மேழகம் (ஏழகம்), செச்சை |
| பறவைகள், குதிரை | சேவல் |
| குதிரை, மாடு, புல்வாய் | சே |
| மாட்டுக்கன்று, எருமைக்கன்று | சேக்கன்று |
| ஆடு, மாடு, எருமை | கடா |
| மாடு, எருமை, யானை | பகடு |
| மாடு | காளை, எருது |

ஆண்பாற்குச் சிறப்புப் பெயர் பெறாத உயிரினங்களின் ஆண்பாலெல்லாம், ஆண் என்னும் அடைமொழி பெற்ற பொதுப் பெயரால் குறிக்கப் பெறும்
.

எ.டு. ஆண் கரடி, ஆண் பல்லி”[6]

என்பனவற்றின் வழி அறியமுடிகின்றது.

*இவ்வாறாக நிகண்டுகள், உயர்தரக் கட்டுரை இலக்கணம் ஆண்பாற்பெயர் வகைமைகளை மரபியலில் விளம்பியுள்ளவற்றுடன் பிற்கால வழக்குமுறைகளையும் எடுத்துரைத்துள்ளமையைக் காணமுடிகின்றது.*

**சங்க அக இலக்கியங்களுள் ஆண்பாற்பெயர்கள்**

*தொல்காப்பிய மரபியலில் சுட்டப்பட்டுள்ள ஆண்பாற்பெயர்கள் சங்க அக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள அமைவுகளையும், இடம்பெறாப் பெயர்களையும் புதுமையான மரபுகளையும் பின்வரும் பகுதிகள் மெய்ப்பிக்கின்றன.*

**எருது (காளை மாடு)**

*'எருது' எனும் ஆண்பாற்பெயர் மரபியலுள் தொகுத்தவற்றுள் சுட்டிக்காட்டப் பட்டாலும் வகுக்கப்பெற்றனவற்றுள் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கதாகும். இப்பெயர் சங்க அக இலக்கியங்களுள் "மூன்று"[7] இடங்களில் நற்றிணையில் 'இரண்டு' இடங்களிலும், அகநானூற்றில் ஓரிடத்திலும் காணக் கிடைக்கின்றமையை,*

*"வேங்கைக் கண்ணியர் எருது எறி களமர்,"*

*"நல்எருது நடை வளம் வைத்தென,"*

*"மருதமர நிழல் எருதொடு வதியும்"*

*எனும் பாடலடிகள் உறுதிப்படுத்துகின்றன. இவற்றுடன் புறநூற்களான பதிற்றுப்பத்துள் (27:13) ஓரிடத்திலும் ; புறநானூற்றுள் (102:1, 289:2, 327:1, 342:13, 370:16) ஐந்திடங்களிலும்; அகப்புற நூலான பரிபாடலுள் (20:62) ஓரிடத்திலும், ஆற்றுப்படையுள் (மலை.469) ஓரிடத்திலும் எருது எனும் பெயர் காணலாகின்றது. இப்பாடலடிகள் அனைத்தும் காளை மாட்டினைக் குறித்ததாகக் காட்சிப் படுத்துகின்றன.*

*இவ்வாறாக 'எருது' என்னும் பெயர் அகநூல்களுள் மூன்றிடங்களிலும், புறநூற்களுள் 'ஆறு' இடங்களிலும், அகப்புற நூலுள் ஓரிடத்திலும், ஆற்றுப்ப*

டையுள் ஓரிடத்திலுமாக 'பதினொரு (11)' இடங்களில் இடம்பெற்றுள்ளமை யை அறியமுடிகின்றது.

**ஏறு**

மரபியலுள் புல்வாய், உழை, கவரி ஆகியன மானினத்திற்கும்; பன்றி, எருமை, மரை, ஆ, பெற்றம்; கடல்வாழ் சுறவு (சுறா மீன்) முதலானவற்றிற்குரிய பெயராகவும் 'ஏறு'ம் குறிப்பிடப்பட்டுள்ளது.

'ஏறு' என்ற பெயர் சங்க அக இலக்கியங்களில் மாடு, மரை, மான், சுறவு ஆகியவற்றிற்கும், மரபியல் குறிக்காத உயர்திணை, ஞாயிறு (சூரியன்), இடி, எழால் (குறும்பூழ் பறவை) முதலானவைகளுக்கும் சுட்டப்பட்டுள்ளன.

**மாடேறு**

ஏறு எனும் பெயர் மாட்டுக்குரியதாகச் சங்க அக இலக்கியங்களுள் நற்றிணை, குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு ஆகிய நூற்களை விடுத்து, ஏனைய நூற்களில் "நாற்பத்தேழு (47)"[8] இடங்களில் எடுத்தாளப் பட்டுள்ளன. அவைகளாவன,

"நல்ஏறு இயங்குதொறு இயம்பும்
பல்ஆன் தொழுவத்து ஒருமணிக் குரலே,"
"எல்ஊர்ச் சேர்தரும் ஏறுடை இனத்துப்
புல்ஆர் நல்ஆன் பூண்மணி கொல்லோ"
"கண்ணி மருப்பின் அண்ணல் நல்ஏறு,"
"நல்ஏறு தழீஇ நாகுபெயர் காலை,"
"ஏறு முரண் சிறப்ப,"
"ஏறு தொழூஉப் புகுந்தனர் இயைபுடன் ஒருங்கு,"
"கொல்ஏறு சாட இருந்தார்க்கு எம்பல் இருங்,"
"ஆங்கு ஏறும் வருந்தின ஆயரும் புண் கூர்ந்தார்,"
"பொருபுகல் நல்ஏறு கொள்பவர் அல்லால்,"

"வருந்தினான் மன்ற அவ்ஏறு,"

"ஏறு எவ்வம் காணா எழுந்தார் எவன் கொலோ,"

"ஏறு உடை நல்லார் பகை,"

"உடல் ஏறு கோள் சாற்றுவார்,"

"பொருமுரண் முன்பின் புகல்ஏறு பலபெய்து,"

"தெரிபு தெரிபு குத்தின ஏறு,"

"ஏறு கொண்டு ஒருங்கு தொழூஉ விட்டனர்,"

"அஞ்சார் கொலைஏறு கொள்பவர் அல்லதை,"

"குரூஉக் கண் கொலை ஏறு கொள்வான்,"

"நறை வலம் செயவிடா இறுத்தன ஏறு,"

"வாடா வெகுளி எழில்ஏறு கண்டை,"

"தொழுவினுள் கொண்ட ஏறு எல்லாம் புலம்புக,"

"குரூஉக் கண் கொலை ஏறு கொண்டேன்,"

"கொள இடம் கொளவிடா நிறுத்தன ஏறு,"

"மிடைப் பாயும் வெள் ஏறு கண்டைகா,"

"ஆங்க ஏறும் பெறுவரும் மாறுற்று,"

"நல்ஏறு கொண்ட பொதுவன் முகன் நோக்கி,"

"கொல்ஏறு போலும் கதம்,"

"மெய்வார் குருதி ஏறு எல்லாம்,"

"மரத்தைப் போல் தொட்டன ஏறு,"

"அம்பி ஊர்ந்தாங்கு ஊர்ந்தார் ஏறு,"

"ஏறுதம் கோலம் செய்மருப்பினால்,"

"தம்புல ஏறு பரத்தர உய்த்த தம்,"

"கொலை ஏறு சாடிய புண்ணை, எம் கேளே,"

"கொல் ஏறு கொண்டான் குருதி மயக்குறப்,"

"கொல்ஏறு கொண்டான் இவள் கோள்வன்,"

"கொல் ஏறு கோடல் குறைஎன கோவினத்தார்,"

*"பல்ஏறு பெய்தார் தொழூஉ,"*

*"ஆமுனியா ஏறுபோல் வைகல் பதின்மரை,"*

*"நல்ஏறு நாகுடன் நின்றன,"*

*"ஊர்ந்தது ஏறே சேர்ந்தோள் உமையே,"*

*"இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை,"*

*"ஏறு முந்துறுத்து சால்பதம் குவைஇ,"*

*"இன்சிலை எழில் ஏறு கெண்டி புரைய,"*

*"ஏறுடை இனநிரை பெயர பெயராது,"*

*"ஏறுடை ஆயத்து இனம்பசி தெறுப்ப,"*

*"பதவுமேயல் அருந்து துளங்கு இமில் நல்ஏறு,"*

*"ஏறு பொரச் சேறாகி"*

*என்ற பாடலடிகளின் வழி அறியலாகின்றது.*

*மாடேறு என்று குறுந்தொகையில் 'மூன்று' இடங்களிலும், ஐங்குறுநூற்றில் 'இரண்டு' இடங்களிலும், கலித்தொகையில் 'முப்பத்திநான்கு (34)' இடங்களிலும், அகநானூற்றில் 'ஏழு' இடங்களிலும், பட்டினப்பாலையில் ஓரிடத்திலுமாக 'நாற்பத்தேழு (47)' இடங்களில் இடம்பெற்றுள்ளது. இவற்றுடன், புறநூற்களான பதிற்றுப்பத்தில் (71:13, 90:45) 'இரண்டு' இடங்களிலும், புறநானூற்றில் (1:3, 1:4:259:1, 288:2, 309:4, 339:1) 'ஆறு' இடங்களிலும், நெடுநல்வாடையில் (4) ஓரிடத்திலும்; அகப்புறநூலான பரிபாடலில் (20:24) ஓரிடத்திலும்; ஆற்றுப்படை நூற்களில் திருமுருகாற்றுப்படை (151), பெரும்பாணாற்றுப்படை (210) முறையே ஓரிடத்திலும், மலைபடுகடாமில் (330, 335, 408, 573) 'நான்கு' இடங்களிலுமாக, 'ஏறு' எனும் பெயரானது மாட்டுக்குரியதாக ' அறுபத்துமூன்று (63)' இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளன.*

**மரையேறு (மரையானேறு)**

மரைக்குரிய பெயராகிய, ‘ஏறு’ சங்க அக நூற்களில் மட்டுமே காணக் கிடைக்கிறது. குறுந்தொகையில் ‘இரண்டு’ இடங்களிலும், அகநானூற்றில்ஓரிடத்திலுமாக“மூன்று”[9] இடங்களில்இடம்பெற்றுள்ளது. இதனை,

“புரிமட மரையான் கருநரை நல்ஏறு,”

“மன்ற மரையா இரிய ஏறு அட்டு,”

“மரைஏறு சொறிந்த மாத்தாள் சந்தின்”

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

**மானேறு**

மானுக்குரிய ஆண்பாற்பெயராக மானேறு நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு ஆகிய அகநூற்களில் “பன்னிரண்டு (12)”[10] இடங்களில் இடம்பெற்றுள்ளது. அவற்றைப் பின்வரும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன,

“ஏறுபிரி டப்பிணை கடுப்ப வேறுபட்டு,”

“தேடூஉ நின்ற இரலை ஏறே,”

“மான்ஏறு உகளும் கானம் பிற்பட,”

“மான்ஏறு மடப்பிணை தழீஇமருள் கூர்ந்து,”

“திரிமருப்பு இரலை அண்ணல் நல்ஏறு,”

“பொரி மலர்ந்தன்ன பொறிய மடமான்
திரிமருப்பு ஏறொடு தேர் அறற்கு ஓட,”

“ஏறுடை இனத்த நாறுஉயிர் நவ்வி,”

“வெருள் ஏறு பயிரும் ஆங்கண்,”

“ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பிணை
ஏறுபுணர் உவகைய ஊறுஇல உகள,”

“கணைக்கால் அம்பிணை ஏறுபுறம் நக்க,”

“கதிர்க்கால் அம்பிணை உணீஇய புகல்ஏறு,”

“அலந்தலை மூதேறு ஆண்குரல் விளிப்ப.”

*இவ்வகையில் அகநூற்களான நற்றிணையுள் 'இரண்டு' இடங்களிலும், குறுந்தொகையுள் 'மூன்று' இடங்களிலும், கலித்தொகையுள் ஓரிடத்திலும், அகநானூற்றுள் 'ஆறு' இடங்களுமாக 'பன்னிரண்டு (12)' இடங்களில் மானுக்குரிய பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது. இவற்றுடன், பதிற்றுப்பத்தில் (89:2) ஓரிடத்திலும், புறநானூற்றில் (157:10, 202:2) 'இரண்டு' இடங்களிலுமாக 'பதினைந்து (15)' இடங்களில் மானேறு என்று இயம்பப்பட்டுள்ளது.*

**சுறவேறு**

*மரபியல் கூறும் 'ஏறு' சுறாமீனின் ஆண்பாற்பெயராகச் சங்க அக இலக்கியங்களில் கலித்தொகை மட்டும் ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளமையை,*

*"சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்"[11]*

*என்ற பாடலடி அறியச் செய்கிறது.*

**மரபியலில் வகுக்கப்படா உயிரினங்களில் ஏறு**

**சிங்க ஏறு**

*சிங்கத்திற்குரிய பெயராக அகநூற்களுள் கலித்தொகை மட்டும் ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளது. அவை,*

*"ஏறு பெற்று உதிர்வன போல் வரை பிளந்து இயங்குநர்"[12]*

*எனும் அடி வழி தெளிய முடிகிறது. இவற்றுடன், பதிற்றுப்பத்து (38:10), புறநானூறு (58:8), மதுரைக்காஞ்சி (144) முறையே ஓரிடத்திலும், திருமுருகாற்றுப்படையில் (264, 268) 'இரண்டு' இடங்களிலும் சிங்கத்திற்கு 'ஏறு' எனும் பெயர் சுட்டப்பட்டுள்ளது.*

**ஏழாலேறு**

*மரபியலுள் வகுக்கப்படாத, பறவையினங்களுக்குரிய பெயராகச் சங்க அக இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ள எழால் (குறும்பூழ்) எனும் பறவைக்குரி*

ய பெயராக 'ஏறு' இடம்பெற்றுள்ளதை அகநானூறு மட்டும் சுட்டியுள்ளது. அது,

"நிழல் அறு நனந்தலை எழால் ஏறு குறித்த"[13]

என்ற பாடலடி மெய்ப்பிக்கின்றது. இதனுடன்,

"ஏறுவேட்டு எழுந்த இனம்தீர் எருவை"[14]

எனும் அடியுள் இரையை எற்றுதலை விரும்பிய ஆண் பருந்தின் விரைவுச் (வேகம்=குறி) செயலினைக் குறித்ததாகச் சுட்டியுள்ளார் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். மேலும் பருந்துக்குரிய பெயராகப் புறநானூறு (43:5) குறிப்பிட்டுள்ளதும் சுட்டடத்தக்கதாகும்.

**இடியேறு**

இடிக்கும் 'ஏறு' எனும் பெயர் உரித்தாகியுள்ளதை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய அகநூற்களுள் "பதினைந்து (15)"[15] இடங்களில் எடுத்தாளப் பட்டுள்ளன. அவை,

"தழங்கு குரல் ஏறொடு முழங்கி வானம்,"

"ஆர்கலி நல்ஏறு திரிதரும்
கார்செய் மாலை வரூஉம் போழ்தே,"

"கடுங்குரல் ஏறொடு கனைதுளி தலைஇ,"

"ஈர்ங்குரல் உருமின் ஆர்கலி நல்ஏறு,"

"இருள் தூங்கு விசும்பின் அதிரும் ஏறொடு
வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வானம்,"

"ஏறுடை மழையின் கலிழும்,"

"அம்கண் இருவிசும்பு அதிர ஏறொடு
பெயல் தொடங் கின்றே வானம்,"

"......................... ஏறு எதிர் இரங்க,"

"ஏறு இரங்கு இருளிடை இரவினில் பதம்பெறாஅன்,"

"ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப,"

*"........................................ விசும்பின்*

*ஏறுஎழுந்து முழங்கினும் மாறு எழுந்து சிலைக்கும்,"*

*"விசும்பின் நல்ஏறு சிலைக்கும் சேண்சிமை,"*

*"உரவுஉரும் ஏறொடு மயங்கி*

*இரவுப் பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே,"*

*"முழவு அதிர்ந்தன்ன முழக்கத்து ஏறோடு*

*உரவுப் பெயல் பொழிந்த நள்ளென் யாமத்து,"*

*"ஏறுடைப் பெருமழை பொழிந்தென"*

*என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.*

*இவற்றுள் நற்றிணை 'ஐந்து' இடங்களிலும், குறுந்தொகை, கலித்தொகை முறையே ஓரிடத்திலும், ஐங்குறுநூறு 'இரண்டு' இடங்களிலும், அகநானூறு 'ஆறு' இடங்களிலுமாகப் 'பதினைந்து (15)' இடங்களில் குறிப்பிட்டுள்ளதுடன்; பதிற்றுப்பத்தில் (23:13) ஓரிடத்திலும், புறநானூறு (160:3, 265:6), பரிபாடல் (8:33, 20: 2), மதுரைக்காஞ்சி (63, 243) முறையே 'இரண்டு' இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படை (135) ஓரிடத்திலும் என்று 'இருபத்திமூன்று (23)' இடங்களில் இடிக்குரிய பெயராக இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.*

**பன்றியேறு**

*மரபியலுள் 'ஏறு' பெயர் பெறுவனவாக வகுக்கப்பட்டுள்ள உயிரினங்களில் பன்றியும் ஒன்று. இவ்விலங்கிற்குரிய பெயராகச் சங்க அக இலக்கியங்கள் எடுத்து விளம்பாத நிலையில் பதிற்றுப்பத்து (13:2), மதுரைக்காஞ்சி (298) முறையே ஓரிடத்தில் குறித்துள்ளது சுட்டத்தக்கதாகும். இத்திறத்துடன்,*

*"இமிழ்முரசு இரங்க ஏறுமாறு சிலைப்ப" (மதுரைக்.672)*

*எனும் அடியில் ஆண்விலங்குகள் (பொதுப்பெயர்) மாறுபட்டு முழங்கியதாகப் பதிவு செய்துள்ளது குறிக்கத்தக்கதாகின்றது.*

**ஆமாவேறு**

*ஆமாவிற்குரிய பெயராகச் சங்க அக இலக்கியங்களுள் இடம்பெறா நிலையில் திருமுருகாற்றுப்படை மட்டும் 'ஆமா நல்ஏறு சிலைப்ப சேண்நின்று' (315) என்று எடுத்துரைத்துள்ளது சுட்டத்தக்கதாகும்.*

*இவற்றுடன், பதிற்றுப்பத்தில் 'எடுத்தேறு ஏய கடிப்புடை அதிரும்' (85:1) என்று படைக்கருவிகளை எடுத்தெறியும் திறத்திற்கும், 'மட்டப் புகாவின் குட்டுவர் ஏறே' (90:26) என குட்டுவர்களின் தலைவன் (தலைமைப் பண்பிற்கும்), பொருநராற்றுப்படையில் 'கோலின் தாறு களைந்து ஏறு என்று ஏற்றி' (166-7) என்று இங்ஙனம் ஏறுகவென்று தேரில் ஏற வழிகாட்டிய முறைக்கும் 'ஏறு' எடுத்தாளப்பட்டுள்ளமைச் சுட்டத்தக்கதாகின்றது.*

*'ஏறு' பெயர் சங்க அக நூற்களில் மாட்டுக்குரியதாக ' நாற்பத்தேழு (47)' இடங்களிலும், மானுக்குரியதாக 'பன்னிரண்டு (12)' இடங்களிலும், மரைக்குரியதாக '3' இடங்களிலும், சுறவு (சுறாமீன்), சிங்கம், எழால் (குறும்பூழ்பறவை) முறையே ஓரிடத்திலும், இடிக்குரியதாக 'பதினைந்து (15)' இடங்களிலுமாக 'எண்பது (80)' இடங்களில் பொதிந்துள்ளன.*

*இவ்வாறாக 'ஏறு' எனும் பெயர் மாட்டுக்குரியதாக 'அறுபத்துமூன்று (63)' இடங்களிலும், மரைக்குரிய பெயராக '3' இடங்களிலும், மானுக்குரியவென்று 'பதினைந்து (15)' இடங்களிலும், சுறவு (சுறாமீன்), எழால் பறவை, ஆமா, விலங்கு (பொதுப்பெயர்) முறையே ஓரிடத்திலும், பருந்து, பன்றி முறையே 'இரண்டு' இடங்களிலும், சிங்கத்திற்கு 'ஆறு' இடங்களிலும், இடிக்குரியதாக 'இருபத்து மூன்று (23)' இடங்களிலுமாக ஏறு எனும் பெயர் 'நூற்று இருபத்தொன்று (121)' இடங்களில் பதிவாகியுள்ளது குறிப்பிடத்தக்கதாகின்றது.*

**ஏற்றை**

மரபியலில் 'ஏற்றை' எனும் ஆண்பாற்பெயர் ஆற்றல் மிக்க வலிமை வாய்ந்த ஆண் இனம் அனைத்திற்கும் உரியதாக வகுக்கப்பட்டுள்ளது.

சங்க அக இலக்கியங்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய எட்டுத்தொகை அகநூற்கள் மட்டும் பன்றி, முள்ளம்பன்றி, காளைமாடு, குரங்கு, நாய், செந்நாய், புலி, கரடி, இறாமீன், முதலை, வெள்ளெலி, காட்டுப்பூனை, சங்கு, நரி, கழுதை ஆகிய உயிரினங்களுக்கு ஏற்றைப் பெயரை எடுத்தாண்டுள்ளன.

**புலியேற்றை**

புலிக்குரிய பெயராக ஏற்றை என்பதனை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றுள் "பதினொன்று (11)"[16] இடங்களில் காண முடிகின்றது. அவைகளினை,

"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை,"
"பூம்பொறி உழுவைப் பேழ்வாய் ஏற்றை,"
"செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை,"
"வெஞ்சின உழுவைப் போழ்வாய் ஏற்றை,"
"நாட்சுரம் உழந்தவாள் கேழ் ஏற்றை,"
"குறுங்கை இரும்புலிக் கொலைவல் ஏற்றை,"
"மிகுவலி இரும்புலிப் பகுவாய் ஏற்றை,"
"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை,"
"..................அட்ட பேழ்வாய் ஏற்றை,"
"பொறிகிளர் உழுவைப் போழ்வாய் ஏற்றை,"
"தொலைச்சிய இருங்கேழ் ஏற்றை"

என்ற பாடலடிகளின் வழி தெளிய முடிகின்றது.

**கரடியேற்றை**

*மரபியல் கூறும் ஏற்றை என்னும் கரடியின் ஆண்பாற்பெயர் நற்றிணை, அகநானூறு ஆகியவற்றில் "ஏழு"*[17] *இடங்களில் சுட்டப்பட்டுள்ளதனை,*

*"இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை,"*

*"கவிதலை எண்கின் பரூஉமயிர் ஏற்றை,"*

*"குரும்பி வல்சிப் பெருங்கை ஏற்றை,"*

*"குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை,"*

*"கோள்வல் ஏற்றை ஓசை ஓர்மார்*

*.......................................................*

*.......................................................*

*பெருங்கை எண்கின் சுரன் இறந்தோரே,"*

*"பெருங்கை எண்கின் போழ்வாய் ஏற்றை,"*

*"இருங்கிளை எண்கின் அழல்வாய் ஏற்றை"*

*என்கின்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன.*

**முள்ளம்பன்றியேற்றை**

*"உளமிசைத் திவிர்த்த முளவுமான் ஏற்றை"*[18]

*என்னும் அடியில் முள்ளம்பன்றிக்குரிய பெயராக ஏற்றையானது இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.*

**பன்றியேற்றை**

*பன்றிக்குரிய பெயரென்று அகநூற்களில் நற்றிணை மட்டும் ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளது. அதனை,*

*"பிணர்ச் சுவல் பன்றி தோல்முலைப் பிணவொடு*

*............................................................*

*............................................................*

*வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை"*[19]

எனும் பாடலடிகள் தெளியச் செய்கின்றன. இவற்றுடன் பன்றிக்குரிய பெயரென்று புறநானூறு (379:8); பெரும்பாணாற்றுப்படை (344) முறையே ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளமை சுட்டடத்தக்கதாகும்.

**முதலையேற்றை**

"கொடுந்தாள் முதலைக் கோள்வல் ஏற்றை"[20]

எனும் அடியில் முதலைக்குரிய ஆண்பாற்பெயராக 'ஏற்றை' என்பது காணக்கிடைக்கின்றது.

**குரங்கேற்றை**

'ஏற்றை' குரங்கிற்கும் உரிய பெயரென்று குறுந்தொகை சுட்டியுள்ளதனை,

"கடும்பல் ஊகக் கறைவிரல் ஏற்றை"[21]

எனும் பாடலடி வழி அறியலாகின்றது.

**செந்நாயேற்றை**

செந்நாய்க்குரிய பெயராக ஏற்றையினை ஐங்குறுநூறும் அகநானூறும் " ஐந்து"[22] இடங்களில் குறிப்பிட்டுள்ளதனை,

"ஈர்ம் பிணவு புணர்ந்த செந்நாய் ஏற்றை,"

"கவிழ் மயிர் எருத்தின் செந்நாய் ஏற்றை,"

"செந்நாய் ஏற்றை கேழல் தாக்க,"

"செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்ப,"

"ஓடு குறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை"

எனும் பாடலடிகள் வழி காணலாகின்றது.

**நாயேற்றை**

அகநூற்களுள் பட்டினப்பாலை மட்டும் நாய்க்குரிய பெயராக அடையாளப்படுத்தியுள்ளதனை,

*"கூர் உகிர் ஞமலிக் கொடுந்தாள் ஏற்றை"*[23]

*எனும் பாடலடி மெய்ப்பிக்கிறது.*

**மாடேற்றை**

*மாட்டுக்குரிய பெயரென்று கலித்தொகை மட்டும் "இரண்டு"*[24] *இடங்களில் குறித்துள்ளது. அதனை,*

*"............................ கண்ணஞ்சா ஏற்றை,"*

*"அவ் ஏற்றை"*

*என்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன.*

**வெள்ளெலியேற்றை**

*"புன்தாள் வெள்ளெலி மோவாய் ஏற்றை"*[25]

*எனும் அடியுள் அகநானூறு மட்டும் வெள்ளெலிக்கு உரிய பெயராக ஏற்றையினைக் குறித்துள்ளது சுட்டத்தக்கதாகின்றது.*

**சங்கேற்றை**

*சங்கிற்குரிய பெயராக ஏற்றை என்பதனை அகநானூறு ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளதனை,*

*"பிணர் மேட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை"*[26]

*என்ற பாடலடி தெளிவிக்கின்றது.*

**நரியேற்றை**

*"வரிமரல் இயவின் ஒருநரி ஏற்றை"*[27]

*என்ற அகநானூற்றுப் பாடலடி நரிக்குரிய பெயரென்று அடையாளப் படுத்தியிருக்கிறது.*

**கழுதையேற்றை**

*"நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றை"*[28]

என்ற அடியில் கழுதைக்குரிய பெயராக அகநானூறு சுட்டியுள்ளது குறிக்கத்த க்கதாகும்.

**வெருகேற்றை**

மரபியல் கூறும் ஏற்றையென்னும் வெருகின் (காட்டுப் பூனை) ஆண்பா ற்பெயராக அகநானூற்றுள் ஓரிடத்தில் குறித்துள்ளதை,

"குவிஅடி வெருகின் பைங்கண் ஏற்றை"[29]

என்ற பாடலடி அறியச் செய்கின்றது.

**இறாலேற்றை**

நற்றிணையில் மட்டும் இறால் மீனுக்குரியதாக ஏற்றைப் பெயர் இடம் பெற்றுள்ளதனை,

"முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை"[30]

என்ற பாடலடி தெரிவிக்கின்றது.

**ஏற்றை**

அகநானூறு உயர்திணைக்குரிய பெயராக 'ஏற்றை' என்பதனை அறியச் செய்யும் நிலையில் 'ஏற்றை' எனும் சேரரின் படைத்தலைவனைக் குறித்ததாக அடையாளப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது. அதனை,

"நன்னனின் ஏற்றை நறும்பூண் அத்தி"[31]

என்ற பாடலடி மெய்ப்பிக்கிறது.

இவற்றுடன் கவரிமானேற்றை என்று நெடுநல்வாடையும் (91), உடும்பே பற்றை என மலைபடுகடாமும் (508) ஏற்றைப் பெயரினைத் தாங்கியுள்ளது கு றிக்கத்தக்கதாகின்றது.

இவ்வாறாக அகநூற்களுள் ஏற்றைப்பெயர் புலிக்குரியதாக 'பதினொன் று (11)' இடங்களிலும், கரடிக்குரியதாக '7' இடங்களிலும், முள்ளம்பன்றி, ப

ன்றி, முதலை, குரங்கு, நாய், வெள்ளெலி, வெருகு, சங்கு, நரி, கழுதை, இறால் , உயர்திணை ஆகியவற்றின் முறையே ஓரிடத்திலும், செந்நாய்க்குரியதாக '5' இடங்களிலும், மாட்டுக்குரியதாக '2' இடங்களிலுமாக 'முப்பத்தேழு (37)' இடங்களில் இடம்பெற்றுள்ளது சுட்டத்தக்கதாகும். மேலும் புறநூற்களுள் புறநானூற்றில் (பன்றியேற்றை.379:8, நத்தையேறு.266:4), 'இரண்டு' இடங்களிலும், நெடுநல்வாடை (கவரிமானேற்றை.91), பெரும்பாணாற்றுப்படை (பன்றியேற்றை.344), மலைபடுகடாம் (உடும்பேற்றை.508) முறையே ஓரிடத்திலுமாக 'நாற்பத்திரண்டு (42)' இடங்களுள் ஏற்றைப் பெயர் பதிவாகியுள்ளது குறிப்பிடத்தக்கதாகின்றது.

**ஒருத்தல்**

மரபியலுள் 'ஒருத்தல்' எனும் பெயர் புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம் (முதலை), யானை, பன்றி, எருமை ஆகிய உயிரினங்களுக்குரியதாக வகுக்கப் பெற்றுள்ளது.

சங்க அக இலக்கியங்களுள் யானை, பன்றி, மான், ஆளி முதலான உயிரினங்களுக்கு ஒருத்தல் என்ற பெயர் எடுத்தாளப்பட்டுள்ளது.

**யானை ஒருத்தல்**

யானைக்குரிய பெயராக அக நூற்களான நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு ஆகியன "பதினேழு (17)"[32] இடங்களில் குறித்துள்ளமையைப் பின்வரும் பாடலடிகள் அறியச் செய்கின்றன,

"கொல் களிற்று ஒருத்தல் சுரன் இறந்தோரே,"

"இடுநீறு ஆடிய கடுநடை ஒருத்தல்,"

"உயர் மருப்பு ஒருத்தல் புகர்முகம் பாயும்,"

"பூம்பொறி ஒருத்தல் ஏந்துகை கடுப்ப,"

"ஓமைக் குத்திய உயர்கோட்டு ஒருத்தல்,"

"காழ்வரை நில்லாக் கடுங்களிற்று ஒருத்தல்,"

*"பால்மருள் மருப்பின் உரல்புரை பாவுஅடி*
*ஈர்நறுங் கமழ்கடாஅத்து இனம்பிரி ஒருத்தல்,"*
*"வாய்இழி கடாத்த வால்மருப்பு ஒருத்தல்,"*
*"காடுமீக் கூறும் கோடு ஏந்து ஒருத்தல்,"*
*"பொறிநுதல் பொலிந்த வயக்களிற்று ஒருத்தல்,"*
*"வெயில்தின வருந்திய நீடுமருப்பு ஒருத்தல்,"*
*"முதல்பாய்ந் திட்ட முழுவலி ஒருத்தல்,"*
*"உழுவையொடு உழந்த உயங்குநடை ஒருத்தல்,"*
*"பெருங்களிற்று ஒருத்தலின் பெயர்குவை,"*
*"உறுபுலி உழந்த வடுமருப்பு ஒருத்தல்,"*
*"எவ்வமொடு வந்த உயர்மருப்பு ஒருத்தல்,"*
*"கடும்பகட்டு ஒருத்தல் நடுங்கக் குத்தி."*

*இவற்றுடன் புறநானூறு (190:9); மலைபடுகடாம் (297) முறையே ஓரிடத்தில் 'ஒருத்தல்' பெயரினை யானைக்கு எடுத்தாண்டுள்ளது அறியலாகின்றது.*

**பன்றியொருத்தல்**

*நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகிய நூற்களில் பன்றிக்குரிய பெயரென்று "ஐந்து"[33] இடங்களுள் சுட்டியுரைக்கின்றன. அவைகளை,*
*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,"*
*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,"*
*"உவரி ஒருத்தல் உழாஅது மடிய,"*
*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,"*
*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்"*
*என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது.*

**உழை ஒருத்தல்**

*மானுக்குரிய பெயராக அகநானூறு மட்டும்,*

*“செந்நாய் வெரீஇய புகர்உழை ஒருத்தல்”[34]*

*என்று ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.*

**ஆளியொருத்தல்**

*“ஆளி நல்மான் அணங்குடை ஒருத்தல்”[35]*

*என்ற பாடலடி வழி மரபியல் வகுக்காத உயிரினமான யாளிக்குரிய பெயராக ஒருத்தலை அகநானூறு மட்டும் புதுமையாகக் குறித்துள்ளது சிறப்பிற்குரியதா கும்.*

**புலியொருத்தல்**

*புலிக்குரிய பெயராக ஒருத்தல் என்பதனை அகநூற்களில் குறிப்பிடாத நிலையில், புறநானூறு (52:2) மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது குறிக்கத்தக்க தாகிறது.*

**எருமையொருத்தல்**

*எருமைக்குரிய பெயராக ஒருத்தலை அகநூற்களுள் காணக்கிட்டாத நி லையில், மலைபடுகடாம் (472) மட்டும் ஓரிடத்தில் எடுத்துரைத்துள்ளது குறி க்கத்தக்கதாகும்.*

*இவ்வாறாகச் சங்க அக நூற்களில் ஒருத்தல் எனும் பெயர் யானைக்குரி யதாக ‘பதினேழு (17)’ இடங்களிலும், பன்றிக்குரியதாக ‘5’ இடங்களிலும், ம ான், யாளிக்கு முறையே ஓரிடத்திலுமாக ‘இருபத்தினான்கு (24)’ இடங்களுள் காணக் கிடைக்கின்றது.*

*இவற்றுடன் புறநூற்களில் புறநானூறு யானைக்கும் புலிக்கும் உரியதாக ஓரிடத்திலும், மலைபடுகடாம் யானை, எருமைக்கு முறையே ஓரிடத்தில் ஒரு த்தல் பெயர் இடம்பெற்றுள்ளது.*

*ஒருத்தல் பெயரினை யானைக்குரியதாக ‘பத்தொன்பது (19)’ இடங்களிலும், பன்றிக்குரியதாக ‘5’ இடங்களிலும், மான், யாளி, புலி, எருமை முறையே ஓரிடத்திலுமாக ‘இருபத்தெட்டு (28)’ இடங்களில் பதிவாகியுள்ளதனை அறியமுடிகின்றது.*

**களிறு**

*ஆண்பாற்பெயர்களுள் ‘களிறு’ யானைக்கும், பன்றிக்கும் உரியதாக மரபியல் குறிப்பிடுகிறது. இவற்றையே சங்க அக இலக்கியங்களுள் முல்லைப்பாட்டு தவிர்த்த ஏனைய நூற்களுள் யானைக்குரிய பெயராக இடம்பெற்றும், பன்றிக்குரிய பெயராக அகநானூறு மட்டும் ஓரிடத்தில் எடுத்தியம்பியுள்ளது.*

**யானைக்களிறு**

*சங்க அக நூற்களுள் யானைக்குரிய பெயராக ‘களிறு’ நற்றிணையில் ‘இருபத்தெட்டு (28)’ இடங்களிலும், குறுந்தொகையில் ‘பத்து (10)’ இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ‘3’ இடங்களிலும், கலித்தொகையில் ‘பதினைந்து (15)’ இடங்களிலும், அகநானூற்றில் ‘நாற்பத்தொன்று (41)’ இடங்களிலும், குறிஞ்சிப்பாட்டில் ‘2’ இடங்களிலும், பட்டினப்பாலையில் ‘2’ இடங்களிலுமாக “நூற்று ஒன்று (101)”[36] இடங்களில் பதிவாகியுள்ளதைப் பின்வரும் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன,*

*“ஞால்வாய்க் களிறு பாந்தள் பட்டென,”*
*“தாழ்நீர் நனந்தலைப் பெருங்களிறு அடூஉம்,”*
*“பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி,”*
*“இருஞ்சேறு ஆடிய நுதல கொல் களிறு,”*
*“களிறுநின்று இறந்த நீல்அல் ஈரத்து,”*
*“சுரும்பு இமிர் அடுக்கம் புலம்பக் களிறு,”*
*“கைஊன்றுபு இழிதரு களிறு எறிந்தன்றே,”*
*“துஞ்சு களிறு எடுப்பும் தம்பெருங்கல் நாட்டே,”*

“பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை,”

“பெருங்களிறு உழுவை தாக்கலின் இரும்பிடி,”

“மிளைவலி சிதையக் களிறு பல பரப்பி,”

“மஞ்சுதவழ் இறும்பில் களிறு வலம் படுத்த,”

“வறுந்தலைப் பெருங்களிறு போல,”

“வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்,”

“ஏந்து வெண்கோட்டு வயக்களிறு இழுக்கும்,”

“பெருங்களிறு பிளிறும் சோலை அவர்,”

“வயக்களிறு பொருத வாள்வரி உழுவை,”

“களிறு அகப்படுத்த பெருஞ்சின மாசுணம்,”

“ஒளிறு ஏந்துமருப்பின் களிறுமாறு பற்றிய,”

“களிறு பொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை,”

“பிச்சை சூழ் பெருங்களிறு போல எம்,”

“களிறு உதைத்து ஆடிய கவிழ்கண் இடுநீறு,”

“களிறுபெறு வல்சிப் பாணன் கையதை,”

“களிறு தொலைத்து உரறும் கடிஇடி மழைசெத்து,”

“ஒளிறுவேல் அழுவத்துக் களிறு படப்பொருத,”

“மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை,”

“புகர்முகம் சிதையத் தாக்கி களிறு அட்டு,”

“களிறு புறங்காப்ப கன்றொடு வதியும்,”

“துஞ்சு களிறு இவரும் குன்ற நாடன்,”

“ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம்பில்,”

“சிறுகண் பெருங்களிறு வயப்புலி தாக்கி,”

“பெருங்களிறு வாங்க முரிந்து நிலம்படாஅ,”

“பொரு களிறு மிதித்த நெரிதாள் வேங்கை,”

“உரவுக் களிறு போல்வந்து இரவுக்கதவு முயறல்,”

“மறந்தனர் கொள்ளோ தாமே களிறுதன்,”

“களிறு வழங்கு சிறுநெறி புதையத் தாஅம்,”

“நாகுபிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு,”

“களிறொடு பட்ட ஞான்றை,”

“களிறு கோட் பிழைத்த கதம்சிறந்து எழுபுலி,”

“களிறுபிடி தழீஇப் பிறபுலம் படராது,”

“இனக் களிறு வழங்கும் சோலை,”

“வேனில் உழந்தவறிது உயங்குஓய் களிறு,”

“பிடி ஊட்டி பின் உண்ணும் களிறு எனவும் உரைத்தனரே,”

“களிதிகழ் கடாஅத்த கடுங்களிறு அகத்தவா,”

“புகர்முகக் களிறொடு புலிபொருது உழக்கும் நின்,”

“களிறு இயங்கு ஆர்இடை ஈங்கு நீ வருவதை,”

“நீயே வளியின் இகல்மிகும் தேரும் களிறும்,”

“களிறு என ஆர்ப்பவர் ஏனல் காவலரே,”

“காழ்வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்,”

“பொருகளிறு அன்னதகை சாம்பி உள்உள்,”

“மண்டு அமர் ஆட்ட களிறு அன்னான்,”

“அரிமாவும் பரிமாவும் களிறும் கராமும்,”

“திரிதரும் கொல்களிறும் போன்ம்,”

“நிரை களிறு இடைபட நெறியாத்த இருக்கைபோல்,”

“எயல்இடு களிறே போல் இடுமணல் நெடுங்கோட்டை,”

“நிரைதிமில் களிறாக திரைஒலி பறையாக,”

“பெருங்களிறு உரிஞ்சிய மண்அரை யாஅத்து,”

“வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த,”

“நீர்இல் ஆர்ஆற்று நிவப்பன களிறு அட்டு,”

“களிறுடை அருஞ்சமம் ததைய நூறும்,”

“களிறுபட எருக்கிய கல்லென் ஞாட்பின்,”

“படி ஞிமிறு கடியும் களிறே,”

“களிறு கெழுதானைப் பொறையன் கொல்லி,”

“ஒளிறுவேல் அழுவம் களிறு படக்கடக்கும்,”

“களிறு கவர் கம்பலை போல,”

“மறம்புகல் மழகளிறு உறங்கும் நாடன்,”

“களிறு பெறு வல்சிப் பாணன் எறியும்,”

“ஓய்களிறு எடுத்த நோயுடை நெடுங்கை,”

“ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டுக் குழுமும்,”

“சேறு கொண்டு ஆடிய வேறுபடு வயக்களிறு,”

“களிறு தொடூஉக் கடக்கும் கான்யாற்று அத்தம்,”

“கடம்பும் களிறும் பாடி நுடங்குபு,”

“முளைமேய் பெருங்களிறு வழங்கும்,”

“இசைநல் ஈகைக் களிறு வீசு வண்மகிழ்,”

“பெருங்களிறு மிதித்த அடியகத்து இரும்புலி,”

“களிறுஅணி வெல்கொடி கடுப்ப காண்வர,”

“களிறு உயிர்த் தன்ன கண்அழி துவலை,”

“களிறு விளிப்படுத்த கம்பலை வெரீஇ,”

“ஈன்றணி இரும்பிடி தழீஇ களிறுதன்,”

“களிறுஅதர்ப் படுத்த கல்உயர் கவாஅன்,”

“திண்நிலை மருப்பின் வயக்களிறு உரிஞ்தொறும்,”

“கிளை பாராட்டும் கடுநடை வயக்களிறு,”

“இழைஅணி நெடுந்தேர் களிறொடு என்றும்,”

“களிறு சுவைத்திட்ட கோதுடைத் ததரல்,”

“களிறு அட்டுக் குழுமும் ஓசையும் களிபட்டு,”

“பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போல,”

“உரவுக்களிறு ஒதுங்கிய மருங்கில் பரூஉப்பரல்,”

“இருங்களிறு இயல்வரும் பெருங்காட்டு இயவின்,”

“செறிநடைப் பிடியொடு களிறு புணர்ந்தென்ன,”

"களிறு அணந்து எய்தாக் கல்முகை இதணத்து,"

"களிறு புறம் உரிஞ்சிய கருங்கால் இலவத்து,"

"கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்,"

"களிறுகண் கூடிய வாள்மயங்கு ஞாட்பின்,"

"கழைதின் யாக்கை விழைகளிறு தைவர,"

"கடும்பரிப் புரவியொடு களிறு பல வவ்வி,"

"எரிமருள் கவளம் மாந்தி களிறுதன்,"

"பெருங்களிறு தொலைச்சிய இருங்கேழ் ஏற்றை,"

"அருவிடர் அமைந்த களிறுதரு புணர்ச்சி,"

"புழற்கோட்டு ஆமான் புகல்வியும் களிறும்,"

"நீறு ஆடிய களிறு போல,"

"வெளில் இளக்கும் களிறு போல."

இவற்றுடன் புறநூற்களான பதிற்றுப்பத்துள் (11:6, 12:12, 15:4, 16:8, 20:15, 22:18, 32:3, 33:3, 41:7, 42:18, 43:25, 44:16, 45:4, 47:2, 49:4, 52:1, 53:21, 64:7, 70:1, 75:1, 76:1, 81:6, 83:3, 84:11, 84:18, 90:7, பதி.தி.3:2) 'இருபத்தேழு (27)' இடங்களிலும்; அகப்புற நூலான பரிபாடலுள் (10:110, 12:28, 18:27, 20:105, 22:2, 22:24) 'ஆறு' இடங்களிலும்; புறநானூற்றுள் (4:10, 7:1, 13:5, 15:9, 16:6, 16:19, 17:17, 22:8, 23:2, 26:3, 30:9, 31:8, 40:11, 46:5, 55:7, 69:9, 81:1, 94:2, 97:8, 98:3, 100:7, 101:6, 103:7, 104:3, 114:3, 125:9, 127:3, 131:4, 135:14, 140:8, 159:22, 205:14, 220:02, 227:4, 239:15, 240:1, 277:3, 301:6, 302:9, 306:1, 310:4, 312:6, 313:4, 325:1, 335:10, 336:4, 341:17, 342:13, 345:1, 368:1, 370:16, 387:22, 394:15) 'ஐம்பத்து மூன்று (53)' இடங்களிலும்; மதுரைக்காஞ்சியுள் (15, 102, 172, 179, 219, 247, 597, 643, 659, 676), 'பத்து (10)' இடங்களிலும்; நெடுநல்வாடையுள் (171) ஓரிடத்திலும்; ஆற்றுப்படையுள் பொருநராற்றுப்படை (49, 142) 'இரண்டு' இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படை (27, 372, 396, 499) 'நான்கு' இடங்களிலும், மலைபடுகடா

ம் (211, 260, 384) 'மூன்று' இடங்களிலுமாக 'இருநூற்றேழு (207)' இடங்களில் 'களிறு' யானைக்குரித்தாகி நிற்கின்றமையைக் காணமுடிகின்றது.

**பன்றிக்களிறு**

சங்க அக நூற்களுள் அகநானூறு மட்டும் 'களிறு' எனும் பெயர் பன்றிக் குரியதாகச் சுட்டியுள்ளது. இதனை,

"இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை"[37]

என்ற பாடலடி வழி தெளிய முடிகிறது. இத்துடன் பதிற்றுப்பத்தில் (26:2) ஓரிடத்திலும், பரிபாடல் (2:33, 13:36), புறநானூறு (41:9, 325:1) முறையே 'இரண்டு' இடங்களில் பன்றிக்குரிய பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது சுட்டத்தக் கதாகும்.

இவ்வாறாக 'களிறு' எனும் ஆண்பாற்பெயரானது யானைக்கு 'இருநூற்றேழு (207)' இடங்களிலும், பன்றிக்கு '6' இடங்களிலும் 'இருநூற்றி பதின்மூன்று (213)' இடங்களில் பதிவுசெய்யப் பட்டுள்ளது.

**சே**

மரபியலில் ஆண்பாற்பெயர்களுள் 'சே' என்பதும் ஒன்றாகத் தொகுத்த வற்றுள் மட்டும் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

சங்க அக இலக்கியங்களில் சே, சேயிதழ், சேயரி, சேயிலை, சேயிழை, சேயிறா, சேவடி போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன.

**சே (காளை)**

'சே' என்னும் பெயர் காளை மாட்டினைக் குறிப்பதாகக் கலித்தொகையும் அகநானூறும் "எட்டு"[38] இடங்களில் சுட்டியுள்ளன. அவைகளினை,

"வளையுபு மலிந்த கோடுஅணி சேயும்,"

"சேஎச் செவிமுதற் கொண்டுபெயர்த்து ஒற்றும்,"

"வேல்வல்லான் நிறனே போல் வெருவந்த சேயும்,"

"சேஎய் சினன் அஞ்சான் சார்பவள் என்றாங்கு,"

"வாலிது கிளர்ந்த வெண்கால் சேயும்,"

"கயிறு இடுகதச் சேப் போல மதம்மிக்கு,"

"சேக்கோள் அறையும் தண்ணும்மை,"

"சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணும்மைக்கு"

என்னும் பாடலடிகளின் வழி அறியச் செய்கிறது.

இவற்றுடன் புறநானூறு (171:8) காளைக்குரிய பெயராக அடையாளப் படுத்தியுள்ளது நோக்கத்தக்கது.

**சேயிதழ்**

'சே' எனும் பெயரானது இதழுக்குரியதாக அகநானூறு ஓரிடத்தில் பதிவு செய்துள்ளது. அது,

"........................................ நறவின்

சேயிதழ் அனைய ஆகி ........................"[39]

என்ற பாடலடி வழி புலனாகிறது.

இதனுடன் புறநானூறு (397:19), சிறுபாணாற்றுப்படை (75) முறையே ஓரிடத்தில் சேயிதழ் என்று சுட்டியுள்ளது கவனித்தற்குரியது.

**சேயரி**

'சேயரி' (சிவந்த வரிபரந்த குளிர்ந்த கண்) என்று நற்றிணை 'மூன்று' இடங்களிலும், குறுந்தொகை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்திலும், அகநானூறு 'இரண்டு' இடங்களிலுமாக "ஆறு"[40] இடங்களில் குறித்துள்ளது. அவற்றை,

"பகழி அன்ன சேயரி மழைக்கண்,"

"கனங்குழைக்கு அமர்த்த சேயரி மழைக்கண்,"

"சேயரி பரந்த மா இதழ் மழைக்கண்,"

"சிறைபனி உடைத்த சேயரி மழைக்கண்,"

"செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கண்,"

"எறிபடை கழீஇய சேயரி சில்நீர்"

என்ற பாடலடிகளின் வழி அறியலாகின்றது. மேலும், அகநானூறு சேயரி என் பதை நெல்லின் சிவந்த அரிகளைக் குறிப்பதனுக்கு எடுத்தாண்டுள்ளதை,

"செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்"[41]

எனும் அடியின் மூலம் தெளியலாகிறது. இவற்றுடன் மலைபடுகடாமும் (45) ஓரிடத்தில் சேயரி என்று சுட்டியுள்ளது குறிக்கத்தக்கது.

**சேயிலை (சிவந்த இலை)**

சேயிலை என்று குறுந்தொகையும் அகநானூறும் முறையே ஓரிடத்தில்எடு த்தாண்டு வேல்நுனியின்தன்மையைக் குறிப்பிட்டுள்ளது. அதனை,

"சேயிலை வெள்வேல் விடலையொடு,"[42]

"புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்"[43]

எனும் அடிகள் புலப்படுத்தி நிற்கின்றன.

**சேயிலை (சிவந்த அணிகலன்)**

சேயிழை என்பதனை நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை முறையே 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறுநூறு ஓரிடத்திலும், அகநானூறு 'மூன்று' இ டங்களிலுமாக "பத்து (10)"[44] இடங்களில் எடுத்தாண்டுள்ளதை,

"நாம் எனச் சொல்ல சேயிழை,"

"சென்மோ சேயிழை என்றனம் அதன் எதிர்,"

"சென்றனர் கொல்லோ சேயிழை நமரே,"

"வருமே சேயிழை அந்தில்,"

"சேயிழை மாதரை உள்ளி நோய்விட,"

"இனைய நீ செய்தது உதவாயாயின் சேயிழாய்,"

"சீர்ஆர் சேயிழை ஒலிப்ப ஓடும்,"

"சேயிழை தெளிர்ப்பக் கவைஇ நாளும்,"

"சேயிழை மகளிர் ஆயமும் அயரா,"

"இரும்பல் கூந்தல் சேயிழை மடந்தை"

எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவற்றுடன், பதிற்றுப்பத்து (43:2, 65:10, 88:36), புறநானூறு (3:6, 105:1, 198:3) முறையே 'மூன்று' இடங்களில் சேயிழை (சிவந்த அணிகலனை) குறித்துள்ளது சுட்டடத்தக்கதாகின்றது.

**சேயிறா**

இறால் மீனுக்கு 'சே' எனும் பெயர் உரியதென்பதனை நற்றிணை 'மூன்று' இடங்களிலும், ஐங்குறுநூறு, அகநானூறு முறையே 'இரண்டு' இடங்களிலுமாக "ஏழு"[45] இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவைகளாவன,

"சேயிறா எறிந்த சிறுவெண் காக்கை,"

"குளம்பினும் சேயிறா ஒடுங்கின,"

"பெருஞ்சேயிறவின் துய்த்தலை முடங்கல்,"

"இருங்கழிச் சேயிறா இனப்புள் ஆரும்,"

"தெண்கழிச் சேயிறாப் படூஉம்,"

"பெருங் கடற்பரப்பில் சேயிறா நடுங்க,"

"சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை"

என்ற பாடலடிகள் மூலம் அறிய முடிகின்றது.

**சேவடி (சிவந்த பாதம்)**

சேவடி என்று நற்றிணையில் 'மூன்று' இடங்களிலும், குறுந்தொகை, கலித்தொகை முறையே ஓரிடத்திலும், அகநானூற்றில் 'ஆறு' இடங்களிலும், பட்டினப் பாலையில் ஓரிடத்திலுமாக "பன்னிரண்டு (12)"[46] இடங்களில் குறிக்கப்பட்டுள்ளன. இதனை,

"மாநிலம் சேவடி ஆக தூநீர்,"

"நின்ஒளி எறியச் சேவடி ஒதுங்காய்,"

"சென்னிச் சேவடி சேர்த்தின்,"

"தாமரை புரையும் காமர் சேவடி,"

"மாறுஇனி நின் ஆங்கே நின் சேவடி சிவப்ப,"

"நலம்மிகு சேவடி நிலம் வடுக்கொளாஅ,"

"மெல்லென் சேவடி மெலிய ஏக,"

"பொலந்தொடி தெளிர்ப்ப வீசி சேவடி,"

"பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி,"

"திருந்துகழல் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு,"

"ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரள,"

"சேவடி செறி குரங்கின்"

எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவற்றுடன், பதிற்றுப்பத்து (31:9) ஓரிடத்திலும், புறநானூறு (125:12, 387:18), பரிபாடல் (3:12, 3:19) முறையே 'இரண்டு' இடங்களிலும், திருமுருகாற்றுப்படை (62) ஓரிடத்திலும் 'சேவடி' என்பதனைக் குறித்து நிற்கின்றன. இவ்வாறாகச் 'சேவடி' 'பதினெட்டு (18)' இடங்களுள் இடம்பெற்றுள்ளது சுட்டத்தக்கதாகும்.

சங்க அக நூற்களுள் 'சே' என்பது காளைக்குரியதாக 'எட்டு' இடங்களிலும், சிவந்த இதழுக்கு ஓரிடத்திலும், சிவந்த கண் வரியைக் குறித்து 'ஆறு' இடங்களிலும், நெல்லின் சிவந்த அரிக்கு ஓரிடத்திலும், வேல்நுனிக்குரியதாக ( சிவந்த இலை) 'இரண்டு' இடங்களிலும், அணிகலனுக்குரியதாகப் 'பத்து (10)' இடங்களிலும், இறாமீனுக்குரியதாக 'ஏழு' இடங்களிலும், அடிக்குரியதாக (பாதம் ) 'பன்னிரண்டு (12)' இடங்களிலுமாக 'நாற்பத்தேழு (47)' இடங்களில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

'சே' என்பது காளையைக் குறித்து 'ஒன்பது' இடங்களிலும், இதழைக் குறித்து 'மூன்று' இடங்களிலும், கண்வரி குறித்து 'ஏழு' இடங்களிலும், நெல் அரி குறித்து ஓரிடத்திலும், வேல் நுனி குறித்து 'இரண்டு' இடங்களிலும், அணிகலன் குறித்து 'பதினாறு (16)' இடங்களிலும், இறால்மீன் குறித்து 'ஏழு' இடங்க

ளிலும், பாதம் குறித்துப் 'பதினெட்டு (18)' இடங்களிலுமாக 'அறுபத்து மூன்று (63)' இடங்களுள் பதிவாகியள்ளதை அறியமுடிகிறது.

**சேவல்**

மயிலல்லாத சிறகுடையவை அனைத்தும் 'சேவல்' எனும் ஆண்பாற்பெயரினைப் பெறுவனவாகும் என்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களுள் கோழி, காட்டுக்கோழி, சம்பங்கோழி, புறவு (புறா), அன்னம், பருந்து, கழுகு, குயில், குருவி, ஊர்க்குருவி, ஆந்தை, நீர்க்காக்கை, கூகை, குறும்பூழ், அன்றில், கொக்கு ஆகிய பறவையினங்களுக்குச் 'சேவல்' எனும் பெயர் எடுத்தாளப்பட்டிருப்பதனைப் பின்வரும் நிலைகளில் அறியமுடிகின்றது.

**கோழிச் சேவல்**

பறவையினங்களுள் ஒன்றான கோழி 'சேவல்' எனும் ஆண்பாற்பெயரைத் தாங்கி நிற்பதை நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய அக நூற்கள் வழி அறியமுடிகின்றது. நற்றிணை ஓரிடத்திலும், குறுந்தொகை 'இரண்டு' இடங்களிலும், அகநானூறு 'மூன்று' இடங்களிலுமாக "ஆறு"[47] இடங்களில் கோழிச் சேவல் இடம்பெற்றுள்ளதை,

"................................... சேவலொடு
சிலம்பின் போகிய சிதர்கால் வாரணம்,"
"சேவல் அம் கொடியோன் காப்ப,"
"குவிஇணர்த் தோன்றி ஒண்பூ அன்ன
தொகுசெந் நெற்றிக் கணம்கொள் சேவல்,"
"குடுமி நெற்றி நெடுமரச் சேவல்,"
"மனை உறை கோழி மறனுடைச் சேவல்,"
"நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்"

எனும் பாடலடிகள் தெளியச் செய்கின்றன. இவற்றுடன் புறநானூறு (326:6, 383:1) 'இரண்டு' இடங்களிலும், திருமுருகாற்றுப்படை (210), மலைபடுகடாம்

(570) முறையே ஓரிடத்திலுமாக 'ஒன்பது' இடங்களில் கோழிச் சேவல் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**காட்டுக்கோழிச் சேவல்**

காட்டுக் கோழிக்குரிய பெயராக சேவல் இடம்பெற்றுள்ளதனை அகநூற்களுள் குறுந்தொகை மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது. இதனை,

"கானங்கோழிக் கவர் குரல் சேவல்"[48]

என்ற பாடலடி புலப்படுத்துகிறது. இத்துடன் புறநானூறு (28:8) ஓரிடத்தில் காட்டுக்கோழிச் சேவலைக் குறித்துள்ளது சுட்டத்தக்கதாகின்றது.

**சம்பங்கோழிச் சேவல்**

சங்க அக நூற்களுள் ஒன்றான ஐங்குறுநூறு மட்டும் ஓரிடத்தில் சம்பங்கோழிச் சேவலைக் குறிப்பிட்டுள்ளதனை,

"நீர் உறை கோழி நீலச் சேவல்"[49]

என்ற பாடலடி மெய்ப்பிக்கிறது. இதனுடன் மதுரைக்காஞ்சி (254) ஓரிடத்தில் இத்திறத்தைப் புலப்படுத்தி நிற்கிறது.

**சேவற் புறவு**

'சேவல்' பெயர் புறவிற்குரியதாக நற்றிணை 'நான்கு' இடங்களிலும் குறுந்தொகை ஓரிடத்திலும், அகநானூறு 'மூன்று' இடங்களிலுமாக "எட்டு"[50] இடங்களுள் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றை,

"வண்ணப் புறவின் செங்காற் சேவல்,"

"மனைஉறை புறவின் செங்காற் பேடைக்
காமர் துணையொடு சேவல் சேர,"

"கானப் புறவின் சேவல் வாய்நூல்,"

"பைம்புறப் புறவின் செங்காற் சேவல்,"

"இரைவேட்டு எழுந்த சேவல் உள்ளி,"

“குறுநடைப் புறவின் செங்காற் சேவல்,”

“மனைஉறை புறவின் செங்காற் சேவல்,”

“பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்”

எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன.

இவற்றுடன் பெரும்பாணாற்றுப்படை (439), நெடுநல்வாடை (45) முறையே ஓரிடத்தில் சேவற் புறவினை எடுத்துரைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**அன்னச் சேவல்**

அக நூற்களுள் கலித்தொகை மட்டும் அன்னச் சேவல் என்பதனை “இரண்டு”[51] இடங்களில் எடுத்தாண்டுள்ளது. அதனை,

“மணிநிற மலர்ப்பொய்கை மகிழந்துஆடும் அன்னம்தன்

அணி மிகு சேவலை அகல்அடை மறைத்தென,”

“அன்ன வான் சேவல் புணர்ச்சிபோல் ஒண்ணுதல்”

என்ற அடிகளில் காணலாம். இவற்றுடன் பரிபாடல் (3:25-26) ஓரிடத்திலும், புறநானூறு (67:1,1 ; 128:4) ‘மூன்று’ இடங்களிலும், மதுரைக்காஞ்சி (386) ஓரிடத்திலும் அன்னச் சேவலைக் குறித்துள்ளதை அறியமுடிகிறது.

**பருந்துச் சேவல்**

பருந்துச் சேவல் என்று நற்றிணை ஓரிடத்திலும், அகநானூறு ‘எட்டு’ இடங்களிலுமாக “ஒன்பது”[52] இடங்களில் பதிவு செய்திருக்கின்றன. அவற்றைப் பின்வரும் பாடலடிகளில் காணமுடிகிறது,

“எருவைச் சேவல் கிளைவயிற் பெயரும்,”

“வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்,”

“எருவைச் சேவல் கரிபு சிறை தீய,”

“எருவைச் சேவல் ஈண்டுகிளை பயிரும்,”

“கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்,”

*“எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்,”*

*“வளைவாய்ப் பருந்தின் வள்உகிர்ச் சேவல்,”*

*“அத்த எருவைச் சேவல் சேர்ந்த,”*

*“எருவைச் சேவல் ஈண்டுக் கிளைத் தொழுதி”*

*இவற்றுடன் பதிற்றுப்பத்து (35:5, 36:9) ‘இரண்டு’ இடங்களிலும், மலைபடுகடாம் (147) ஓரிடத்திலும் எருவைச் சேவலைக் குறிப்பிட்டுள்ளது புலனாகிறது.*

**கழுகுச் சேவல்**

*கழுகுக்குரிய பெயரென்று சேவலை நற்றிணை ஓரிடத்தில் குறிப்பிடுகின்றது. அதை,*

*“அழல் போல் செவிய சேவல் ஆட்டி”*[53]

*என்ற அடியின் வழி தெளியமுடிகின்றது. இதனுடன் புறநானூறு (238:2) ஓரிடத்தில் கழுகுச் சேவலென்று சுட்டியுள்ளது. மேலும், பரிபாடலுள் (1:11, 3:18, 3:60, 4:36, 4:37, 13:41) ‘ஆறு’ இடங்களில் குறித்துள்ளது நோக்குதற்குரியதாகும்.*

**குயிற் சேவல்**

*குயில் ‘சேவல்’ பெயர் ஏற்றுள்ளதனை நற்றிணை மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது. அதனை,*

*“சேவலொடு கெழீஇய செங்கண் இருங்குயில்”*[54]

*என்ற பாடலடி புலப்படுத்துகின்றது.*

**குருவிச் சேவல்**

*“உள் இறைக் குரீஇக் கார் அணற் சேவல்”*[55]

*என்ற அடியில் குருவிச் சேவல் என்று நற்றிணை குறிப்பிடுவதை அறியமுடிகின்றது.*

**ஊரக்குருவிச் சேவல்**

*ஊர்க்குருவிக்குரிய பெயராக 'சேவல்' இடம்பெற்றுள்ளதை,*

*"உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்"[56]*

*என்ற பாடலடி வழி காணமுடிகின்றது. இதனுடன் புறநானூறும் (318:4) ஊர்க்குருவிச் சேவலினைச் சுட்டியுள்ளது.*

**ஆந்தைச் சேவல்**

*ஆந்தைக்குரிய பெயரென்று நற்றிணை, அகநானூறு முறையே ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளது. அதனை,*

*"................................. சேவலும்*

*நகைவாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்,"[57]*

*"உருத்து எழுகுரல குடிஞைச் சேவல்"[58]*

*என்ற அடிகளின் வழி தெளிய முடிகிறது. இவற்றுள் அகநானூறு பேராந்தைக் குரியதாகச் சுட்டியுள்ளது குறிக்கத்தக்கதாகும்.*

**கூகைச் சேவல்**

*கூகைச் சேவலென்று நற்றிணையும் அகநானூறும் "இரண்டு"[59] இடங்களில் குறிப்பிடுகின்றமையை,*

*"கூகைச் சேவல் குராலோடு ஏறி,"*

*"இல்எலி வல்சி வல்வாய்க் கூகை*

*..............................................*

*வளைக்கண் சேவல் வாளாது மடியின்"*

*எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன.*

**நீர்க்காக்கைச் சேவல்**

*"கடல்அம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்"[60]*

*எனும் அடியில் நீர்க்காக்கைக்குரிய ஆண்பாற்பெயராகச் சேவல் இடம்பெற்றுள்ளதனைக் காணமுடிகிறது.*

**குறும்பூழ்ச் சேவல்**

குறும்பூழ்ச் சேவல் என்று அகநூற்களுள் அகநானூறு மட்டும் "மூன்று"[61] இடங்களில் எடுத்துரைத்துள்ளது. அவற்றை,

"கருந்தாள் மிடற்ற செம்பூழ்ச் சேவல்,"

"காமர் சேவல் ஏமம் சேப்ப,"

"வரிப்புற இதலின் மணிக்கண் பேடை

..................................................

செங்கால் சேவல் பயிரும் ஆங்கண்"

என்கின்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இவற்றுடன் புறநானூறு (321:1) குறு ம்பூழ்ப் பறவைக்குரிய பெயராக 'சேவல்' எடுத்தாண்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.

**அன்றில் சேவல்**

'சேவல்' அன்றிலுக்குரிய பெயரென்று அகநானூறு ஓரிடத்தில்,

"சேவலொடு புணராச் சிறுகரும் பேடை"[62]

என்ற பாடலடியில் 'அன்றில்சேவல்' என்கிறது.

**கொக்குச் சேவல்**

"குடுமிக் கொக்கின் பைங்காற்பேடை

..................................................

..................................................

நுண் ஞாண் அவ்வலைச் சேவல்பட்டென,"[63]

"கூரல் கொக்கின் குறும்பறைச் சேவல்"[64]

என்ற பாடலடிகளில் சேவற்கொக்கு என்று அகநானூறு குறிப்பிட்டுள்ளதனை அறியமுடிகிறது. இவற்றுடன்,

"புன்புறப் பேடை சேவல் இன்புற"[65]

என்று ஐங்குறுநூற்றுள் பொதுப் பெயராகச் சேவல் குறிப்பிடப் பட்டுள்ளது சு ட்டத்தக்கதாகின்றது.

**யானையங்குருகுச் சேவல்**

*யானையங்குருகுக்குரிய பெயரென்று 'சேவல்' சங்க அக நூற்களுள் இடம்பெறாத நிலையில் மதுரைக்காஞ்சி (674) மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது புலனாகின்றது.*

**சேவற் வண்டு**

*சங்க அகநூற்களில் வண்டுக்குரிய பெயரென்று குறிக்கப்பெறவில்லை. ஆயினும் சிறுபாணாற்றுப்படையில் (184) மட்டும் குறித்துள்ளது நோக்குதற்குரியது.*

*இவ்வாறாகச் சங்க அக நூற்களில் 'சேவல்' கோழிக்குரிய பெயராக 'ஆறு' இடங்களிலும், காட்டுக்கோழி, சம்பங்கோழி முறையே ஓரிடத்திலும், புறவிற்கு 'எட்டு' இடங்களிலும், அன்னத்திற்கு 'இரண்டு' இடங்களிலும், பருந்திற்கு 'ஒன்பது' இடங்களிலும், கழுகு, குயில், குருவி, ஊர்க்குருவி முறையே ஓரிடத்திலும், ஆந்தைக்கு 'இரண்டு' இடங்களிலும், நீர்க்காக்கைக்கு ஓரிடத்திலும், கூகைக்கு 'இரண்டு' இடங்களிலும், குறும்பூழ்க்கு 'மூன்று' இடங்களிலும், அன்றிலுக்கு ஓரிடத்திலும், கொக்கிற்கு 'இரண்டு' இடங்களிலும், பொதுப்பெயராக ஓரிடத்திலுமாக 'நாற்பத்து மூன்று (43)' இடங்களில் பதிவாகியுள்ளது குறிப்பிடத் தக்கதாகின்றது. இவற்றுடன் புறநூற்களில் 'பதினெட்டு (18)' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் '8' இடங்களிலுமாக 'அறுபத்தொன்பது (69)' இடங்களுள் சேவல் பெயர் காணக்கிடைக்கின்றது.*

**இரலை**

*'இரலை' எனும் ஆண்பாற்பெயர் புல்வாய் எனப்படும் மானிற்கு உரியதாக மரபியல் குறிப்பிடுகின்றது.*

சங்க அகநூற்களில் ஐங்குறுநூறு, குறிஞ்சிப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்கள் அனைத்தும் மானுக்குரிய பெயராகப் பதிவுசெய்துள்ளதினைப் பின்வரும் நிலையில் காணக் கிடைக்கின்றது.

இரலைப் பெயரினை நற்றிணை '4' இடங்களிலும், குறுந்தொகை '6' இடங்களிலும், கலித்தொகை ஓரிடத்திலும், அகநானூறு 'பதின்மூன்று (13)' இடங்களிலும், முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலுமாக " இருபத்தாறு (26)"[66] இடங்களுள் எடுத்தாளப்பட்டுள்ளதனை,

"மா எருத்து இரலை மடப்பிணை தழுவ,"

"அரலை அம் காட்டு இரலையொடு வதியும்,"

"தேடூஉ நின்ற இரலை,"

"மடப்பிணை தழீஇய மாஎருத்து இரலை,"

"வன்பரள் தெள்அறல் பருகிய இரலை,"

"இரலை மானையும் காண்பர்கொல் நமரே,"

"இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை,"

"மரற்புகா அருந்திய மாஎருத்து இரலை,"

"இரலை நன்மான் நெறிமுதல் உகளும்,"

"திரிமருப்பு இரலை அண்ணல்,"

"எருத்து வலிய எறுழ்நோக்கு இரலை,"

"பரல் அவல் அடைய இரலை தெறிப்ப,"

"திருமருப்பு இரலை புல்அருந்து உகள,"

"அண்ணல் இரலை அம்பிணை தழீஇ,"

"இருதிரி மருப்பின் அண்ணல் இரலை,"

"கருங்கோட்டு இரலைக் காமர் மடப்பிணை,"

"இரலை சேக்கும் பரல் உயர் பதுக்கை,"

"திரிமருப்பு இரலைய காடு இறந்தோரே,"

"வெண் புறக்கு உடைய திரிமருப்பு இரலை,"

"திரிமருப்பு இரலை தெள்அறல் பருகி,"

"இரலை நன்மானினம் பரந்தவை போல்,"

"வலம்திரி மருப்பின் அண்ணல் இரலை,"

"திரிமருப்பு இரலை பைம்பயிர் உகள,"

"புன்கண் கொண்ட திரிமருப்பு இரலை,"

"திரிமருப்பு இரலையொடு மடமான் உகள,"

"அறுகோட்டு இரலையொடு மான்பிணை உகளவும்"

என்கின்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

இவற்றுடன் பதிற்றுப்பத்து (74:10), புறநானூறு (374:2) முறையே ஓரி டத்தில் இரலைப் பெயரைக் குறித்துள்ளன.

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களில் 'இருபத்தாறு (26)' இடங்களி லும் புற இலக்கியங்களில் 'இரண்டு' இடங்களிலுமாக 'இருபத்தெட்டு (28)' இடங்களுள் இரலைப்பெயர் பதியப்பட்டுள்ளன.

**கலை**

'கலை' எனும் ஆண்பாற்பெயர் 'புல்வாய்,' 'உழை' என்கின்ற மானினங்க ளுக்கும், 'முசு' என்ற குரங்கினத்திற்கும் உரியதாகச் சுட்டியுள்ளது மரபியல்.

சங்க அக இலக்கியங்களிலும் 'கலை' என்ற பெயர் மானுக்கும், குரங்கிற் கும் ஆகி நிற்கின்றது.

**ஆண் மான்**

ஆண் மானைக் குறிக்கும் முகமாக 'கலை' எனும் பெயர் நற்றிணையில் ' மூன்று' இடங்களிலும், குறுந்தொகையில் 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறு நூற்றில் ஓரிடத்திலும், கலித்தொகையில் 'இரண்டு' இடங்களிலும், அகநானூ

*ற்றில் 'பன்னிரண்டு (12)' இடங்களிலுமாக "இருபது (20)"[67] இடங்களில் இட ம்பெற்றுள்ளது. அவற்றை,*

*"கலை ஒழி பிணையின் கலங்கி மாறி,"*

*"பல்மலர்க் கான்யாற்று உம்பர் கருங்கலை,"*

*"அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை,"*

*"கவைத்தலை முதுகலை காலின் ஒற்றிப்,"*

*"புன்கண் மடமான் நேர்பட தன்னையர்*
*சிலைமாண் கடுவிசைக் கலை நிறத்து அழுத்திக்,"*

*"புலி கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை*
*மான் பிணை அணை தர..............,"*

*"தன் நிழலைக் கொடுத்து அளிக்கும் கலை,"*

*"பல்கலை சில்பூங் கலிங்கத்தள் ஈங்கு இதுஓர்,"*

*"அமைக்கண் விடுநொடி கணக்கலை அகற்றும்,"*

*"கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு,"*

*"கள்ளி அம்காட்ட புள்ளிஅம் பொறிக்கலை,"*

*"கணக்கலை இகுக்கும் கறிஇவர் சிலம்பின்,"*

*"கலைபிணை விளிக்கும் கானத்து ஆங்கண்,"*

*"கலைமான் தலையின் முதல்முதற் கவர்த்த,"*

*"தெள் அறல் பருகிய திரிமருப்பு எழிற்கலை,"*

*"கெடுமான் இனநிரை தழிஇய கலை,"*

*"தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை,"*

*"காடுதேர் மடப்பிணை அலற கலை,"*

*"அறு கோட்டு எழிற்கலை அறுகயம் நோக்கி,"*

*"வறல்மரத்து அன்ன கவைமருப்பு எழிற்கலை"*

*என்னும் பாடலடிகள் வழி அறியமுடிகிறது. மேலும், புறநானூற்றில் (23:18, 1 52:3, 161:11, 166:11, 320:5, 320:7, 374:7) 'ஏழு' இடங்களிலும், மலைபடுக*

டாமில் (405) ஓரிடத்திலுமாக ‘இருபத்தெட்டு (28)’ இடங்களில் மான்கலை (ஆண்மான்) பொதிந்திருப்பதை அறியமுடிகிறது.

**குரங்குக் கலை**

அகநூற்களில் நற்றிணை ‘2’ இடங்களிலும், குறுந்தொகை ‘6’ இடங்களிலும், அகநானூறு ‘4’ இடங்களிலுமாக “பன்னிரண்டு (12)”[68] இடங்களில் குரங்குகிற்குரிய பெயராகக் கலை குறிப்பிடப்பட்டுள்ளதை,

“இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்,”

“கலையொடு திளைக்கும் வரையக நாடன்,”

“கருங்கட் தாக்கலை பெரும்பிறிது உற்றென,”

“கலை தொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி,”

“மைப்பட்டன்ன மாமுக முசுக்கலை,”

“பலவின் இருஞ்சினைக் கலைபாய்ந்து உகளினும்,”

“கலை கை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்,”

“பலவில் சேர்ந்த பழம்ஆர் இனக்கலை,”

“ஆய்சுளைப் பலவின் மேய்கலை உதிர்த்த,”

“கலை பாய்ந்து உகளும் கல்சேர் வேங்கை,”

“அதிர்குரல் முதுகலை கறிமுறி முனைஇ,”

“மேக்குஎழு பெருஞ்சினை ஏறி கணக்கலை”

என்கின்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவைகளுடன் புறநானூறு (116: 11, 116:12, 236:1) ‘மூன்று’ இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி முறையே ஓரிடத்திலும், மலைபடுகடாமில் ‘இரண்டு’ இடங்களிலுமாக ‘பத்தொன்பது (19)’ இடங்களுள் ஆண்குரங்கு என்று குறிக்க ‘கலை’ எடுத்தாளப் பட்டிருப்பது சுட்டத்தக்கது.

இவ்வாறு மானுக்குரிய பெயராக ‘இருபத்தெட்டு (28)’ இடங்களிலும், குரங்கிற்குரிய பெயராக ‘பத்தொனபது (19)’ இடங்களிலுமாக ‘நாற்பத்தேழு ( 47)’ இடங்களுள் ‘கலை’ என்ற ஆண்பாற்பெயர் பதிவாகியுள்ளது.

**மோத்தை**

‘மோத்தை’ எனும் ஆண்பாற்பெயர் ஆட்டிற்குரிய பெயராக மரபியல் குறித்துள்ளது. சங்க அக இலக்கியங்களுள் இம்மோத்தை எனும் பெயர் எங்கும் சுட்டப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தகர் (ஆட்டுக்கிடாய்)**

ஆட்டிற்குரிய பெயராக, ‘தகர்’ குறிக்கத்தக்கது என்று மரபியல் குறிப்பிடுகின்றது. சங்க அக இலக்கியங்களுள் ஐங்குறுநூற்றில் ஓரிடத்திலும், அகநானூற்றில்‘இரண்டு’ இடங்களிலும், பட்டினப்பாலையில் ‘இரண்டு’ இடங்களிலுமாக “ஐந்து”[69] இடங்களில் ஆட்டிற்குரிய பெயராக அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. அவற்றை,

“வார் கோட்டு வயத்தகர் வாராது மாறினும்,”

“தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு சுரிந்த,”

“வேறு வேறு இனத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற்று இளந்தகர்ப் பாடுவிறந்து அயல,”

“மேழகத் தகரொடு சிவல் விளையாட,”

“ஏழகத் தகரோடு உகளும் முன்றில்”

எனும் அடிகளில் காணக்கிடைக்கின்றது. இவற்றுள் அகநானூறு வருடை (மலையாடு) எனும் விலங்கிற்குரியதாகச் சுட்டியிருப்பது குறிக்கத்தக்கதாகின்றது.

இவற்றுடன் ஆற்றுப்படை நூற்களிலும் ஆட்டிற்குரிய பெயராக பெரும்பாணாற்றுப்படை (326) ஓரிடத்திலும், மலைபடுகடாம் (414, 503) ‘இரண்டு’ இடங்களிலும் எடுத்துரைத்துள்ளன. மேலும், பெரும்பாணாற்றுப்படை (87) பு

துமையாக 'மேடு' என்பதைக் குறித்ததாகத் தகரை அடையாளப்படுத்தியுள்ளது சுட்டத்தக்கதாகும்.

இவ்வாறு 'தகர்' எனும் பெயர் ஆட்டிற்கு 'எட்டு' இடங்களிலும், முகட்டிற்கு ஓரிடத்திலுமாக 'ஒன்பது' இடங்களில் பதிவுசெய்யப் பட்டுள்ளது குறிக்கத்தக்கது.

**உதள் (ஆட்டுக்கிடாய்)**

மரபியல், 'உதள்' என்ற பெயரையும் ஆட்டுக்குரியதாகக் குறிப்பிட்டுள்ளது. இப்பெயரானது சங்க அக இலக்கியங்களுள் பதிவு செய்யப்படவில்லை என்பது சுட்டத்தக்கதாகும். ஆனால் ஆற்றுப்படை நூற்களில் பெரும்பாணாற்றுப்படை (151) மட்டும் ஓரிடத்தில் எடுத்தியம்பியிருப்பது அறியத்தக்கதாகின்றது.

**அப்பர்**

'அப்பர்' என்னும் பெயரும் ஆட்டுக்குரியதாக மரபியல் விளம்பியுள்ளது. இப்பெயர் சங்க அக இலக்கியங்களுள் எடுத்தாளப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**போத்து**

மரபியல் பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய் ஆகிய விலங்கினங்களுக்கும்; சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை ஆகிய நீர்வாழ்வனவற்றிற்கும்; மயில், எழால் (வல்லூறு) முதலான பறவையினங்களுக்கும் 'போத்து' எனும் ஆண்பாற்பெயர் உரியதாக அடையாளப்படுத்தியுள்ளது.

சங்க அக இலக்கியங்களுள் 'போத்து' என்ற பெயர் புலி, எருமை, முதலை, வரால், வாளை, நீர்நாய், ஓந்தி ஆகியவற்றிற்கு எடுத்தாளப் பட்டுள்ளதைப் பின்வரும் நிலைகளில் அறியக்கிடைக்கின்றன.

**புலிப் போத்து**

*சங்க அக நூற்களில் அகநானூறு மட்டும் புலிக்குரிய பெயராகப் போத்தினை "இரண்டு"[70] இடங்களில் குறித்துள்ளது. அவை,*

*"பனை மருள் எருத்தின் பல்வரி இரும்போத்து,"*

*"குயவரி இரும்போத்துப் பொருத புண் கூர்ந்து"*

*என்ற பாடலடிகளில் புலப்படுகின்றது. இவற்றுடன் புறநானூறு (157:12), பெரும்பாணாற்றுப்படை (138) முறையே ஓரிடத்தில் புலிக்குரிய பெயரென்று சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.*

**எருமைப் போத்து**

*எருமைக்குரியதாக 'போத்து' எனும் பெயரினை நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு முறையே ஓரிடத்திலுமாக "மூன்று"[71] இடங்களில் எடுத்துரைத்துள்ளது. இதனை,*

*"தடமருப்பு எருமைப் பிணர் சுவல்இரும் போத்து,"*

*"நெறிமருப்பு எருமை நீல இரும் போத்து,"*

*"ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்து"*

*என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது.*

**முதலைப் போத்து**

*நீர்வாழ் சாதியுள் ஒன்றான முதலைக்குரிய பெயரென்று ஐங்குறுநூற்றில் மட்டும் ஓரிடத்தில் பதிவு செய்துள்ளதை,*

*"முதலைப் போத்து முழுமீன் ஆரும்"[72]*

*என்ற பாடலடி மூலம் அறியலாகின்றது.*

**வரால் போத்து**

*"பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்து"[73]*

*எனும் பாடலடியில் நீர்வாழ் உயிரினமாகிய வரால்மீனுக்குரிய பெயராக அகநானூறு மட்டும் ஓரிடத்தில் புலப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.*

**வாளைப் போத்து**

"வாளை வெண்போத்து உணீஇய"[74]

என்ற பாடலடியில் நீரின்கண் வாழும் வாளைமீனுக்குரிய பெயரென்று 'போத்து' சுட்டப்பட்டிருப்பது அகநானூற்றில் காணக் கிடைக்கின்றது.

**நீர்நாய் போத்து**

மரபியலின் வரையறைக்கு அப்பாற்பட்டு அகநானூறு நீரில் வாழ்கின்றநாய்க்குரிய (நீர்நாய்) பெயரென்று அடையாளப்படுத்தியுள்ளது. அதனை,

"பொய்கை நீர்நாய்ப் புலவுநாறு இரும்போத்து"[75]

என்ற பாடலடி மூலம் புலனாகின்றது.

**ஓந்திப் போத்து**

மரபியலுள் வகுத்துரைக்கப் பெறாத உயிரினமான 'ஓந்தி' போத்து என்கின்ற பெயரினைப் பெறுவதாக நற்றிணையும் குறுந்தொகையும் அடையாளப் படுத்தி நிற்கின்றன. இதனை,

"வேனில் ஓதி நிறம்பெயர் முதுபோத்து,"[76]

"வேதின வெரிநின் ஓதி முதுபோத்து"[77]

என்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன.

இவற்றுடன் மரபியலும் சங்க அக நூற்களும் ஆட்டிற்குரிய பெயராகக் குறிப்பிடாத நிலையில் புறநானூறு (364:4) மட்டும் புதுமைப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறாகச் சங்க அக நூற்களுள் போத்துப்பெயர், புலிக்குரியதாக 'இரண்டு' இடங்களிலும், எருமைக்குரியதாக 'மூன்று' இடங்களிலும், முதலை, வரால், வாளை, நீர்நாய் முறையே ஓரிடத்திலும், ஓந்திக்குரியதாக இரண்டிடங்களுமென்று 'பதினொரு (11)' இடங்களில் இடம்பெற்றுள்ளது. இவைகளுடன் புறநூற்களில் 'இரண்டு' இடங்களி

லும், ஆற்றுப்படையுள் ஓரிடத்திலுமாக 'பதினான்கு (14)' இடங்களில் போத்துப் பெயரினைக் காணமுடிகின்றது.

**கண்டி**

'கண்டி' எனும் பெயரினை மரபியலுள் தொகுத்தவற்றுள் மட்டுமே கா ணமுடிகின்றது. வகுத்துரைக்கப் பெற்றனவற்றுள் இடம்பெறாத நிலையில், சி றப்பு வழக்காக வகுக்கப்பெற்றனவற்றுள் எருமைக்குரிய பெயராகக் குறிப்பிடு கின்றது மரபியல்.

சங்க அக இலக்கியங்களுள் 'கண்டி' என்ற பெயர் பதிவுசெய்யப் படவி ல்லை என்பது குறிப்பிடத்தக்கது. 'கண்டி' என்பதனைப் பதிற்றுப்பத்து மட்டு ம் ஓரிடத்தில் கணுக்களைக் (கணுக்களையுடைய கோல்) குறிப்பதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளதனை,

"கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்" (பதிற்றுப்.43:27)

என்ற பாடலடி புலப்படுத்தி நிற்கின்றது.

**கடுவன்**

மரபியலுள், 'கடுவன்' எனும் ஆண்பாற்பெயர் தொகுத்தவற்றுள் இடம் பெற்று; வகுத்தனவற்றுள் இடம்பெறாது; சிறப்பு வழக்கினைக் குறிக்கின்ற நி லையில் குரங்கிற்குரிய பெயராக வகுக்கப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்
.

சங்க அக இலக்கியங்களில் குரங்கிற்குரிய பெயரென்று நற்றிணை 'மூன் று' இடங்களிலும், குறுந்தொகை 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறுநூறு ஐந்தி டங்களிலும், கலித்தொகை ஓரிடத்திலும், அகநானூறு மூன்றிடங்களிலுமாக " பதினான்கு (14)"[78] இடங்களில் குறிக்கப்பட்டுள்ளன. இதனை,

"கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி,"

"........................................... கடுவன்

முறிஆர் பெருங்கிளை அறிதல் அஞ்சி,"

"கல்லாக் கடுவன் நடுங்க முள் எயிற்று,"

"கடுவனும் அறியும் அக்கொடியோனையே,"

"............................................. கடுவன்

ஊழுறு தீம்கனி உதிர்ப்பக்கீழ் இருந்து,"

"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்,"

"குரங்கின் தலைவன் குருமயிர்க் கடுவன்,"

"மந்திக் காதலன் முறிமேய் கடுவன்,"

"கல்லா மந்தி கடுவனொடு உகளும்,"

"கடுவனும் அறியாக் காடு இறந்தோளே,"

"கல்லாக் கடுவன் கணம்மலி சுற்றத்து,"

"அறியாது உண்ட கடுவன் அயலது,"

"பல்கிளைத் தலைவன் கலலாக் கடுவன்,"

"கல்லா மந்தி கடுவனோடு உகளும்"

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. மேலும், புறநானூற்றில் (158:23, 200: 2) இரண்டிடங்களிலும், மலைபடுகடாமில் (237) ஓரிடத்திலும் இக்கடுவன் எனும் பெயரினைக் காணமுடிகிறது.

இவ்வாறாகக் கடுவன் என்ற பெயரினை எட்டுத்தொகை அகநூற்கள்மட்டும்'பதினான்கு (14)' இடங்களில்எடுத்தியம்பியுள்ளது குறிக்கத்தக்கதுடன்; புறநூற்களில் இரண்டிடங்களிலும், ஆற்றுப்படையுள் ஓரிடத்திலுமாக 'பதினேழு (17)' இடங்களில் 'கடுவன்' பெயர் பதிவாகியிருக்கின்றது.

**ஆண்**

'ஆண்பால் எல்லாம் ஆண்' (தொல்.மரபி.51:1) என்று ஆண்பாற் பெயர்களுக்கு முடிபு கூறியுள்ளது மரபியல்.

*சங்க அக நூற்களில் உயர்திணைக்கும், பறவை, மான் ஆகிய அஃறிணைக்கும் 'ஆண்' என்ற பெயர் குறிக்கப்பட்டுள்ளது.*

**உயர்திணை**

*உயர்திணைக்குரிய பெயராக, எட்டுத்தொகை அக நூற்களில் குறுந்தொகை விடுத்து ஏனைய நூற்களுள் "ஒன்பது"[79] இடங்களில் ஆண் என்ற பெயர் பதிவுசெய்யப்பட்டுள்ளது. அவற்றைப் பின்வரும் பாடலடிகள் வழித் தெளிய முடிகின்றது,*

*"காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்,"*
*"ஆண்தகை விறலி வேள் அல்லன்,"*
*"ஆண்எழில் அண்ணலோடு அருஞ்சுரம் முன்னிய,"*
*"அன்னான் ஒருவன்தன் ஆண் தகை விட்டு,"*
*"ஆண்எழில் முற்றி உடைத்து உள் அழிதரும்,"*
*"வில் அலைந்து உண்ணும் வல்ஆண் வாழ்க்கை,"*
*"வல் ஆண் பதுக்கைக் கடவுள் பேண்மார்,"*
*"வல்ஆண் அருமுனை நீத்தி அல்லாந்து,"*
*"ஆடூஉச் சென்னித் தகைப்ப."*

*இவற்றுள் அகநானூறு ஓரிடத்தில் 'ஆண்' என்னும் பெயரினைக் குறிக்கும் பொருட்டாக 'ஆடூஉ' என்று இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.*

*இவற்றுடன் சங்க புறநூற்களான பதிற்றுப்பத்து (31:14, 67:10, 86:4) 'மூன்று' இடங்களிலும், புறநானூறு (179:9, 201:14, 292:8, 346:3) 'நான்கு' இடங்களிலும், மதுரைக்காஞ்சி (29) ஓரிடத்திலும், ஆற்றுப்படையுள் சிறுபாணாற்றுப்படை (29) மட்டும் ஓரிடத்திலுமாக 'பதினெட்டு (18)' இடங்களில் உயர்திணை குறித்து 'ஆண்' எனும் பெயர் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.*

**ஆண் பறவை**

"கோளுடை நெடுஞ்சினை ஆண்குரல் விளிப்பின்"[80]

என்ற அடியில் நற்றிணை பறவைக்குரிய பெயராக 'ஆண்' என்பதை எடுத்தாண்டுள்ளது குறிக்கத்தக்கது.

**ஆண்மான்**

'ஆண்' என் பெயரினை மானுக்குரியதென்று ஐங்குறுநூறும் அகநானூறும் "ஐந்து"[81] இடங்களில் குறிப்பிட்டுள்ளன. இதனை,

"மான் பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்,"

"அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்,"

"கெடுமான் இனநிரை தழீஇய கலையே
கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்கும்,"

"ஆண்குரல் விளிக்கும் சேண்பால் வியன்சுரை,"

"அலந்தலை மூதேறு ஆண்குரல் விளிப்ப"

என்ற அடிகள் அறியச் செய்கின்றன.

இவ்வாறாக 'ஆண்' எனும் பெயரினை, உயர்திணைக்குரியதாகப் 'பதினெட்டு (18)' இடங்களிலும், பறவைக்குரியதாக ஓரிடத்திலும், மானுக்குரியதாக 'ஐந்து' இடங்களிலுமாக 'இருபத்தினான்கு (24)' இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளமை சுட்டத்தக்கதாகும்.

தொல்காப்பிய மரபியல் சுட்டும் ஏழு சிறப்பு வழக்குப் பெயர்களில் கடுவன், கோட்டான், பூசை, சேவல், ஏனம், கண்டியின் பதிவுகள் மட்டும் இடம் பெற்றுள்ளன. இவற்றில் ஆய்வுக்கு உட்பட்ட சங்க அக இலக்கியங்களில் கடுவன் குறித்த பதிவுகள் குரங்கின் ஆண்பாற் பெயரினைக் குறிப்பதாக ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

சேவல் குறித்த பதிவுகள் பறவைகளின் ஆண்பாற்பெயராக எடுத்தாண்டு, ஆண் குதிரைக்குரிய பெயராகச் சுட்டப்படாதது நோக்கத்தக்கது.

இவ்வாறாக மரபியலுள் வகுக்கப் பெற்ற ஆண்பாற்பெயர்களை விடுத்து , ‘ஏற்று, களிற்று, காளை, பகடு, பகட்டு, வல்லியம், போகில், ஓரி, உழை, விடை, மா, உம்பல் ஆகியவை உயர்திணை, அஃறிணைக்குரியவைகளாகவும்; அகன்றோர், அகுதை, அஞ்சி, அண்டர், அண்டிரன், அதிகன், அந்தணன், அரசன், அரைசர், அருமன், அவினி, அவுணன், அறவன், அறவோன், அறனிலாளன், அறியான், அறிவான், அன்பினன், அன்னிமிஞிலி, ஆஅய், ஆடவர், ஆட்டனத்தி, ஆண்மை, ஆதன், ஆதிரையான், இடையன், உதியஞ்சேரல், உதியன், உமணன், உலையன், உழவன், ஊமன், ஊரன், எயினன், எவ்வி, எழினி, ஏதிலாளன் , ஐயர், ஐயன், ஓரி, கங்கன், கடவன், கட்டி, கணவன், கண்ணியன், கம்மியன், கரிகால்வளவன், கள்வன், காமன், காரி, காலன், கானகநாடன், கிழவோன், கிழவன், கிள்ளிவளவன், குடவர், குட்டுவன், குயவன், குரிசில், குருடன், குழும்பன், குழையன், குன்றநாடன், கொங்கன், கொடியன், கொல்லன், கோமான், கோவலர்,சாரல்நாடன், சிலம்பன், சுறாக்கொடியன், செம்பியன், செழியன், சென்னி (சோழன்), சேணோன், சேந்தன், சேரலாதன், சேர்ப்பன், தச்சன், தாரன், திதியன், தித்தன் வெளியன், திருமா, துறைவன், தென்னவன், தேரோன், தொடியன், நள்ளி, நன்னன், நாடன், பசும்பூண்பாண்டியன், பரதவர், பழையன், பாகன், பாணன், பாரி, பார்ப்பனன், பார்ப்பான், பிட்டன், பிண்டன், புலம்பன், பூழியன், பெரியன், பேகன், பொதுவன், பொருநன், பொருப்பன், பொறையன், மகிழ்நன், மடவோன், மத்தி, மருத்துவன், மலைநாடன், மலையன், மல்லன், மள்ளன், மறவன், மன்னன், மிஞிலி, முக்கண்ணன், முடியன், முருகு, மூவன் போன்ற பெயர்களும் உயர்திணை ஆண்பாற்குரியவையென்று சங்க அக இலக்கியங்களுள் குறிக்கப்பட்டுள்ளன.

**தொகுப்புரை**

♦ மரபியலில் பெயர் மரபுகளுக்குத் தனிச்சிறப்பிடம் தந்துள்ள தொல்காப்பிய ர் ஆண்பாற்பெயர்களை இரண்டாவதாகத் தொகுத்துள்ளார்.

♦ அஃறிணைகளில் எருது, ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் ஆகியன ஆண்பாற்பெயர்களாக வரையறுக்கப்பட்டுள்ளன.

♦ நிகண்டுகளும் உயர்தரக் கட்டுரை இலக்கணமும் ஆண்பாற் பெயர்களைமரபி யல்அடிப்படையிலும், சமகாலவழக்குமுறைகளிலும் விளம்பியுள்ளன.

♦ எருது எனும் ஆண்பாற்பெயர் தொகுத்தவற்றுள் மட்டும் இடம்பெற்று, வகுத் தனவற்றுள் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கதாகும்.

♦ சங்க அகநூற்களுள் 'எருது' எனும் பெயர் நற்றிணையில் 'இரண்டு' இடங்க ளிலும், அகநானூற்றில் ஓரிடத்திலுமாக 'மூன்று' இடங்களில் காளைமாட் டிற்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

♦ மரபியலுள் 'ஏறு' என்பது மானினங்கள், பன்றி, எருமை, மரை, ஆ, பெற்றம், சுறாமீன் ஆகியவற்றிற்குரிய பெயராக வகுத்துரைக்கப் பட்டுள்ளது.

♦ சங்க அக இலக்கியங்களுள் மாடு, மரை, மான், சுறவு ஆகியவற்றிற்கும், மரபியல் வகுக்காத இடி, எழால் (பறவையினம்) ஆகியவையும் ஏறு பெயருக்குரியன வாக இடம்பெற்றிருப்பது கவனித்தற்குரியது.

♦ ஏறு எனும் பெயர் சங்க அக நூற்களில் மாட்டிற்குரியதாக 'நாற்பத்தேழு (47 )' இடங்களிலும், மானுக்குரியதாக 'பன்னிரண்டு (12)' இடங்களிலும், மை ரக்குரியதாக 'மூன்று' இடங்களிலும், சுறாமீன், சிங்கம், குறும்பூழ் பறவை மு

றையே ஓரிடத்திலும், இடிக்குரியதாக 'பதினைந்து (15)' இடங்களிலுமாக 'எண்பது (80)' இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

- தொல்காப்பியத்தில் 'ஏற்றை' எனும் ஆண்பாற்பெயர் ஆற்றல்மிக்க வலிமை வாய்ந்த ஆணினங்கள் அனைத்திற்கும் இப்பெயர் உரியதாக வகுக்கப்பட்டுள்ளது.

- சங்க அக நூற்களில் பன்றி, முள்ளம்பன்றி, காளைமாடு, குரங்கு, நாய், செந்நாய், புலி, கரடி, இறாமீன், முதலை, வெள்ளெலி, காட்டுப்பூனை, சங்கு, நரி, கழுதை ஆகிய உயிரினங்கள் ஏற்றை எனும் பெயரினைப் பெறுவன என்று எட்டுத்தொகை அக நூற்களுள் மட்டும் இடம்பெற்றிருப்பது குறிக்கத்தக்கது.

- ஏற்றைப்பெயர் புலிக்குரியதாக 'பதினொரு (11)' இடங்களிலும், கரடிக்குரியதாக 'ஏழு' இடங்களிலும், செந்நாய்க்குரியதாக 'ஐந்து' இடங்களிலும், மாட்டுக்குரியதாக 'இரண்டு' இடங்களிலும், முள்ளம்பன்றி, பன்றி, முதலை, குரங்கு, நாய், வெள்ளெலி, வெருகு, சங்கு, நரி, கழுதை, இறால், உயர்திணை முறையே ஓரிடத்திலுமாக 'முப்பத்தேழு (37)' இடங்களில் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகின்றது.

- ஒருத்தல் என்ற பெயர் புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம், யானை, பன்றி, எருமை ஆகிய உயிரினங்களுக்குரியதாக மரபியலில் வகுக்கப்பெற்றுள்ளது.

- சங்க அக நூற்களுள் யானை, பன்றி, மான், யாளி முதலானவற்றிற்குரிய பெயராகப் பதிவு செய்துள்ளது. இவற்றுள் 'யாளி' எனும் விலங்கு மரபியலுள் வகுக்கப்படாதது நோக்குதற்குரியது.

♦ யானைக்குரியதாக 'பதினேழு (17)' இடங்களிலும் பன்றிக்குரியதாக 'ஐந்து' இடங்களிலும், மான், யாளி முறையே ஓரிடத்திலுமாக 'இருபத்தினான்கு (2 4)' இடங்களில் ஒருத்தல் பெயரினைக் காணமுடிகின்றது.

♦ ஆண்பாற்பெயர்களுள் 'களிறு' யானை, பன்றி ஆகியவற்றிற்குரிய பெயரெ ன்று மரபியல் அடையாளப்படுத்தியுள்ளது.

♦ சங்க அக நூற்களுள் முல்லைப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்களில் இப்பெ யர் பதிவாகியுள்ளது. யானைக்குரிய பெயராக நற்றிணையில் 'இருபத்தெட் டு (28)' இடங்களிலும், குறுந்தொகையில் 'பத்து (10)' இடங்களிலும், ஐங்கு றுநூற்றில் 'மூன்று' இடங்களிலும், கலித்தொகையில் 'பதினைந்து (15)' இட ங்களிலும், அகநானூற்றில் 'நாற்பத்தொரு (41)' இடங்களிலும், குறிஞ்சிப்பாட்டு , பட்டினப்பாலை முறையே 'இரண்டு' இடங்களிலுமாக 'நூற்றியொரு (101)' இடங்களில் இடம்பெற்றுள்ளன.

♦ பன்றிக்குரிய பெயராக 'களிறு' என்பதனை அகநானூறு மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

♦ மரபியலில் 'சே' என்னும் ஆண்பாற்பெயர் தொகுத்தவற்றில் மட்டும் இடம் பெற்று; வகுத்தவற்றில் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கது.

♦ சங்கஅக இலக்கியங்களில் 'சே, சேயிறா, சேயிதழ், சேயரி, சேயிலை, சேயிழை, சேவடி' போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன. 'சே' எனும் பெயர் காளைக் குரியதாக 'எட்டு' இடங்களிலும், இறாமீனுக்குரியதாக 'ஏழு' இடங்களிலும், சி வந்த இதழுக்கு ஓரிடத்திலும், சிவந்த கண் வரியைக் குறித்து 'ஆறு' இடங்க ளிலும், நெல்லின் சிவந்த அரிக்கு ஓரிடத்திலும், வேல் நுனிக்குரியதாக 'இர ண்டு' இடங்களிலும், அணிகலனுக்குரியதாக 'பத்து (10)' இடங்களிலும், அ

டிக்குரியதாக 'பன்னிரண்டு (12)' இடங்களிலுமாக 'நாற்பத்தேழு (47)' இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

- மயிலல்லாத சிறகுடைய அனைத்தும் 'சேவல்' எனும் ஆண்பாற் பெயரினைப் பெறுவனவாகும் என்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களுள் கோழி, காட்டுக்கோழி, சம்பங்கோழி, புறவு, அன்னம், பருந்து, கழுகு, குயில், குருவி, ஊர்க்குருவி, ஆந்தை, நீர்க்காக்கை, கூகை, குறும்பூழ், அன்றில், கொக்கு ஆகிய பறவையினங்களுக்குரிய பெயராக பயின்று வந்துள்ளது.

- சேவல் கோழிக்குரிய பெயராக ஆறிடங்களிலும், புறவிற்கு 'எட்டு' இடங்களிலும், அன்னம், ஆந்தை, கூகை, கொக்கு முறையே 'இரண்டு' இடங்களிலும், பருந்திற்கு 'ஒன்பது' இடங்களிலும், காட்டுக்கோழி, சம்பங்கோழி, கழுகு, குயில், குருவி, ஊர்க்குருவி, நீர்க்காக்கை, அன்றில் முறையே ஓரிடத்திலும், குறும்பூழுக்கு மூன்றிடங்களிலும், பொதுப்பெயரென்று ஓரிடத்திலுமாக 'நாற்பத்திமூன்று (43)' இடங்களில் பதிவாகியுள்ளது.

- இரலை என்னும் ஆண்பாற்பெயர் புல்வாய் எனப்படும் மானிற்குரியதாக அடையாளப்படுத்தியுள்ளது, மரபியல். சங்க அக நூற்களில் ஐங்குறுநூறு, குறிஞ்சிப்பாட்டு தவிர்த்து ஏனைய நூற்களில் இப்பெயர் மானுக்குரியதாக பதிவு செய்யப்பட்டுள்ளது. நற்றிணையில் 'நான்கு' இடங்களிலும், குறுந்தொகை 'ஆறு' இடங்களிலும், அகநானூறு 'பதின்மூன்று (13)' இடங்களிலும், கலித்தொகை, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலுமாக 'இருபத்தாறு (26)' இடங்களில் இரலைப்பெயர் எடுத்தாளப்பட்டுள்ளது.

- கலை எனும் ஆண்பாற்பெயர் புல்வாய், உழை என்கின்ற மானினங்களுக்கும் 'முசு' எனும் குரங்கினத்திற்கும் உரியதாக மரபியல் சுட்டியுள்ளது. கலைப்பெயர் மானுக்குரியதாக நற்றிணை 'மூன்று' இடங்களிலும், குறுந்தொகை, கலித்தொகை முறையே 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ஓரிடத்தி

லும், அகநானூற்றில் ‘பன்னிரண்டு (12)’ இடங்களிலுமாக, ‘இருபது (20)’ இடங்களில் விளம்பப்பட்டுள்ளது. முசு குரங்கிற்குரியதாக நற்றிணை, குறுந்தொகை முறையே ஓரிடத்தில் குறித்துள்ளதுடன், நற்றிணையில் ஓரிடத்திலும், குறுந்தொகை ‘ஐந்து’ இடங்களிலும், அகநானூற்றில் ‘நான்கு’ இடங்களிலும் குரங்கிற்குரிய பெயராக அடையாளப் படுத்தப்பட்டுள்ளன.

- மோத்தை, உதள், அப்பர் ஆகிய பெயர்கள் ஆட்டுக்குரியதாக மரபியலில் குறிக்கப்பட்டபோதும், சங்க அக இலக்கியங்களுள் இப்பெயர்கள் எடுத்தாளப்படாதது குறிப்பிடத்தக்கதாகும்.

- தகர் எனும் பெயர் ஆட்டுக்குரியதாக வகுத்துள்ளது மரபியல். சங்க அக இலக்கியங்களுள் ஐங்குறுநூற்றில் ஓரிடத்திலும், அகநானூறு, பட்டினப்பாலை முறையே ‘இரண்டு’ இடங்களிலுமாக ஐந்திடங்களில் ஆட்டுக்குரிய பெயராகப் பயின்று வந்துள்ளதைக் காணமுடிகின்றது.

- மரபியல் பெற்றம், எருமை, மரை, புலி, புல்வாய் ஆகிய விலங்கினங்களுக்கும்; இடங்கர், கராம், வரால், வாளை முதலான நீர்வாழ்வனவற்றிற்கும்; மயில், எழால் (வல்லூறு) ஆகிய பறவையினங்களுக்கும் ‘போத்து’ பெயர் குறிக்கப்பெறுவன என்கிறது.

- சங்க அக நூற்களுள் ‘போத்து’ என்ற பெயர் புலி, எருமை, முதலை, வரால், வாளை, நீர்நாய், ஓந்தி முதலானவற்றிற்கு எடுத்தாளப்பட்டுள்ளது. இவற்றில் நீர்நாய், ஓந்தி ஆகியன மரபியல் விளம்பாப் பெயர்கள் என்பது கவனித்தற்குரியதாகும்.

- சங்க அக இலக்கியங்களில் போத்துப் பெயர் புலிக்குரியதாக ‘இரண்டு’ இடங்களிலும், எருமைக்குரியதாக ‘மூன்று’ இடங்களிலும், முதலை, வரால், வாளை, நீர்நாய் முறையே ஓரிடத்திலும், ஓந்திக்குரியதாக இரண்டிடங்களிலுமாக ‘பதினொரு (11)’ இடங்களில் இடம்பெற்றுள்ளன.

♦ கண்டி எனும் பெயர் மரபியலுள் தொகுத்தவற்றுள் மட்டுமே காணமுடிகின்றது. வகுத்துரைக்கப்பட்டவற்றுள் இடம்பெறா நிலையில்; சிறப்பு வழக்காக வகுக்கப்பெற்றவற்றுள் எருமைக்குரியதாக மரபியல் குறிப்பிட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களில் 'கண்டி' என்ற பெயர் எடுத்தாளப்படவில்லை என்பது கவனித்தற்குரியது.

♦ மரபியலுள் கடுவன் என்ற ஆண்பாற்பெயர் தொகுத்தனவற்றுள் இடம்பெற்று; வகுக்கப்பெற்றனவற்றுள் இடம்பெறாது; சிறப்பு வழக்கினுள் மட்டும் குரங்கிற்குரிய பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது. சங்க அக நூற்களில் குரங்கிற்குரிய பெயராகக் குறுந்தொகை 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறுநூறு ஐந்திடங்களிலும், கலித்தொகை ஓரிடத்திலும், அகநானூறு மூன்றிடங்களிலுமாக 'பதினான்கு (14)' இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

♦ கடுவன் பெயரினை எட்டுத்தொகை அகநூற்கள் மட்டும் குறித்துள்ளது நோக்குதற்குரியது.

♦ ஆண்பால் எல்லாம் ஆண்பாற்குரிய பெயரென்று முடிபு கூறியுள்ளது மரபியல். சங்க அக நூற்களில் உயர்திணைக்கும், பறவை, மான் ஆகிய அஃறிணைகளுக்கும் 'ஆண்' என்ற பெயர் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

♦ 'ஆண்' எனும் பெயர் உயர்திணைக்குரிய பெயராக நற்றிணை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்திலும், கலித்தொகை 'மூன்று' இடங்களிலும், அகநானூறு 'நான்கு' இடங்களிலுமாக 'ஒன்பது' இடங்களிலும் குறிக்கப்பட்டுள்ளன. பறவைக்குரிய பெயரென்று நற்றிணை மட்டும் ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளது. மானுக்குரிய பெயராக ஐங்குறுநூறு ஓரிடத்திலும், அகநானூறு 'நான்கு' இடங்களிலுமாக ஐந்திடங்களில் பதிவுசெய்துள்ளதைக் காணமுடிகிறது.

♦ தொல்காப்பிய மரபியல் சுட்டும் 'ஏழு' சிறப்பு வழக்குப் பெயர்களில் தத்தை நீங்கலாக கடுவன், கோட்டான், பூசை, சேவல், ஏனம், கண்டியின் பதிவுகள் சங்க நூற்களில் இடம்பெற்றுள்ளன. சங்க அக இலக்கியங்களில் கடுவன் குறித்த பதிவுகள் குரங்கின் ஆண்பாற்பெயரினையும், சேவல் குறித்த பதிவுகள் பறவையின் ஆண்பாற்பெயரினையும் குறிப்பதால் இவற்றைப் பற்றி ஆண்பாற்பெயர் மரபுகளுள் விளக்கப்பட்டுள்ளது. சிறப்பு வழக்கில் சேவல் என்பது ஆண் குதிரையைக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. சங்க அக இலக்கியங்களுள் சேவல் பெயர் ஆண் குதிரையைக் குறித்துப் பதிவு செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

♦ மரபியலுள் வகுக்கப்பெற்ற ஆண்பாற்பெயர்களை விடுத்து, 'ஏற்று, களிற்று, காளை, பகடு, பகட்டு, வல்லியம், போகில், ஓரி, உழை, விடை, மா, உம்பல் ஆகியவை உயர்திணை, அஃறிணைக்கு உரிய பெயர்களாகவும்; அகன்றோன், அகுதை, அஞ்சி, அண்டர், அண்டிரன், அதிகன், அந்தணன், அரசன், அரைசர், அருமன், அவினி, அவுணன், அறவன், அறவோன், அறனிலாளன், அறியான், அறிவான், அன்பினன், அன்னிமிஞிலி, ஆஅய், ஆடவர், ஆட்டனத்தி, ஆதன், ஆண்மை, ஆதிரையான், இடையன், உதியஞ்சேரல், உதியன், உமணன், உலையன், உழவன், ஊமன், ஊரன், எயினன், எவ்வி, எழினி, ஏதிலாளன், ஐயர், ஐயன், ஓரி, கங்கன், கடவன், கட்டி, கணவன், கண்ணியன், கம்மியன், கரிகால் வளவன், கள்வன், காமன், காரி, காலன், கானகநாடன், கிழவோன், கிழவன், கிள்ளிவளவன், குடவர், குட்டுவன், குயவன், குரிசில், குருடன், குழும்பன், குழையன், குன்றநாடன், கொங்கன், கொடியன், கொல்லன், கோமான், கோவலர், சாரல்நாடன், சிலம்பன், சுறாக்கொடியன், செம்பியன், செழியன், சென்னி (சோழன்), சேணோன், சேந்தன், சேரலாதன், சேசர்ப்பன், தச்சன், தாரன், திதியன், தித்தன்வெளியன், திருமா, துறைவன், தென்னவன், தேரோன், தொடியன், நள்ளி, நன்னன், நாடன், பசும்பூண்பாண்டியன், பரதவர், பழையன், பாகன், பாணன், பாரி, பார்ப்பனன், பார்ப்பான்,

பிட்டன், பிண்டன், புலம்பன், பூழியன், பெரியன், பேகன், பொதுவன், பொருநன், பொருப்பன், பொறையன், மகிழ்நன், மடவோன், மத்தி, மருத்துவன், மலைநாடன், மலையன், மல்லன், மள்ளர், மள்ளன், மறவர், மறவன், மன்னர், மன்னன், மிஞிலி, முக்கண்ணன், முடியன், முருகு, மூவன், யவனர், யாணர், வணிகன், வயவன், வளவன், வேந்தன், வேலன் போன்ற பெயர்களும் ஆண்பாற்குரியவையென்று சங்க அக இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளன.

- உயர்திணையில் அர், அன், ஆ, ஆர் போன்ற ஆண்பாற் விகுதிகள் பின்னொட்டாக இடம்பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. சு.இலம்போதரன் (ப.ஆ.), திவாகர நிகண்டு, ப.34
2. மேலது, பக்.34-35
3. மேலது, பக்.31-33
4. பிங்கலமுனிவர், பிங்கலநிகண்டு, பக்.339-341
5. ப.கணேசமுதலியார் (உ.ஆ.), சூடாமணி நிகண்டு, பக்.64-67
6. ஞா.தேவநேயப்பாவாணர், உயர்தரக் கட்டுரை இலக்கணம், பக்.9-10
7. நற்.125:9, 315:4, அகநா.37:16
8. குறுந்.190:6-7, 275:3-4, 363:1, ஐங்.445:3, 493:1, கலித்.101:9, 101:41, 101:47, 102:9, 102:27, 102:28, 102:29, 102:32, 103:17, 103:23, 103:58, 103:65, 104:23, 104:31, 104:42, 104:60, 104:71, 105:34, 105:44, 105:47, 105:51, 105:56, 106:13, 106:22, 106:25, 106:26, 106:31, 106:36, 106:38, 106:43, 107:3, 107:4, 108:48, 113:28, அகநா.0:7, 213:6, 249:7, 265:12, 269:3, 291:3, 341:7, பட்டினப்.46
9. குறுந்.317:1, 321:5, அகநா.287:4
10. நற்.204:9, 242:10, குறுந்.256:3, 319:1, 338:1, கலித்.13:3-4, அகநா.7:10, 121:14, 234:10-11, 287:10, 321:4, 367:3
11. கலித்.84:23
12. கலித்.2:7
13. அகநா.103:1
14. அகநா.285:11
15. நற்.7:5, 37:10-11, 51:4, 114:9, 261:2-3, குறுந்.176:7, ஐங்.469:3-4, 493:1, கலித்.46:10, அகநா.119:6, 144:11-12, 159:13, 222:14-15, 328:2-3, 364:2
16. நற்.36:1, 104:1, 148:9, 154:5, 279:5, குறுந்.141:5, 343:3, ஐங்.216:1, அகநா.8:6, 147:6, 389:20
17. நற்.125:1, 325:1, அகநா.8:2, 72:5, 171:9-15, 201:16, 247:4

18. நற்.285:4

19. மேலது, 336:1-4

20. குறுந்.324:1

21. மேலது, 373:5

22. ஐங்.354:1, 397:1, அகநா.21:18, 111:11, 285:6

23. பட்டினப்.140

24. கலித்.101:36, 106:15

25. அகநா.133:2

26. மேலது, 246:1

27. மேலது, 337:15

28. மேலது, 343:12

29. மேலது, 367:8

30. நற்.211:5

31. அகநா.44:7

32. நற்.92:9, 126:3, 148:10, 317:2, குறுந்.396:4, கலித்.2:26, 21:1-2, 46:3, அகநா.65:16, 78:4, 207:9, 227:9, 308:1, 308:15, 379:24, 388:12, 397:10

33. நற்.82:7, 386:1, குறுந்.391:1, ஐங்.266:1, 267:1

34. அகநா.219:13

35. மேலது, 381:1

36. நற்.14:8, 36:3, 47:1, 51:9, 103:4, 112:3, 114:12, 125:12, 137:7, 144:1, 150:2, 154:4, 182:9, 192:2, 205:4, 222:9, 255:4, 261:6, 284:9, 292:5, 300:11, 302:7, 310:9, 344:10, 349:7, 362:7, 383:4, 399:7, குறுந்.36:2, 52:1, 88:2, 112:3, 208:2, 244:2, 307:4, 329:3, 346:1, 393:5, ஐங்.218:3, 305:1, 379:3, கலித்.7:1, 11:9, 25:5, 45:12, 49:21, 50:15, 52:14, 55:20, 60:10, 61:18, 103:18, 104:44, 132:5, 135:4, 149:1, அகநா.17:16, 29:3, 45:4, 46:12, 57:12, 59:9, 62:13, 81:12, 96:17, 102:9, 106:12, 111:8, 112:6, 121:6, 137:3, 138:11, 148:13, 152:11, 155:11, 162:22, 163:7, 165:2, 168:9, 189:6, 211:4,

*218:1, 238:12, 257:16, 261:13, 276:10, 291:7, 298:10, 301:16, 308:9, 309:7, 321:9, 322:7, 328:13, 346:23, 349:11, 389:20, குறிஞ்சிப்.212, 253, பட்டினப்.48, 172*

37. *அகநா.72:13*

38. *கலித்.103:16, 103:51, 104:14, 104:25, 105:18, அகநா.36:7, 63:18, 297:16*

39. *அகநா.19:10*

40. *நற்.13:4, 16:9, 75:8, குறுந்.86:1, ஐங்.52:2, அகநா.113:19*

41. *அகநா.156:3*

42. *குறுந்.15:5*

43. *அகநா.221:5*

44. *நற்.24:6, 398:7, குறுந்.281:6, 293:7, ஐங்.481:2, கலித்.59:24, 75:3, அகநா.51:12, 369:5, 373:10*

45. *நற்.31:2, 278:8, 358:8, ஐங்.188:1, 196:3, அகநா.60:1, 270:5*

46. *நற்.0:1, 297:2, 342:9, குறுந்.0:1, கலித்.95:4, அகநா.5:3, 89:18, 117:8, 254:3, 309:11, 376:7, பட்டினப்.146*

47. *நற்.389:7-8, குறுந்.0:5, 107:1-2, அகநா.87:5, 277:15, 367:12*

48. *குறுந்.242:1*

49. *ஐங்.51:1*

50. *நற்.71:8, 162:1-2, 189:8, 384:1, குறுந்.154:3, அகநா.47:11, 254:5, 271:1*

51. *கலித்.70:1-2, 147:66*

52. *நற்.298:4, அகநா.33:5, 51:6, 161:6, 215:12, 297:17, 363:13, 375:8, 381:10*

53. *நற்.352:4*

54. *நற்.118:3*

55. *நற்.181:1*

56. *குறுந்.85:2*

*57. நற்.218:3*

*58. அகநா.89:3*

*59. நற்.319:4, அகநா.122:13-15*

*60. நற்.272:1*

*61. அகநா.63:7, 103:4, 387:10-12*

*62. அகநா.270:13*

*63. மேலது, 290:4*

*64. மேலது, 346:3*

*65. ஐங்.425:1*

*66. நற்.69:4, 121:4, 242:10, 256:8, குறுந்.65:1, 183:4, 220:2, 232:3, 250:2, 338:1, கலித்.15:5, அகநா.4:4, 14:6, 23:8, 34:4, 74:9, 91:10, 133:18, 139:10, 154:8, 194:6, 304:9, 314:6, 371:5, முல்லைப்.99, பட்டினப்.245*

*67. நற்.37:6, 119:6, 265:2, 213:2, குறுந்.272:4-5, ஐங்.373:2-3, கலித்.11:17, 56:11, அகநா.47:7, 82:5, 97:1, 112:14, 129:5, 151:7, 184:10, 199:11, 241:10, 285:5, 353:12, 395:8*

*68. நற்.119:5, 334:5, குறுந்.69:1, 90:4, 121:2, 153:2, 342:1, 385:1, அகநா.7:20, 141:27, 182:14, 205:21*

*69. ஐங்.238:1, அகநா.101:4, 378:6-7, பட்டினப்.77, 141*

*70. அகநா.238:5, 398:22*

*71. நற்.330:1, ஐங்.91:1, அகநா.316:3*

*72. ஐங்.5:4*

*73. அகநா.36:1*

*74. மேலது, 276:2*

*75. மேலது, 386:1*

*76. நற்.186:5*

*77. குறுந்.140:1*

*78. நற்.22:3, 151:5-6, 233:1, குறுந்.26:8, 278:4-5, ஐங்.274:1, 275:1, 276:1, 2 77:2, 374:4, கலித்.40:15, அகநா.2:5, 352:2, 378:21*

*79. நற்.94:2, ஐங்.250:4, கலித்.9:10, 47:7, 139:21, அகநா.31:13, 35:7, 107:12 , 301:12*

*80. நற்.174:3*

*81. ஐங்.373:3, அகநா.147:7, 199:1-2, 321:6, 367:3.*

# சங்க அக இலக்கியங்களில் ஆண்பாற்பெயர்கள்

*உலகில் தோன்றிய பல்வேறு மொழிகளில் அழிந்தொழிந்த மொழிகள் பல; அழிந்து கொண்டிருப்பவை சில. இதனைக் கருத்தில் கொண்டு தமிழ் மொழியையும் அதன் வளத்தையும் (வழக்கு முறைமைகள்) காக்கும் பொருட்டுத் தொல்காப்பியர் தன் காலத்திற்கு முன்னும் ; தனது காலத்திலும் வழங்கிய மரபுச் சொற்களைக் காலங்காலமாக அழியாது காத்திட மரபியலை வகுத்துள்ளார். அவற்றுள் பெயர் மரபுகளுக்குத் தனிச்சிறப்பிடம் தந்துள்ளார். அச்சிறப்பினுள் இடம்பெற்றுள்ள இளமை, ஆண்பால், பெண்பாற்பெயர் மரபுகளின் படிச் சங்க அக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள ஆண்பாற்பெயர்கள் குறித்துக் காண்கின்றது இவ்வியல்.*

## மரபியல் கூறும் ஆண்பாற்பெயர்கள்

*மரபியலுள் இளமைப்பெயர்களுக்கு அடுத்ததாக ஆண்பாற் பெயர்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அவை எருது, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன், பிறவும் (தொல்.மரபி.2) என்பனவாகும். பிறவும் என்று சுட்டியதுடன் வகுக்கப் பெற்றனவற்றுள் 'ஏறு' என்பதனையும் காணமுடிகின்றது (தொல்.மரபி.39,40,41).*

## நிகண்டுகளில் ஆண்பாற்பெயர்கள்

*மரபியலுள் விளம்பியுள்ள ஆண்பாற்பெயர்களைக் கொண்டு நிகண்டுகளின் அமைவுகளை நோக்க பின்வருமாறு அறிய முடிகின்றது.*

### திவாகர நிகண்டு

*திவாகர நிகண்டு ஆண்பாற்பெயர்களென்று, "களிறு, ஆ, ஒருத்தல், ஏறு, போத்து, பகடு, கலை, உம்பல், கடுவன், சேவல், தகர், ஏட்டை (12)"[1] ஆகியவற்றைக் குறிப்பிட்டுள்ளது. இவற்றுடன்,*

| | |
|---|---|
| "களிறு (2) | : வேழம், கேழல் |
| மா (2) | : குதிரை, யானை |
| ஒருத்தல் (9) | : புலி, உழை, புல்வாய், மரை, எருமை, கவரி, யானை, பன்றி, கரடி |
| ஏறு (9) | : கவரி, பன்றி, மரை, உழை, புல்வாய், எருமை, எருது, சுறவு, துருவாடு |
| போத்து (9) | : புலி, மரை, புல்வாய், பெற்றம், எருமை, பூஉ, நீர்வாழ் சாதி, குதிரை ஆண், வெருகு |
| பகடு | : யானை, பெற்றம், எருமை, ஏற்றை |
| கலை | : மான், முசு |
| உம்பல் | : யானை, யாடு |
| கடுவன் | : குரங்கு, வெருகு |
| சேவல் | : கோழி, அன்னம் |
| தகர் | : சுறா, களிறு, ஆளி, துருவ ஆட்டுஏறு |
| ஏட்டை | : எருமைப்பகடு, வெருகின் ஏறு |
| சே | : எருமை, புல்வாய்"[2] |

என்றும்,

| | |
|---|---|
| "களிற்றியானை (2) | : மதகரி, தந்தி |
| ஆண் பசு (13) | : பாறல், புல்லம், பாண்டில், பசு, மூரி, ஏறு, பூணி, இறால், பெற்றம், எருது, சே, விடை, இடபம் |
| எருமை ஆண் (2) | : பகடு, கடா |
| துருவாடு ஏறு (4) | : ஏழகம், தகர், மேழகம், கடா |
| வெள்ளாட்டுஏறு(3) | : உதள், செச்சை, மோத்தை |
| மான் ஏறு (1) | : இரலை |
| புல்வாய் (1) | : இரலை |
| ஆண் பூனை (3) | : விலாளம், கடுவன், வெருகு |
| முசு (3) | : ஓரி, கலை, கடுவன் |

ஆண் : ஆண்பாலெவையும் ஆண் எனப்படும்

போதகம் : அரிமா, யானை, புலியே அணைய இணையவேற்றை

போதகம் என்பர்”[3]

என்று ஆண்பாற்பெயர் குறித்து விளக்கியுள்ளது.

**பிங்கல நிகண்டு**

விலங்கின் ஆண் மரபினை பிங்கல நிகண்டு பின்வருமாறு விளம்பியுள்ளது. அவைகளாவன,

“விலங்கு ஆண் : களிறு, போத்து, கலை, கடுவன், பகடு, சே, ஒருத்தல், தகர், ஏறு, உம்பல், ஏட்டை, மா, ஓரி, சேவல் (14)

‘களிறும் போத்துங் கலையுங் கடுவனும்
பகடுஞ் சேவு மொருத்தலுந் தகரு
மேறு மும்பலு மேட்டையு மாவு
மோரியுஞ் சேவலும் விலங்கி னாண்பெயர்’ (2555)

அவற்றுள்,

களிறு : கரி, சுறவு, கேழல் ஆகிய மூன்றற்கும் ஆம்

அவற்றுள், கரியுஞ் சுறவுங் கேழலுங் களிறே’ (2556)

போத்து : மரை, ஆன், காரான், காட்டா, புல்வாய், புலி, சலசாதி (7)

மரையான் காரான் காட்டாப் புல்வாய்
புலிசல சாதி யனைத்தும் போத்தே (2257)

போத்து தொடர்ச்சி : யானை, பூனை, குதிரை (3) (7+3 =10),

யானை வெருகு குதிரை போத்தே (2558)

(‘சலசாதிஅனைத்தும்’ என்றது : சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை இவ்வாறனையும். இதனை, “நீர்வாழ் சாதியுளறு பிறப்புரிய” என்ற தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் சூத்திரத்தால் உணர்க.)

கலை : மான், முசு (2)

மானு முசுவுங் கலையென வருமே (2559)

கடுவன் : குரங்கு, பூனை (2)

கவியும் பூனையுங் கடுவ னென்ப (2560)

பகடு : யானை, எருமை, பெற்றம் (3)

யானையு மெருமையும் பெற்றமு மற்றிவை

பான்மையி லுரைக்கிற் பகட்டென் றாமே (2561)

சே : குதிரை, எருது, புல்வாய் (3)

குதிரை யெருது புல்வாய் சேவெனல் (2562)

ஒருத்தல் : கவரி, யானை, பன்றி, கரடி (4)

கவரி யானை பன்றி கரடி

யுரிய வாகு மொருத்தற் பெயர்க்கொடை (2563)

தகர் : துருவாடு, வேழம், யாளி, சுறா (4)

துருவாடும் வேழமும் யாளியுஞ் சுறாவும்

தகரெனு நாமஞ் சாற்றப் பெறுமே (2564)

ஏறு : புலி, உழை, மரை, ஆ, புல்வாய், எருமை, பன்றி, சுறா, சங்கு (9)

புலியுழை மரையாப் புல்வா யெருமை

யரிசுறாச் சங்கே யேறென லாகும் (2565)

உம்பல் : யானை, யாடு (2)

யானையும் யாடு மும்ப லென்ப (2566)

ஏட்டை : எருமை, வெருகு (2)

எருமையும் வெருகு மேட்டை யென்ப (2567)

மா : குதிரை, யானை, பன்றி (3)

குதிரை யானை பன்றி மாவே (2568)

ஓரி : முசு, நரி (2)

முசுவு நரியு மோரி யாகும் (2569)

சேவல் : கோழி, அன்னம் (2)

கோழியும் மன்னஞ் சேவ லாகும் (2570)”[4]

என்பனவற்றின் மூலம் அறியலாகிறது.

**சூடாமணி நிகண்டு**

சூடாமணி நிகண்டும் விலங்கின் ஆண் மரபுகளைக் குறிப்பிடுகின்றது. அவை பின்வருமாறு இடம்பெற்றுள்ளன.

“விலங்கின் ஆண்மரபு :

கடுவன்மாவொருத்தல்போத்துக்கலைதகர்களிறுசேவி
னொடுபகடும்பலேறோடோரியீராறுமாண்போர்
வடுவறுகுரங்குபூஞைமற்றிவைகடுவனாமே
அடுதிறல்யானை பன்றியாடல்வெம்புரிமாவாம் (30)

விலங்கின் ஆண் பெயர் - கடுவன், மா, ஒருத்தல், போத்து, கலை, தகர், களிறு, சே, பகடு, உம்பல், ஏறு, ஓரி (12).

கடுவனென்னும் பெயர் - குரங்கு, பூஞை இரண்டுக்குமாம்.

மாவென்னும் பெயர் - யானை, பன்றி, புரவி (3)

கரடிபுல்வாய்மான்யானைகவரியோடெருமைபன்றி
பொருபுலிமரையென்றொன்பான்புகன்றிடுமொருத்தலாகும்
மரைபசுப்புலியேபூஞைமற்றைப்புல்வாயும்போத்தாம்
கருதியமுசுவுமானுங்கலையெனக்காட்டலாமே (31)

ஒருத்தலென்னும் பெயர் - கரடி, புல்வாய், மான், யானை, கவரி, எருமை, பன்றி, புலி, மரை (9)

போத்தென்னும் பெயர் - மரை, பசு, புலி, பூஞை, புல்வாய் (5)

கலையென்னும் பெயர் - முசு, மான் (2)

துருவாடுவேழம்யாளிசுறாத்தகரென்றேசொல்லும்
கரியொடுசுறவுபன்றிகளிறெனக்காட்டலாமே

*செருமலிகுதிரைபெற்றம்புல்வாயேசேவென்றாகும்*
*எருமையோடியானைபெற்றம்பகடிபமும்பலாமே (32)*

*தகரென்னும் பெயர் - துருவாடு, வேழம், யாளி, சுறா (4)*
*களிரென்னும் பெயர் - கரி, சுறவு, பன்றி (3)*
*சேவென்னும் பெயர் - குதிரை, பெற்றம், புல்வாய் (3)*
*பகடென்னும் பெயர் - எருமை, யானை, பெற்றம் (3)*
*உம்பலென்னும் பெயர் - இபம் (1)*

*ஆனுடனெருமைபன்றியாய்மயிர்கவரிசங்கு*
*மானொடுமரைபுல்வாயுமாறுகொள்சுறவுமேறாம்*
*ஊனுகர்நரியினோடுமுசுவிவையோரியாகும்*
*மானநூல்விலங்கினாணின்மரபெனவடைத்தவாறே (33)*

*ஏறென்னும் பெயர் - ஆண், எருமை, பன்றி, கவரி, சங்கு, மான்,*
*மரை, புல்வாய், சுறவு (9)*
*ஓரியென்னும் பெயர் - நரி, முசு (2).*"[5]

**உயர்தரக் கட்டுரை இலக்கணம்**

தேவநேயப்பாவாணர் உயர்தரக் கட்டுரை இலக்கணம் எனும் நூலில் மரபுப் பெயர்களுள் ஆண்பாற்பெயர்களை முதலாவதாக எடுத்தியம்பியுள்ளார். அவை,

| **உயிரினப் பெயர்** | **ஆண்பாற் பெயர்** |
|---|---|
| "யானை, பன்றி | களிறு |
| குரங்கு | கடுவன், திம்மன் |
| எருமை | கண்டி |
| பன்றி | கேழல் |
| புல்வாய், புலி, உழை, மரை | |

| | |
|---|---|
| கவரி, கராம், யானை, பன்றி, எருமை | ஒருத்தல் |
| அரிமா, பன்றி, புல்வாய், உழை, கவரி, எருமைமாடு, மரை, சுறா | ஏறு |
| அரிமா, புலி, குரங்கு, பனை | ஏற்றை |
| மாடு, எருமை, புலி, மரை, புல்வாய், சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை, மயில், புல்லூறு | போத்து |
| புல்வாய் | இரலை |
| புல்வாய், உழை, முசு | கலை |
| ஆடு | மோத்தை, தகர், உதள், அப்பர், மேழகம் (ஏழகம்), செச்சை |
| பறவைகள், குதிரை | சேவல் |
| குதிரை, மாடு, புல்வாய் | சே |
| மாட்டுக்கன்று, எருமைக்கன்று | சேக்கன்று |
| ஆடு, மாடு, எருமை | கடா |
| மாடு, எருமை, யானை | பகடு |
| மாடு | காளை, எருது |

ஆண்பாற்குச் சிறப்புப் பெயர் பெறாத உயிரினங்களின் ஆண்பாலெல்லாம், ஆண் என்னும் அடைமொழி பெற்ற பொதுப் பெயரால் குறிக்கப் பெறும்.

எ.டு. ஆண் கரடி, ஆண் பல்லி"[6]

என்பனவற்றின் வழி அறியமுடிகின்றது.

இவ்வாறாக நிகண்டுகள், உயர்தரக் கட்டுரை இலக்கணம் ஆண்பாற்பெயர் வகைமைகளை மரபியலில் விளம்பியுள்ளவற்றுடன் பிற்கால வழக்குமுறைகளையும் எடுத்துரைத்துள்ளமையைக் காணமுடிகின்றது.

**சங்க அக இலக்கியங்களுள் ஆண்பாற்பெயர்கள்**

தொல்காப்பிய மரபியலில் சுட்டப்பட்டுள்ள ஆண்பாற்பெயர்கள் சங்க அக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள அமைவுகளையும், இடம்பெறாப் பெயர்களையும் புதுமையான மரபுகளையும் பின்வரும் பகுதிகள் மெய்ப்பிக்கின்றன.

**எருது (காளை மாடு)**

'எருது' எனும் ஆண்பாற்பெயர் மரபியலுள் தொகுத்தவற்றுள் சுட்டிக்காட்டப் பட்டாலும் வகுக்கப்பெற்றனவற்றுள் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கதாகும். இப்பெயர் சங்க அக இலக்கியங்களுள் "மூன்று"[7] இடங்களில் நற்றிணையில் 'இரண்டு' இடங்களிலும், அகநானூற்றில் ஓரிடத்திலும் காணக் கிடைக்கின்றமையை,

"வேங்கைக் கண்ணியர் எருது எறி களமர்,"

"நல்எருது நடை வளம் வைத்தென,"

"மருதமர நிழல் எருதொடு வதியும்"

எனும் பாடலடிகள் உறுதிப்படுத்துகின்றன. இவற்றுடன் புறநூற்களான பதிற்றுப்பத்துள் (27:13) ஓரிடத்திலும் ; புறநானூற்றுள் (102:1, 289:2, 327:1, 342: 13, 370:16) ஐந்திடங்களிலும்; அகப்புற நூலான பரிபாடலுள் (20:62) ஓரிடத்திலும், ஆற்றுப்படையுள் (மலை.469) ஓரிடத்திலும் எருது எனும் பெயர் காணலாகின்றது. இப்பாடலடிகள் அனைத்தும் காளை மாட்டினைக் குறித்ததாகக் காட்சிப் படுத்துகின்றன.

இவ்வாறாக 'எருது' என்னும் பெயர் அகநூல்களுள் மூன்றிடங்களிலும், புறநூற்களுள் 'ஆறு' இடங்களிலும், அகப்புற நூலுள் ஓரிடத்திலும், ஆற்றுப்ப

டையுள் ஓரிடத்திலுமாக 'பதினொரு (11)' இடங்களில் இடம்பெற்றுள்ளமை யை அறியமுடிகின்றது.

**ஏறு**

மரபியலுள் புல்வாய், உழை, கவரி ஆகியன மானினத்திற்கும்; பன்றி, எருமை, மரை, ஆ, பெற்றம்; கடல்வாழ் சுறவு (சுறா மீன்) முதலானவற்றிற்குரிய பெயராகவும் 'ஏறு'ம் குறிப்பிடப்பட்டுள்ளது.

'ஏறு' என்ற பெயர் சங்க அக இலக்கியங்களில் மாடு, மரை, மான், சுறவு ஆகியவற்றிற்கும், மரபியல் குறிக்காத உயர்திணை, ஞாயிறு (சூரியன்), இடி, எழால் (குறும்பூழ் பறவை) முதலானவைகளுக்கும் சுட்டப்பட்டுள்ளன.

**மாடேறு**

ஏறு எனும் பெயர் மாட்டுக்குரியதாகச் சங்க அக இலக்கியங்களுள் நற்றிணை, குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு ஆகிய நூற்களை விடுத்து, ஏனைய நூற்களில் "நாற்பத்தேழு (47)"[8] இடங்களில் எடுத்தாளப் பட்டுள்ளன. அவைகளாவன,

"நல்ஏறு இயங்குதொறு இயம்பும்
பல்ஆன் தொழுவத்து ஒருமணிக் குரலே,"
"எல்ஊர்ச் சேர்தரும் ஏறுடை இனத்துப்
புல்ஆர் நல்ஆன் பூண்மணி கொல்லோ"
"கண்ணி மருப்பின் அண்ணல் நல்ஏறு,"
"நல்ஏறு தழீஇ நாகுபெயர் காலை,"
"ஏறு முரண் சிறப்ப,"
"ஏறு தொழூஉப் புகுந்தனர் இயைபுடன் ஒருங்கு,"
"கொல்ஏறு சாட இருந்தார்க்கு எம்பல் இருங்,"
"ஆங்கு ஏறும் வருந்தின ஆயரும் புண் கூர்ந்தார்,"
"பொருபுகல் நல்ஏறு கொள்பவர் அல்லால்,"

“வருந்தினான் மன்ற அவ்ஏறு,”

“ஏறு எவ்வம் காணா எழுந்தார் எவன் கொலோ,”

“ஏறு உடை நல்லார் பகை,”

“உடல் ஏறு கோள் சாற்றுவார்,”

“பொருமுரண் முன்பின் புகல்ஏறு பலபெய்து,”

“தெரிபு தெரிபு குத்தின ஏறு,”

“ஏறு கொண்டு ஒருங்கு தொழூஉ விட்டனர்,”

“அஞ்சார் கொலைஏறு கொள்பவர் அல்லதை,”

“குரூஉக் கண் கொலை ஏறு கொள்வான்,”

“நறை வலம் செயவிடா இறுத்தன ஏறு,”

“வாடா வெகுளி எழில்ஏறு கண்டை,”

“தொழுவினுள் கொண்ட ஏறு எல்லாம் புலம்புக,”

“குரூஉக் கண் கொலை ஏறு கொண்டேன்,”

“கொள இடம் கொளவிடா நிறுத்தன ஏறு,”

“மிடைப் பாயும் வெள் ஏறு கண்டைகா,”

“ஆங்க ஏறும் பெறுவரும் மாறுற்று,”

“நல்ஏறு கொண்ட பொதுவன் முகன் நோக்கி,”

“கொல்ஏறு போலும் கதம்,”

“மெய்வார் குருதி ஏறு எல்லாம்,”

“மரத்தைப் போல் தொட்டன ஏறு,”

“அம்பி ஊர்ந்தாங்கு ஊர்ந்தார் ஏறு,”

“ஏறுதம் கோலம் செய்மருப்பினால்,”

“தம்புல ஏறு பரத்தர உய்த்த தம்,”

“கொலை ஏறு சாடிய புண்ணை, எம் கேளே,”

“கொல் ஏறு கொண்டான் குருதி மயக்குறப்,”

“கொல்ஏறு கொண்டான் இவள் கோள்வன்,”

“கொல் ஏறு கோடல் குறைஎன கோவினத்தார்,”

*"பல்ஏறு பெய்தார் தொழூஉ,"*

*"ஆமுனியா ஏறுபோல் வைகல் பதின்மரை,"*

*"நல்ஏறு நாகுடன் நின்றன,"*

*"ஊர்ந்தது ஏறே சேர்ந்தோள் உமையே,"*

*"இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை,"*

*"ஏறு முந்துறுத்து சால்பதம் குவைஇ,"*

*"இன்சிலை எழில் ஏறு கெண்டி புரைய,"*

*"ஏறுடை இனநிரை பெயர பெயராது,"*

*"ஏறுடை ஆயத்து இனம்பசி தெறுப்ப,"*

*"பதவுமேயல் அருந்து துளங்கு இமில் நல்ஏறு,"*

*"ஏறு பொரச் சேறாகி"*

*என்ற பாடலடிகளின் வழி அறியலாகின்றது.*

*மாடேறு என்று குறுந்தொகையில் 'மூன்று' இடங்களிலும், ஐங்குறுநூற்றில் 'இரண்டு' இடங்களிலும், கலித்தொகையில் 'முப்பத்திநான்கு (34)' இடங்களிலும், அகநானூற்றில் 'ஏழு' இடங்களிலும், பட்டினப்பாலையில் ஓரிடத்திலுமாக 'நாற்பத்தேழு (47)' இடங்களில் இடம்பெற்றுள்ளது. இவற்றுடன், புறநூற்களான பதிற்றுப்பத்தில் (71:13, 90:45) 'இரண்டு' இடங்களிலும், புறநானூற்றில் (1:3, 1:4:259:1, 288:2, 309:4, 339:1) 'ஆறு' இடங்களிலும், நெடுநல்வாடையில் (4) ஓரிடத்திலும்; அகப்புறநூலான பரிபாடலில் (20:24) ஓரிடத்திலும்; ஆற்றுப்படை நூற்களில் திருமுருகாற்றுப்படை (151), பெரும்பாணாற்றுப்படை (210) முறையே ஓரிடத்திலும், மலைபடுகடாமில் (330, 335, 408, 573) 'நான்கு' இடங்களிலுமாக, 'ஏறு' எனும் பெயரானது மாட்டுக்குரியதாக ' அறுபத்துமூன்று (63)' இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளன.*

**மரையேறு (மரையானேறு)**

மரைக்குரிய பெயராகிய, 'ஏறு' சங்க அக நூற்களில் மட்டுமே காணக் கிடைக்கிறது. குறுந்தொகையில் 'இரண்டு' இடங்களிலும், அகநானூற்றில்ஓரிடத்திலுமாக "மூன்று"[9] இடங்களில்இடம்பெற்றுள்ளது. இதனை,

"புரிமட மரையான் கருநரை நல்ஏறு,"

"மன்ற மரையா இரிய ஏறு அட்டு,"

"மரைஏறு சொறிந்த மாத்தாள் சந்தின்"

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

**மானேறு**

மானுக்குரிய ஆண்பாற்பெயராக மானேறு நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு ஆகிய அகநூற்களில் "பன்னிரண்டு (12)"[10] இடங்களில் இடம்பெற்றுள்ளது. அவற்றைப் பின்வரும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன,

"ஏறுபிரி டப்பிணை கடுப்ப வேறுபட்டு,"

"தேடூஉ நின்ற இரலை ஏறே,"

"மான்ஏறு உகளும் கானம் பிற்பட,"

"மான்ஏறு மடப்பிணை தழீஇமருள் கூர்ந்து,"

"திரிமருப்பு இரலை அண்ணல் நல்ஏறு,"

"பொரி மலர்ந்தன்ன பொறிய மடமான்
திரிமருப்பு ஏறொடு தேர் அறற்கு ஓட,"

"ஏறுடை இனத்த நாறுஉயிர் நவ்வி,"

"வெருள் ஏறு பயிரும் ஆங்கண்,"

"ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பிணை
ஏறுபுணர் உவகைய ஊறுஇல உகள,"

"கணைக்கால் அம்பிணை ஏறுபுறம் நக்க,"

"கதிர்க்கால் அம்பிணை உணீஇய புகல்ஏறு,"

"அலந்தலை மூதேறு ஆண்குரல் விளிப்ப."

இவ்வகையில் அகநூற்களான நற்றிணையுள் 'இரண்டு' இடங்களிலும், குறுந்தொகயுள் 'மூன்று' இடங்களிலும், கலித்தொகையுள் ஓரிடத்திலும், அகநானூற்றுள் 'ஆறு' இடங்களுமாக 'பன்னிரண்டு (12)' இடங்களில் மானுக்குரிய பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது. இவற்றுடன், பதிற்றுப்பத்தில் (89:2) ஓரிடத்திலும், புறநானூற்றில் (157:10, 202:2) 'இரண்டு' இடங்களிலுமாக 'பதினைந்து (15)' இடங்களில் மானேறு என்று இயம்பப்பட்டுள்ளது.

**சுறவேறு**

மரபியல் கூறும் 'ஏறு' சுறாமீனின் ஆண்பாற்பெயராகச் சங்க அக இலக்கியங்களில் கலித்தொகை மட்டும் ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளமையை,

"சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்"[11]

என்ற பாடலடி அறியச் செய்கிறது.

**மரபியலில் வகுக்கப்படா உயிரினங்களில் ஏறு**

**சிங்க ஏறு**

சிங்கத்திற்குரிய பெயராக அகநூற்களுள் கலித்தொகை மட்டும் ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளது. அவை,

"ஏறு பெற்று உதிர்வன போல் வரை பிளந்து இயங்குநர்"[12]

எனும் அடி வழி தெளிய முடிகிறது. இவற்றுடன், பதிற்றுப்பத்து (38:10), புறநானூறு (58:8), மதுரைக்காஞ்சி (144) முறையே ஓரிடத்திலும், திருமுருகாற்றுப்படையில் (264, 268) 'இரண்டு' இடங்களிலும் சிங்கத்திற்கு 'ஏறு' எனும் பெயர் சுட்டப்பட்டுள்ளது.

**ஏழாலேறு**

மரபியலுள் வகுக்கப்படாத, பறவையினங்களுக்குரிய பெயராகச் சங்க அக இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ள எழால் (குறும்பூழ்) எனும் பறவைக்குரி

ய பெயராக 'ஏறு' இடம்பெற்றுள்ளதை அகநானூறு மட்டும் சுட்டியுள்ளது. அது,

"நிழல் அறு நனந்தலை எழால் ஏறு குறித்த"[13]

என்ற பாடலடி மெய்ப்பிக்கின்றது. இதனுடன்,

"ஏறுவேட்டு எழுந்த இனம்தீர் எருவை"[14]

எனும் அடியுள் இரையை எற்றுதலை விரும்பிய ஆண் பருந்தின் விரைவுச் (வேகம்=குறி) செயலினைக் குறித்ததாகச் சுட்டியுள்ளார் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். மேலும் பருந்துக்குரிய பெயராகப் புறநானூறு (43:5) குறிப்பிட்டுள்ளதும் சுட்டத்தக்கதாகும்.

**இடியேறு**

இடிக்கும் 'ஏறு' எனும் பெயர் உரித்தாகியுள்ளதை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய அகநூற்களுள் "பதினைந்து (15)"[15] இடங்களில் எடுத்தாளப் பட்டுள்ளன. அவை,

"தழங்கு குரல் ஏறொடு முழங்கி வானம்,"

"ஆர்கலி நல்ஏறு திரிதரும்
கார்செய் மாலை வரூஉம் போழ்தே,"

"கடுங்குரல் ஏறொடு கனைதுளி தலைஇ,"

"ஈர்ங்குரல் உருமின் ஆர்கலி நல்ஏறு,"

"இருள் தூங்கு விசும்பின் அதிரும் ஏறொடு
வெஞ்சுடர் கரந்த கமஞ்சூல் வானம்,"

"ஏறுடை மழையின் கலிழும்,"

"அம்கண் இருவிசும்பு அதிர ஏறொடு
பெயல் தொடங் கின்றே வானம்,"

"......................... ஏறு எதிர் இரங்க,"

"ஏறு இரங்கு இருளிடை இரவினில் பதம்பெறாஅன்,"

"ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப,"

“....................................... விசும்பின்

ஏறுஎழுந்து முழங்கினும் மாறு எழுந்து சிலைக்கும்,”

“விசும்பின் நல்ஏறு சிலைக்கும் சேண்சிமை,”

“உரவுஉரும் ஏறொடு மயங்கி

இரவுப் பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே,”

“முழவு அதிர்ந்தன்ன முழக்கத்து ஏறோடு

உரவுப் பெயல் பொழிந்த நள்ளென் யாமத்து,”

“ஏறுடைப் பெருமழை பொழிந்தென”

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

இவற்றுள் நற்றிணை ‘ஐந்து’ இடங்களிலும், குறுந்தொகை, கலித்தொகை முறையே ஓரிடத்திலும், ஐங்குறுநூறு ‘இரண்டு’ இடங்களிலும், அகநானூறு ‘ஆறு’ இடங்களிலுமாகப் ‘பதினைந்து (15)’ இடங்களில் குறிப்பிட்டுள்ளதுடன்; பதிற்றுப்பத்தில் (23:13) ஓரிடத்திலும், புறநானூறு (160:3, 265:6), பரிபாடல் (8:33, 20:2), மதுரைக்காஞ்சி (63, 243) முறையே ‘இரண்டு’ இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படை (135) ஓரிடத்திலும் என்று ‘இருபத்திமூன்று (23)’ இடங்களில் இடிக்குரிய பெயராக இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

**பன்றியேறு**

மரபியலுள் ‘ஏறு’ பெயர் பெறுவனவாக வகுக்கப்பட்டுள்ள உயிரினங்களில் பன்றியும் ஒன்று. இவ்விலங்கிற்குரிய பெயராகச் சங்க அக இலக்கியங்கள் எடுத்து விளம்பாத நிலையில் பதிற்றுப்பத்து (13:2), மதுரைக்காஞ்சி (298) முறையே ஓரிடத்தில் குறித்துள்ளது சுட்டடத்தக்கதாகும். இத்திறத்துடன்,

“இமிழ்முரசு இரங்க ஏறுமாறு சிலைப்ப” (மதுரைக்.672)

எனும் அடியில் ஆண்விலங்குகள் (பொதுப்பெயர்) மாறுபட்டு முழங்கியதாகப் பதிவு செய்துள்ளது குறிக்கத்தக்கதாகின்றது.

**ஆமாவேறு**

*ஆமாவிற்குரிய பெயராகச் சங்க அக இலக்கியங்களுள் இடம்பெறா நிலையில் திருமுருகாற்றுப்படை மட்டும் 'ஆமா நல்ஏறு சிலைப்ப சேண்நின்று' (315) என்று எடுத்துரைத்துள்ளது சுட்டத்தக்கதாகும்.*

*இவற்றுடன், பதிற்றுப்பத்தில் 'எடுத்தேறு ஏய கடிப்புடை அதிரும்' (85: 1) என்று படைக்கருவிகளை எடுத்தெறியும் திறத்திற்கும், 'மட்டப் புகாவின் குட்டுவர் ஏறே' (90:26) என குட்டுவர்களின் தலைவன் (தலைமைப் பண்பிற்கும்), பொருநராற்றுப்படையில் 'கோலின் தாறு களைந்து ஏறு என்று ஏற்றி' (166-7) என்று இங்ஙனம் ஏறுகவென்று தேரில் ஏற வழிகாட்டிய முறைக்கும் 'ஏறு' எடுத்தாளப்பட்டுள்ளமைச் சுட்டத்தக்கதாகின்றது.*

*'ஏறு' பெயர் சங்க அக நூற்களில் மாட்டுக்குரியதாக ' நாற்பத்தேழு (47)' இடங்களிலும், மானுக்குரியதாக 'பன்னிரண்டு (12)' இடங்களிலும், மரைக்குரியதாக '3' இடங்களிலும், சுறவு (சுறாமீன்), சிங்கம், எழால் (குறும்பூழ்பறவை) முறையே ஓரிடத்திலும், இடிக்குரியதாக 'பதினைந்து (15)' இடங்களிலுமாக 'எண்பது (80)' இடங்களில் பொதிந்துள்ளன.*

*இவ்வாறாக 'ஏறு' எனும் பெயர் மாட்டுக்குரியதாக 'அறுபத்துமூன்று (63)' இடங்களிலும், மரைக்குரிய பெயராக '3' இடங்களிலும், மானுக்குரியவென்று 'பதினைந்து (15)' இடங்களிலும், சுறவு (சுறாமீன்), எழால் பறவை, ஆமா, விலங்கு (பொதுப்பெயர்) முறையே ஓரிடத்திலும், பருந்து, பன்றி முறையே 'இரண்டு' இடங்களிலும், சிங்கத்திற்கு 'ஆறு' இடங்களிலும், இடிக்குரியதாக 'இருபத்து மூன்று (23)' இடங்களிலுமாக ஏறு எனும் பெயர் 'நூற்று இருபத்தொன்று (121)' இடங்களில் பதிவாகியுள்ளது குறிப்பிடத்தக்கதாகின்றது.*

**ஏற்றை**

மரபியலில் 'ஏற்றை' எனும் ஆண்பாற்பெயர் ஆற்றல் மிக்க வலிமை வாய்ந்த ஆண் இனம் அனைத்திற்கும் உரியதாக வகுக்கப்பட்டுள்ளது.

சங்க அக இலக்கியங்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய எட்டுத்தொகை அகநூற்கள் மட்டும் பன்றி, முள்ளம்பன்றி, காளைமாடு, குரங்கு, நாய், செந்நாய், புலி, கரடி, இறாமீன், முதலை, வெள்ளெலி, காட்டுப்பூனை, சங்கு, நரி, கழுதை ஆகிய உயிரினங்களுக்கு ஏற்றைப் பெயரை எடுத்தாண்டுள்ளன.

**புலியேற்றை**

புலிக்குரிய பெயராக ஏற்றை என்பதனை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றுள் "பதினொன்று (11)"[16] இடங்களில் காண முடிகின்றது. அவைகளினை,

"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை,"
"பூம்பொறி உழுவைப் பேழ்வாய் ஏற்றை,"
"செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை,"
"வெஞ்சின உழுவைப் போழ்வாய் ஏற்றை,"
"நாட்சுரம் உழந்தவாள் கேழ் ஏற்றை,"
"குறுங்கை இரும்புலிக் கொலைவல் ஏற்றை,"
"மிகுவலி இரும்புலிப் பகுவாய் ஏற்றை,"
"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை,"
"..................அட்ட பேழ்வாய் ஏற்றை,"
"பொறிகிளர் உழுவைப் போழ்வாய் ஏற்றை,"
"தொலைச்சிய இருங்கேழ் ஏற்றை"

என்ற பாடலடிகளின் வழி தெளிய முடிகின்றது.

**கரடியேற்றை**

மரபியல் கூறும் ஏற்றை என்னும் கரடியின் ஆண்பாற்பெயர் நற்றிணை, அகநானூறு ஆகியவற்றில் "ஏழு"[17] இடங்களில் சுட்டப்பட்டுள்ளதனை,

"இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை,"

"கவிதலை எண்கின் பரூஉமயிர் ஏற்றை,"

"குரும்பி வல்சிப் பெருங்கை ஏற்றை,"

"குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை,"

"கோள்வல் ஏற்றை ஓசை ஓர்மார்

........................................................

........................................................

பெருங்கை எண்கின் சுரன் இறந்தோரே,"

"பெருங்கை எண்கின் போழ்வாய் ஏற்றை,"

"இருங்கிளை எண்கின் அழல்வாய் ஏற்றை"

என்கின்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன.

**முள்ளம்பன்றியேற்றை**

"உளமிசைத் திவிர்த்த முளவுமான் ஏற்றை"[18]

என்னும் அடியில் முள்ளம்பன்றிக்குரிய பெயராக ஏற்றையானது இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

**பன்றியேற்றை**

பன்றிக்குரிய பெயரென்று அகநூற்களில் நற்றிணை மட்டும் ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளது. அதனை,

"பிணர்ச் சுவல் பன்றி தோல்முலைப் பிணவொடு

..............................................................

..............................................................

வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை"[19]

எனும் பாடலடிகள் தெளியச் செய்கின்றன. இவற்றுடன் பன்றிக்குரிய பெயரென்று புறநானூறு (379:8); பெரும்பாணாற்றுப்படை (344) முறையே ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளமை சுட்டத்தக்கதாகும்.

**முதலையேற்றை**

"கொடுந்தாள் முதலைக் கோள்வல் ஏற்றை"[20]

எனும் அடியில் முதலைக்குரிய ஆண்பாற்பெயராக 'ஏற்றை' என்பது காணக்கிடைக்கின்றது.

**குரங்கேற்றை**

'ஏற்றை' குரங்கிற்கும் உரிய பெயரென்று குறுந்தொகை சுட்டியுள்ளதனை,

"கடும்பல் ஊகக் கறைவிரல் ஏற்றை"[21]

எனும் பாடலடி வழி அறியலாகின்றது.

**செந்நாயேற்றை**

செந்நாய்க்குரிய பெயராக ஏற்றையினை ஐங்குறுநூறும் அகநானூறும் "ஐந்து"[22] இடங்களில் குறிப்பிட்டுள்ளதனை,

"ஈர்ம் பிணவு புணர்ந்த செந்நாய் ஏற்றை,"

"கவிழ் மயிர் எருத்தின் செந்நாய் ஏற்றை,"

"செந்நாய் ஏற்றை கேழல் தாக்க,"

"செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்ப,"

"ஓடு குறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை"

எனும் பாடலடிகள் வழி காணலாகின்றது.

**நாயேற்றை**

அகநூற்களுள் பட்டினப்பாலை மட்டும் நாய்க்குரிய பெயராக அடையாளப்படுத்தியுள்ளதனை,

"*கூர் உகிர் ஞமலிக் கொடுந்தாள் ஏற்றை*"[23]

*எனும் பாடலடி மெய்ப்பிக்கிறது.*

**மாடேற்றை**

*மாட்டுக்குரிய பெயரென்று கலித்தொகை மட்டும் "இரண்டு"*[24] *இடங்களில் குறித்துள்ளது. அதனை,*

"*............................ கண்ணஞ்சா ஏற்றை,*"

"*அவ் ஏற்றை*"

*என்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன.*

**வெள்ளெலியேற்றை**

"*புன்தாள் வெள்ளெலி மோவாய் ஏற்றை*"[25]

*எனும் அடியுள் அகநானூறு மட்டும் வெள்ளெலிக்கு உரிய பெயராக ஏற்றையினைக் குறித்துள்ளது சுட்டடத்தக்கதாகின்றது.*

**சங்கேற்றை**

*சங்கிற்குரிய பெயராக ஏற்றை என்பதனை அகநானூறு ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளதனை,*

"*பிணர் மேட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை*"[26]

*என்ற பாடலடி தெளிவிக்கின்றது.*

**நரியேற்றை**

"*வரிமரல் இயவின் ஒருநரி ஏற்றை*"[27]

*என்ற அகநானூற்றுப் பாடலடி நரிக்குரிய பெயரென்று அடையாளப் படுத்தியிருக்கிறது.*

**கழுதையேற்றை**

"*நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றை*"[28]

என்ற அடியில் கழுதைக்குரிய பெயராக அகநானூறு சுட்டியுள்ளது குறிக்கத்த க்கதாகும்.

**வெருகேற்றை**

*மரபியல் கூறும் ஏற்றையென்னும் வெருகின் (காட்டுப் பூனை) ஆண்பா ற்பெயராக அகநானூற்றுள் ஓரிடத்தில் குறித்துள்ளதை,*

*"குவிஅடி வெருகின் பைங்கண் ஏற்றை"*[29]

*என்ற பாடலடி அறியச் செய்கின்றது.*

**இறாலேற்றை**

*நற்றிணையில் மட்டும் இறால் மீனுக்குரியதாக ஏற்றைப் பெயர் இடம் பெற்றுள்ளதனை,*

*"முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை"*[30]

*என்ற பாடலடி தெரிவிக்கின்றது.*

**ஏற்றை**

*அகநானூறு உயர்திணைக்குரிய பெயராக 'ஏற்றை' என்பதனை அறியச் செய்யும் நிலையில் 'ஏற்றை' எனும் சேரரின் படைத்தலைவனைக் குறித்ததாக அடையாளப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது. அதனை,*

*"நன்னனின் ஏற்றை நறும்பூண் அத்தி"*[31]

*என்ற பாடலடி மெய்ப்பிக்கிறது.*

*இவற்றுடன் கவரிமானேற்றை என்று நெடுநல்வாடையும் (91), உடும்பே பற்றை என மலைபடுகடாமும் (508) ஏற்றைப் பெயரினைத் தாங்கியுள்ளது கு றிக்கத்தக்கதாகின்றது.*

*இவ்வாறாக அகநூற்களுள் ஏற்றைப்பெயர் புலிக்குரியதாக 'பதினொன் று (11)' இடங்களிலும், கரடிக்குரியதாக '7' இடங்களிலும், முள்ளம்பன்றி, ப*

ன்றி, முதலை, குரங்கு, நாய், வெள்ளெலி, வெருகு, சங்கு, நரி, கழுதை, இறால், உயர்திணை ஆகியவற்றின் முறையே ஓரிடத்திலும், செந்நாய்க்குரியதாக '5' இடங்களிலும், மாட்டுக்குரியதாக '2' இடங்களிலுமாக 'முப்பத்தேழு (37)' இடங்களில் இடம்பெற்றுள்ளது சுட்டத்தக்கதாகும். மேலும் புறநூற்களுள் புறநானூற்றில் (பன்றியேற்றை.379:8, நத்தையேறு.266:4), 'இரண்டு' இடங்களிலும், நெடுநல்வாடை (கவரிமானேற்றை.91), பெரும்பாணாற்றுப்படை (பன்றியேற்றை.344), மலைபடுகடாம் (உடும்பேற்றை.508) முறையே ஓரிடத்திலுமாக 'நாற்பத்திரண்டு (42)' இடங்களுள் ஏற்றைப் பெயர் பதிவாகியுள்ளது குறிப்பிடத்தக்கதாகின்றது.

**ஒருத்தல்**

மரபியலுள் 'ஒருத்தல்' எனும் பெயர் புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம் (முதலை), யானை, பன்றி, எருமை ஆகிய உயிரினங்களுக்குரியதாக வகுக்கப் பெற்றுள்ளது.

சங்க அக இலக்கியங்களுள் யானை, பன்றி, மான், ஆளி முதலான உயிரினங்களுக்கு ஒருத்தல் என்ற பெயர் எடுத்தாளப்பட்டுள்ளது.

**யானை ஒருத்தல்**

யானைக்குரிய பெயராக அக நூற்களான நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு ஆகியன "பதினேழு (17)"[32] இடங்களில் குறித்துள்ளமையைப் பின்வரும் பாடலடிகள் அறியச் செய்கின்றன,

"கொல் களிற்று ஒருத்தல் சுரன் இறந்தோரே,"

"இடுநீறு ஆடிய கடுநடை ஒருத்தல்,"

"உயர் மருப்பு ஒருத்தல் புகர்முகம் பாயும்,"

"பூம்பொறி ஒருத்தல் ஏந்துகை கடுப்ப,"

"ஓமைக் குத்திய உயர்கோட்டு ஒருத்தல்,"

"காழ்வரை நில்லாக் கடுங்களிற்று ஒருத்தல்,"

*"பால்மருள் மருப்பின் உரல்புரை பாவுஅடி*

*ஈர்நறுங் கமழ்கடாஅத்து இனம்பிரி ஒருத்தல்,"*

*"வாய்இழி கடாத்த வால்மருப்பு ஒருத்தல்,"*

*"காடுமீக் கூறும் கோடு ஏந்து ஒருத்தல்,"*

*"பொறிநுதல் பொலிந்த வயக்களிற்று ஒருத்தல்,"*

*"வெயில்தின வருந்திய நீடுமருப்பு ஒருத்தல்,"*

*"முதல்பாய்ந் திட்ட முழுவலி ஒருத்தல்,"*

*"உழுவையொடு உழந்த உயங்குநடை ஒருத்தல்,"*

*"பெருங்களிற்று ஒருத்தலின் பெயர்குவை,"*

*"உறுபுலி உழந்த வடுமருப்பு ஒருத்தல்,"*

*"எவ்வமொடு வந்த உயர்மருப்பு ஒருத்தல்,"*

*"கடும்பகட்டு ஒருத்தல் நடுங்கக் குத்தி."*

*இவற்றுடன் புறநானூறு (190:9); மலைபடுகடாம் (297) முறையே ஓரிடத்தில் 'ஒருத்தல்' பெயரினை யானைக்கு எடுத்தாண்டுள்ளது அறியலாகின்றது.*

**பன்றியொருத்தல்**

*நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகிய நூற்களில் பன்றிக்குரிய பெயரென்று "ஐந்து"[33] இடங்களுள் சுட்டியுரைக்கின்றன. அவைகளை,*

*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,"*

*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,"*

*"உவரி ஒருத்தல் உழாஅது மடிய,"*

*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,"*

*"சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்"*

*என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது.*

**உழை ஒருத்தல்**

*மானுக்குரிய பெயராக அகநானூறு மட்டும்,*

“செந்நாய் வெரீஇய புகர்உழை ஒருத்தல்”[34]

என்று ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.

**ஆளியொருத்தல்**

“ஆளி நல்மான் அணங்குடை ஒருத்தல்”[35]

என்ற பாடலடி வழி மரபியல் வகுக்காத உயிரினமான யாளிக்குரிய பெயராக ஒருத்தலை அகநானூறு மட்டும் புதுமையாகக் குறித்துள்ளது சிறப்பிற்குரியதாகும்.

**புலியொருத்தல்**

புலிக்குரிய பெயராக ஒருத்தல் என்பதனை அகநூற்களில் குறிப்பிடாத நிலையில், புறநானூறு (52:2) மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது குறிக்கத்தக்கதாகிறது.

**எருமையொருத்தல்**

எருமைக்குரிய பெயராக ஒருத்தலை அகநூற்களுள் காணக்கிட்டாத நிலையில், மலைபடுகடாம் (472) மட்டும் ஓரிடத்தில் எடுத்துரைத்துள்ளது குறிக்கத்தக்கதாகும்.

இவ்வாறாகச் சங்க அக நூற்களில் ஒருத்தல் எனும் பெயர் யானைக்குரியதாக ‘பதினேழு (17)’ இடங்களிலும், பன்றிக்குரியதாக ‘5’ இடங்களிலும், மான், யாளிக்கு முறையே ஓரிடத்திலுமாக ‘இருபத்தினான்கு (24)’ இடங்களுள் காணக் கிடைக்கின்றது.

இவற்றுடன் புறநூற்களில் புறநானூறு யானைக்கும் புலிக்கும் உரியதாக ஓரிடத்திலும், மலைபடுகடாம் யானை, எருமைக்கு முறையே ஓரிடத்தில் ஒருத்தல் பெயர் இடம்பெற்றுள்ளது.

*ஒருத்தல் பெயரினை யானைக்குரியதாக 'பத்தொன்பது (19)' இடங்களிலும், பன்றிக்குரியதாக '5' இடங்களிலும், மான், யாளி, புலி, எருமை முறையே ஓரிடத்திலுமாக 'இருபத்தெட்டு (28)' இடங்களில் பதிவாகியுள்ளதனை அறியமுடிகின்றது.*

**களிறு**

*ஆண்பாற்பெயர்களுள் 'களிறு' யானைக்கும், பன்றிக்கும் உரியதாக மரபியல் குறிப்பிடுகிறது. இவற்றையே சங்க அக இலக்கியங்களுள் முல்லைப்பாட்டு தவிர்த்த ஏனைய நூற்களுள் யானைக்குரிய பெயராக இடம்பெற்றும், பன்றிக்குரிய பெயராக அகநானூறு மட்டும் ஓரிடத்தில் எடுத்தியம்பியுள்ளது.*

**யானைக்களிறு**

*சங்க அக நூற்களுள் யானைக்குரிய பெயராக 'களிறு' நற்றிணையில் 'இருபத்தெட்டு (28)' இடங்களிலும், குறுந்தொகையில் 'பத்து (10)' இடங்களிலும், ஐங்குறுநூற்றில் '3' இடங்களிலும், கலித்தொகையில் 'பதினைந்து (15)' இடங்களிலும், அகநானூற்றில் 'நாற்பத்தொன்று (41)' இடங்களிலும், குறிஞ்சிப்பாட்டில் '2' இடங்களிலும், பட்டினப்பாலையில் '2' இடங்களிலுமாக "நூற்றுஒன்று (101)"[36] இடங்களில் பதிவாகியுள்ளதைப் பின்வரும் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன,*

*"ஞால்வாய்க் களிறு பாந்தள் பட்டெடன,"*
*"தாழ்நீர் நனந்தலைப் பெருங்களிறு அடூஉம்,"*
*"பெருங்களிறு உழுவை அட்டெடன இரும்பிடி,"*
*"இருஞ்சேறு ஆடிய நுதல கொல் களிறு,"*
*"களிறுநின்று இறந்த நீல்அல் ஈரத்து,"*
*"சுரும்பு இமிர் அடுக்கம் புலம்பக் களிறு,"*
*"கைஊன்றுபு இழிதரு களிறு எறிந்தன்றே,"*
*"துஞ்சு களிறு எடுப்பும் தம்பெருங்கல் நாட்டே,"*

"பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை,"

"பெருங்களிறு உழுவை தாக்கலின் இரும்பிடி,"

"மிளைவலி சிதையக் களிறு பல பரப்பி,"

"மஞ்சுதவழ் இறும்பில் களிறு வலம் படுத்த,"

"வறுந்தலைப் பெருங்களிறு போல,"

"வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்,"

"ஏந்து வெண்கோட்டு வயக்களிறு இழுக்கும்,"

"பெருங்களிறு பிளிறும் சோலை அவர்,"

"வயக்களிறு பொருத வாள்வரி உழுவை,"

"களிறு அகப்படுத்த பெருஞ்சின மாசுணம்,"

"ஒளிறு ஏந்துமருப்பின் களிறுமாறு பற்றிய,"

"களிறு பொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை,"

"பிச்சை சூழ் பெருங்களிறு போல எம்,"

"களிறு உதைத்து ஆடிய கவிழ்கண் இடுநீறு,"

"களிறுபெறு வல்சிப் பாணன் கையதை,"

"களிறு தொலைத்து உரறும் கடிஇடி மழைசெத்து,"

"ஒளிறுவேல் அழுவத்துக் களிறு படப்பொருத,"

"மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை,"

"புகர்முகம் சிதையத் தாக்கி களிறு அட்டு,"

"களிறு புறங்காப்ப கன்றொடு வதியும்,"

"துஞ்சு களிறு இவரும் குன்ற நாடன்,"

"ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம்பில்,"

"சிறுகண் பெருங்களிறு வயப்புலி தாக்கி,"

"பெருங்களிறு வாங்க முரிந்து நிலம்படாஅ,"

"பொரு களிறு மிதித்த நெரிதாள் வேங்கை,"

"உரவுக் களிறு போல்வந்து இரவுக்கதவு முயறல்,"

"மறந்தனர் கொள்ளோ தாமே களிறுதன்,"

“களிறு வழங்கு சிறுநெறி புதையத் தாஅம்,”

“நாகுபிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு,”

“களிறொடு பட்ட ஞான்றை,”

“களிறு கோட் பிழைத்த கதம்சிறந்து எழுபுலி,”

“களிறுபிடி தழீஇப் பிறபுலம் படராது,”

“இனக் களிறு வழங்கும் சோலை,”

“வேனில் உழந்தவறிது உயங்குஓய் களிறு,”

“பிடி ஊட்டி பின் உண்ணும் களிறு எனவும் உரைத்தனரே,”

“களிதிகழ் கடாஅத்த கடுங்களிறு அகத்தவா,”

“புகர்முகக் களிறொடு புலிபொருது உழக்கும் நின்,”

“களிறு இயங்கு ஆர்இடை ஈங்கு நீ வருவதை,”

“நீயே வளியின் இகல்மிகும் தேரும் களிறும்,”

“களிறு என ஆர்ப்பவர் ஏனல் காவலரே,”

“காழ்வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்,”

“பொருகளிறு அன்னதகை சாம்பி உள்உள்,”

“மண்டு அமர் ஆட்ட களிறு அன்னான்,”

“அரிமாவும் பரிமாவும் களிறும் கராமும்,”

“திரிதரும் கொல்களிறும் போன்ம்,”

“நிரை களிறு இடைபட நெறியாத்த இருக்கைபோல்,”

“எயல்இடு களிறே போல் இடுமணல் நெடுங்கோட்டை,”

“நிரைதிமில் களிறாக திரைஒலி பறையாக,”

“பெருங்களிறு உரிஞ்சிய மண்அரை யாஅத்து,”

“வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த,”

“நீர்இல் ஆர்ஆற்று நிவப்பன களிறு அட்டு,”

“களிறுடை அருஞ்சமம் ததைய நூறும்,”

“களிறுபட எருக்கிய கல்லென் ஞாட்பின்,”

“படி ஞிமிறு கடியும் களிறே,”

“களிறு கெழுதானைப் பொறையன் கொல்லி,”

“ஒளிறுவேல் அழுவம் களிறு படக்கடக்கும்,”

“களிறு கவர் கம்பலை போல,”

“மறம்புகல் மழகளிறு உறங்கும் நாடன்,”

“களிறு பெறு வல்சிப் பாணன் எறியும்,”

“ஓய்களிறு எடுத்த நோயுடை நெடுங்கை,”

“ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டுக் குழுமும்,”

“சேறு கொண்டு ஆடிய வேறுபடு வயக்களிறு,”

“களிறு தொடூஉக் கடக்கும் கான்யாற்று அத்தம்,”

“கடம்பும் களிறும் பாடி நுடங்குபு,”

“முளைமேய் பெருங்களிறு வழங்கும்,”

“இசைநல் ஈகைக் களிறு வீசு வண்மகிழ்,”

“பெருங்களிறு மிதித்த அடியகத்து இரும்புலி,”

“களிறுஅணி வெல்கொடி கடுப்ப காண்வர,”

“களிறு உயிர்த் தன்ன கண்அழி துவலை,”

“களிறு விளிப்படுத்த கம்பலை வெரீஇ,”

“ஈன்றணி இரும்பிடி தழீஇ களிறுதன்,”

“களிறுஅதர்ப் படுத்த கல்உயர் கவாஅன்,”

“திண்நிலை மருப்பின் வயக்களிறு உரிஞ்தொறும்,”

“கிளை பாராட்டும் கடுநடை வயக்களிறு,”

“இழைஅணி நெடுந்தேர் களிறொடு என்றும்,”

“களிறு சுவைத்திட்ட கோதுடைத் ததரல்,”

“களிறு அட்டுக் குழுமும் ஓசையும் களிபட்டு,”

“பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போல,”

“உரவுக்களிறு ஒதுங்கிய மருங்கில் பரூஉப்பரல்,”

“இருங்களிறு இயல்வரும் பெருங்காட்டு இயவின்,”

“செறிநடைப் பிடியொடு களிறு புணர்ந்தென்ன,”

"களிறு அணந்து எய்தாக் கல்முகை இதணத்து,"

"களிறு புறம் உரிஞ்சிய கருங்கால் இலவத்து,"

"கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்,"

"களிறுகண் கூடிய வாள்மயங்கு ஞாட்பின்,"

"கழைதின் யாக்கை விழைகளிறு தைவர,"

"கடும்பரிப் புரவியொடு களிறு பல வவ்வி,"

"எரிமருள் கவளம் மாந்தி களிறுதன்,"

"பெருங்களிறு தொலைச்சிய இருங்கேழ் ஏற்றை,"

"அருவிடர் அமைந்த களிறுதரு புணர்ச்சி,"

"புழற்கோட்டு ஆமான் புகல்வியும் களிறும்,"

"நீறு ஆடிய களிறு போல,"

"வெளில் இளக்கும் களிறு போல."

இவற்றுடன் புறநூற்களான பதிற்றுப்பத்துள் (11:6, 12:12, 15:4, 16:8, 20 :15, 22:18, 32:3, 33:3, 41:7, 42:18, 43:25, 44:16, 45:4, 47:2, 49:4, 52:1, 53 :21, 64:7, 70:1, 75:1, 76:1, 81:6, 83:3, 84:11, 84:18, 90:7, பதி.தி.3:2) 'இருப த்தேழு (27)' இடங்களிலும்; அகப்புற நூலான பரிபாடலுள் (10:110, 12:28, 1 8:27, 20:105, 22:2, 22:24) 'ஆறு' இடங்களிலும்; புறநானூற்றுள் (4:10, 7:1, 13:5, 15:9, 16:6, 16:19, 17:17, 22:8, 23:2, 26:3, 30:9, 31:8, 40:11, 46:5, 55: 7, 69:9, 81:1, 94:2, 97:8, 98:3, 100:7, 101:6, 103:7, 104:3, 114:3, 125:9, 127 :3, 131:4, 135:14, 140:8, 159:22, 205:14, 220:02, 227:4, 239:15, 240:1, 277 :3, 301:6, 302:9, 306:1, 310:4, 312:6, 313:4, 325:1, 335:10, 336:4, 341:17, 3 42:13, 345:1, 368:1, 370:16, 387:22, 394:15) 'ஐம்பத்து மூன்று (53)' இடங்க ளிலும்; மதுரைக்காஞ்சியுள் (15, 102, 172, 179, 219, 247, 597, 643, 659, 676), 'பத்து (10)' இடங்களிலும்; நெடுநல்வாடையுள் (171) ஓரிடத்திலும்; ஆற்றுப் படையுள் பொருநராற்றுப்படை (49, 142) 'இரண்டு' இடங்களிலும், பெரும் பாணாற்றுப்படை (27, 372, 396, 499) 'நான்கு' இடங்களிலும், மலைபடுகடா

ம் (211, 260, 384) 'மூன்று' இடங்களிலுமாக 'இருநூற்றேழு (207)' இடங்களில் 'களிறு' யானைக்குரித்தாகி நிற்கின்றமையைக் காணமுடிகின்றது.

**பன்றிக்களிறு**

சங்க அக நூற்களுள் அகநானூறு மட்டும் 'களிறு' எனும் பெயர் பன்றிக் குரியதாகச் சுட்டியுள்ளது. இதனை,

"இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை"[37]

என்ற பாடலடி வழி தெளிய முடிகிறது. இத்துடன் பதிற்றுப்பத்தில் (26:2) ஓரிடத்திலும், பரிபாடல் (2:33, 13:36), புறநானூறு (41:9, 325:1) முறையே 'இரண்டு' இடங்களில் பன்றிக்குரிய பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது சுட்டடத்தக் கதாகும்.

இவ்வாறாக 'களிறு' எனும் ஆண்பாற்பெயரானது யானைக்கு 'இருநூற்றேழு (207)' இடங்களிலும், பன்றிக்கு '6' இடங்களிலும் 'இருநூற்றி பதின்மூன்று (213)' இடங்களில் பதிவுசெய்யப் பட்டுள்ளது.

**சே**

மரபியலில் ஆண்பாற்பெயர்களுள் 'சே' என்பதும் ஒன்றாகத் தொகுத்த வற்றுள் மட்டும் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

சங்க அக இலக்கியங்களில் சே, சேயிதழ், சேயரி, சேயிலை, சேயிழை, சேயிறா, சேவடி போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன.

**சே (காளை)**

'சே' என்னும் பெயர் காளை மாட்டினைக் குறிப்பதாகக் கலித்தொகையும் அகநானூறும் "எட்டு"[38] இடங்களில் சுட்டியுள்ளன. அவைகளினை,

"வளையுபு மலிந்த கோடுஅணி சேயும்,"

"சேஎச் செவிமுதற் கொண்டுபெயர்த்து ஒற்றும்,"

"வேல்வல்லான் நிறனே போல் வெருவந்த சேயும்,"

*"சேஎய் சினன் அஞ்சான் சார்பவள் என்றாங்கு,"*

*"வாலிது கிளர்ந்த வெண்கால் சேயும்,"*

*"கயிறு இடுகதச் சேப் போல மதம்மிக்கு,"*

*"சேக்கோள் அறையும் தண்ணும்மை,"*

*"சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணும்மைக்கு"*

*என்னும் பாடலடிகளின் வழி அறியச் செய்கிறது.*

*இவற்றுடன் புறநானூறு (171:8) காளைக்குரிய பெயராக அடையாளப் படுத்தியுள்ளது நோக்கத்தக்கது.*

**சேயிதழ்**

*'சே' எனும் பெயரானது இதழுக்குரியதாக அகநானூறு ஓரிடத்தில் பதிவு செய்துள்ளது. அது,*

*"......................................... நறவின்*

*சேயிதழ் அனைய ஆகி ........................"*[39]

*என்ற பாடலடி வழி புலனாகிறது.*

*இதனுடன் புறநானூறு (397:19), சிறுபாணாற்றுப்படை (75) முறையே ஓரிடத்தில் சேயிதழ் என்று சுட்டியுள்ளது கவனித்தற்குரியது.*

**சேயரி**

*'சேயரி' (சிவந்த வரிபரந்த குளிர்ந்த கண்) என்று நற்றிணை 'மூன்று' இடங்களிலும், குறுந்தொகை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்திலும், அகநானூறு 'இரண்டு' இடங்களிலுமாக "ஆறு"*[40] *இடங்களில் குறித்துள்ளது. அவற்றை,*

*"பகழி அன்ன சேயரி மழைக்கண்,"*

*"கனங்குழைக்கு அமர்த்த சேயரி மழைக்கண்,"*

*"சேயரி பரந்த மா இதழ் மழைக்கண்,"*

*"சிறைபனி உடைத்த சேயரி மழைக்கண்,"*

"செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கண்,"

"எறிபடை கழீஇய சேயரி சில்நீர்"

என்ற பாடலடிகளின் வழி அறியலாகின்றது. மேலும், அகநானூறு சேயரி என் பதை நெல்லின் சிவந்த அரிகளைக் குறிப்பதனுக்கு எடுத்தாண்டுள்ளதை,

"செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்"[41]

எனும் அடியின் மூலம் தெளியலாகிறது. இவற்றுடன் மலைபடுகடாமும் (45) ஓரிடத்தில் சேயரி என்று சுட்டியுள்ளது குறிக்கத்தக்கது.

**சேயிலை (சிவந்த இலை)**

சேயிலை என்று குறுந்தொகையும் அகநானூறும் முறையே ஓரிடத்தில்எடு த்தாண்டு வேல்நுனியின்தன்மையைக்குறிப்பிட்டுள்ளது. அதனை,

"சேயிலை வெள்வேல் விடலையொடு,"[42]

"புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்"[43]

எனும் அடிகள் புலப்படுத்தி நிற்கின்றன.

**சேயிலை (சிவந்த அணிகலன்)**

சேயிழை என்பதனை நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை முறையே 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறுநூறு ஓரிடத்திலும், அகநானூறு 'மூன்று' இ டங்களிலுமாக "பத்து (10)"[44] இடங்களில் எடுத்தாண்டுள்ளதை,

"நாம் எனச் சொல்ல சேயிழை,"

"சென்மோ சேயிழை என்றனம் அதன் எதிர்,"

"சென்றனர் கொல்லோ சேயிழை நமரே,"

"வருமே சேயிழை அந்தில்,"

"சேயிழை மாதரை உள்ளி நோய்விட,"

"இனைய நீ செய்தது உதவாயாயின் சேயிழாய்,"

"சீர்ஆர் சேயிழை ஒலிப்ப ஓடும்,"

"சேயிழை தெளிர்ப்பக் கவைஇ நாளும்,"

*"சேயிழை மகளிர் ஆயமும் அயரா,"*

*"இரும்பல் கூந்தல் சேயிழை மடந்தை"*

*எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவற்றுடன், பதிற்றுப்பத்து (43:2, 65:10, 88:36), புறநானூறு (3:6, 105:1, 198:3) முறையே 'மூன்று' இடங்களில் சேயிழை (சிவந்த அணிகலனை) குறித்துள்ளது சுட்டத்தக்கதாகின்றது.*

**சேயிறா**

*இறால் மீனுக்கு 'சே' எனும் பெயர் உரியதென்பதனை நற்றிணை 'மூன்று' இடங்களிலும், ஐங்குறுநூறு, அகநானூறு முறையே 'இரண்டு' இடங்களிலுமாக "ஏழு"[45] இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவைகளாவன,*

*"சேயிறா எறிந்த சிறுவெண் காக்கை,"*

*"குளம்பினும் சேயிறா ஒடுங்கின,"*

*"பெருஞ்சேயிறவின் துய்த்தலை முடங்கல்,"*

*"இருங்கழிச் சேயிறா இனப்புள் ஆரும்,"*

*"தெண்கழிச் சேயிறாப் படூஉம்,"*

*"பெருங் கடற்பரப்பில் சேயிறா நடுங்க,"*

*"சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை"*

*என்ற பாடலடிகள் மூலம் அறிய முடிகின்றது.*

**சேவடி (சிவந்த பாதம்)**

*சேவடி என்று நற்றிணையில் 'மூன்று' இடங்களிலும், குறுந்தொகை, கலித்தொகை முறையே ஓரிடத்திலும், அகநானூற்றில் 'ஆறு' இடங்களிலும், பட்டினப் பாலையில் ஓரிடத்திலுமாக "பன்னிரண்டு (12)"[46] இடங்களில் குறிக்கப்பட்டுள்ளன. இதனை,*

*"மாநிலம் சேவடி ஆக தூநீர்,"*

*"நின்ஒளி எறியச் சேவடி ஒதுங்காய்,"*

*"சென்னிச் சேவடி சேர்த்தின்,"*

"தாமரை புரையும் காமர் சேவடி,"

"மாறுஇனி நின் ஆங்கே நின் சேவடி சிவப்ப,"

"நலம்மிகு சேவடி நிலம் வடுக்கொளாஅ,"

"மெல்லென் சேவடி மெலிய ஏக,"

"பொலந்தொடி தெளிர்ப்ப வீசி சேவடி,"

"பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி,"

"திருந்துகழல் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு,"

"ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரள,"

"சேவடி செறி குரங்கின்"

எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவற்றுடன், பதிற்றுப்பத்து (31:9) ஓரிடத்திலும், புறநானூறு (125:12, 387:18), பரிபாடல் (3:12, 3:19) முறையே 'இரண்டு' இடங்களிலும், திருமுருகாற்றுப்படை (62) ஓரிடத்திலும் 'சேவடி' என்பதனைக் குறித்து நிற்கின்றன. இவ்வாறாகச் 'சேவடி' 'பதினெட்டு (18)' இடங்களுள் இடம்பெற்றுள்ளது சுட்டத்தக்கதாகும்.

சங்க அக நூற்களுள் 'சே' என்பது காளைக்குரியதாக 'எட்டு' இடங்களிலும், சிவந்த இதழுக்கு ஓரிடத்திலும், சிவந்த கண் வரியைக் குறித்து 'ஆறு' இடங்களிலும், நெல்லின் சிவந்த அரிக்கு ஓரிடத்திலும், வேல்நுனிக்குரியதாக ( சிவந்த இலை) 'இரண்டு' இடங்களிலும், அணிகலனுக்குரியதாகப் 'பத்து (10)' இடங்களிலும், இறாமீனுக்குரியதாக 'ஏழு' இடங்களிலும், அடிக்குரியதாக (பாதம் ) 'பன்னிரண்டு (12)' இடங்களிலுமாக 'நாற்பத்தேழு (47)' இடங்களில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

'சே' என்பது காளையைக் குறித்து 'ஒன்பது' இடங்களிலும், இதழைக் குறித்து 'மூன்று' இடங்களிலும், கண்வரி குறித்து 'ஏழு' இடங்களிலும், நெல் அரி குறித்து ஓரிடத்திலும், வேல் நுனி குறித்து 'இரண்டு' இடங்களிலும், அணிகலன் குறித்து 'பதினாறு (16)' இடங்களிலும், இறால்மீன் குறித்து 'ஏழு' இடங்க

ளிலும், பாதம் குறித்துப் 'பதினெட்டு (18)' இடங்களிலுமாக 'அறுபத்து மூன்று (63)' இடங்களுள் பதிவாகியள்ளதை அறியமுடிகிறது.

**சேவல்**

மயிலல்லாத சிறகுடையவை அனைத்தும் 'சேவல்' எனும் ஆண்பாற்பெயரினைப் பெறுவனவாகும் என்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களுள் கோழி, காட்டுக்கோழி, சம்பங்கோழி, புறவு (புறா), அன்னம், பருந்து, கழுகு, குயில், குருவி, ஊர்க்குருவி, ஆந்தை, நீர்க்காக்கை, கூகை, குறும்பூழ், அன்றில், கொக்கு ஆகிய பறவையினங்களுக்குச் 'சேவல்' எனும் பெயர் எடுத்தாளப்பட்டிருப்பதனைப் பின்வரும் நிலைகளில் அறியமுடிகின்றது.

**கோழிச் சேவல்**

பறவையினங்களுள் ஒன்றான கோழி 'சேவல்' எனும் ஆண்பாற்பெயரைத் தாங்கி நிற்பதை நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய அக நூற்கள் வழி அறியமுடிகின்றது. நற்றிணை ஓரிடத்திலும், குறுந்தொகை 'இரண்டு' இடங்களிலும், அகநானூறு 'மூன்று' இடங்களிலுமாக "ஆறு"[47] இடங்களில் கோழிச் சேவல் இடம்பெற்றுள்ளதை,

"................................... சேவலொடு
சிலம்பின் போகிய சிதர்கால் வாரணம்,"
"சேவல் அம் கொடியோன் காப்ப,"
"குவிஇணர்த் தோன்றி ஒண்பூ அன்ன
தொகுசெந் நெற்றிக் கணம்கொள் சேவல்,"
"குடுமி நெற்றி நெடுமரச் சேவல்,"
"மனை உறை கோழி மறனுடைச் சேவல்,"
"நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்"

எனும் பாடலடிகள் தெளியச் செய்கின்றன. இவற்றுடன் புறநானூறு (326:6, 383:1) 'இரண்டு' இடங்களிலும், திருமுருகாற்றுப்படை (210), மலைபடுகடாம்

*(570) முறையே ஓரிடத்திலுமாக 'ஒன்பது' இடங்களில் கோழிச் சேவல் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.*

**காட்டுக்கோழிச் சேவல்**

*காட்டுக் கோழிக்குரிய பெயராக சேவல் இடம்பெற்றுள்ளதனை அகநூற்களுள் குறுந்தொகை மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது. இதனை,*

*"கானங்கோழிக் கவர் குரல் சேவல்"*[48]

*என்ற பாடலடி புலப்படுத்துகிறது. இத்துடன் புறநானூறு (28:8) ஓரிடத்தில் காட்டுக்கோழிச் சேவலைக் குறித்துள்ளது சுட்டத்தக்கதாகின்றது.*

**சம்பங்கோழிச் சேவல்**

*சங்க அக நூற்களுள் ஒன்றான ஐங்குறுநூறு மட்டும் ஓரிடத்தில் சம்பங்கோழிச் சேவலைக் குறிப்பிட்டுள்ளதனை,*

*"நீர் உறை கோழி நீலச் சேவல்"*[49]

*என்ற பாடலடி மெய்ப்பிக்கிறது. இதனுடன் மதுரைக்காஞ்சி (254) ஓரிடத்தில் இத்திறத்தைப் புலப்படுத்தி நிற்கிறது.*

**சேவற் புறவு**

*'சேவல்' பெயர் புறவிற்குரியதாக நற்றிணை 'நான்கு' இடங்களிலும் குறுந்தொகை ஓரிடத்திலும், அகநானூறு 'மூன்று' இடங்களிலுமாக "எட்டு"*[50] *இடங்களுள் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றை,*

*"வண்ணப் புறவின் செங்காற் சேவல்,"*

*"மனைஉறை புறவின் செங்காற் பேடைக்*
*காமர் துணையொடு சேவல் சேர,"*

*"கானப் புறவின் சேவல் வாய்நூல்,"*

*"பைம்புறப் புறவின் செங்காற் சேவல்,"*

*"இரைவேட்டு எழுந்த சேவல் உள்ளி,"*

"*குறுநடைப் புறவின் செங்காற் சேவல்,*"

"*மனைஉறை புறவின் செங்காற் சேவல்,*"

"*பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்*"

*எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன.*

*இவற்றுடன் பெரும்பாணாற்றுப்படை (439), நெடுநல்வாடை (45) முறையே ஓரிடத்தில் சேவற் புறவினை எடுத்துரைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.*

**அன்னச் சேவல்**

*அக நூற்களுள் கலித்தொகை மட்டும் அன்னச் சேவல் என்பதனை "இரண்டு"*[51] *இடங்களில் எடுத்தாண்டுள்ளது. அதனை,*

"*மணிநிற மலர்ப்பொய்கை மகிழந்துஆடும் அன்னம்தன்*

*அணி மிகு சேவலை அகல்அடை மறைத்தென,*"

"*அன்ன வான் சேவல் புணர்ச்சிபோல் ஒண்ணுதல்*"

*என்ற அடிகளில் காணலாம். இவற்றுடன் பரிபாடல் (3:25-26) ஓரிடத்திலும், புறநானூறு (67:1,1 ; 128:4) 'மூன்று' இடங்களிலும், மதுரைக்காஞ்சி (386) ஓரிடத்திலும் அன்னச் சேவலைக் குறித்துள்ளதை அறியமுடிகிறது.*

**பருந்துச் சேவல்**

*பருந்துச் சேவல் என்று நற்றிணை ஓரிடத்திலும், அகநானூறு 'எட்டு' இடங்களிலுமாக "ஒன்பது"*[52] *இடங்களில் பதிவு செய்திருக்கின்றன. அவற்றைப் பின்வரும் பாடலடிகளில் காணமுடிகிறது,*

"*எருவைச் சேவல் கிளைவயிற் பெயரும்,*"

"*வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்,*"

"*எருவைச் சேவல் கரிபு சிறை தீய,*"

"*எருவைச் சேவல் ஈண்டுகிளை பயிரும்,*"

"*கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்,*"

*“எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்,”*

*“வளைவாய்ப் பருந்தின் வள்உகிர்ச் சேவல்,”*

*“அத்த எருவைச் சேவல் சேர்ந்த,”*

*“எருவைச் சேவல் ஈண்டுக் கிளைத் தொழுதி”*

*இவற்றுடன் பதிற்றுப்பத்து (35:5, 36:9) ‘இரண்டு’ இடங்களிலும், மலைபடுக டாம் (147) ஓரிடத்திலும் எருவைச் சேவலைக் குறிப்பிட்டுள்ளது புலனாகிறது.*

**கழுகுச் சேவல்**

*கழுகுக்குரிய பெயரென்று சேவலை நற்றிணை ஓரிடத்தில் குறிப்பிடுகி ன்றது. அதை,*

*“அழல் போல் செவிய சேவல் ஆட்டி”*[53]

*என்ற அடியின் வழி தெளியமுடிகின்றது. இதனுடன் புறநானூறு (238:2) ஓரி டத்தில் கழுகுச் சேவலென்று சுட்டியுள்ளது. மேலும், பரிபாடலுள் (1:11, 3:18 , 3:60, 4:36, 4:37, 13:41) ‘ஆறு’ இடங்களில் குறித்துள்ளது நோக்குதற்குரியத ாகும்.*

**குயிற் சேவல்**

*குயில் ‘சேவல்’ பெயர் ஏற்றுள்ளதனை நற்றிணை மட்டும் ஓரிடத்தில் சு ட்டியுள்ளது. அதனை,*

*“சேவலொடு கெழீஇய செங்கண் இருங்குயில்”*[54]

*என்ற பாடலடி புலப்படுத்துகின்றது.*

**குருவிச் சேவல்**

*“உள் இறைக் குரீஇக் கார் அணற் சேவல்”*[55]

*என்ற அடியில் குருவிச் சேவல் என்று நற்றிணை குறிப்பிடுவதை அறியமுடிகி ன்றது.*

**ஊரக்குருவிச் சேவல்**

ஊர்க்குருவிக்குரிய பெயராக ‘சேவல்’ இடம்பெற்றுள்ளதை,

“உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்”[56]

என்ற பாடலடி வழி காணமுடிகின்றது. இதனுடன் புறநானூறும் (318:4) ஊர்க்குருவிச் சேவலினைச் சுட்டியுள்ளது.

**ஆந்தைச் சேவல்**

ஆந்தைக்குரிய பெயரென்று நற்றிணை, அகநானூறு முறையே ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளது. அதனை,

“................................ சேவலும்

நகைவாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்,”[57]

“உருத்து எழுகுரல குடிஞைச் சேவல்”[58]

என்ற அடிகளின் வழி தெளிய முடிகிறது. இவற்றுள் அகநானூறு பேராந்தைக் குரியதாகச் சுட்டியுள்ளது குறிக்கத்தக்கதாகும்.

**கூகைச் சேவல்**

கூகைச் சேவலென்று நற்றிணையும் அகநானூறும் “இரண்டு”[59] இடங்களில் குறிப்பிடுகின்றமையை,

“கூகைச் சேவல் குராலோடு ஏறி,”

“இல்எலி வல்சி வல்வாய்க் கூகை

.............................................

வளைக்கண் சேவல் வாளாது மடியின்”

எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன.

**நீர்க்காக்கைச் சேவல்**

“கடல்அம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்”[60]

எனும் அடியில் நீர்க்காக்கைக்குரிய ஆண்பாற்பெயராகச் சேவல் இடம்பெற்றுள்ளதனைக் காணமுடிகிறது.

**குறும்பூழ்ச் சேவல்**

*குறும்பூழ்ச் சேவல் என்று அகநூற்களுள் அகநானூறு மட்டும் "மூன்று"[61] இடங்களில் எடுத்துரைத்துள்ளது. அவற்றை,*

*"கருந்தாள் மிடற்ற செம்பூழ்ச் சேவல்,"*

*"காமர் சேவல் ஏமம் சேப்ப,"*

*"வரிப்புற இதலின் மணிக்கண் பேடை*

*..................................................*

*செங்கால் சேவல் பயிரும் ஆங்கண்"*

*என்கின்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இவற்றுடன் புறநானூறு (321:1) குறும்பூழ்ப் பறவைக்குரிய பெயராக 'சேவல்' எடுத்தாண்டுள்ளது சுட்டத்தக்கதாகும்.*

**அன்றில் சேவல்**

*'சேவல்' அன்றிலுக்குரிய பெயரென்று அகநானூறு ஓரிடத்தில்,*

*"சேவலொடு புணராச் சிறுகரும் பேடை"[62]*

*என்ற பாடலடியில் 'அன்றில்சேவல்' என்கிறது.*

**கொக்குச் சேவல்**

*"குடுமிக் கொக்கின் பைங்காற்பேடை*

*....................................................*

*....................................................*

*நுண் ஞாண் அவ்வலைச் சேவல்பட்டென,"[63]*

*"கூரல் கொக்கின் குறும்பறைச் சேவல்"[64]*

*என்ற பாடலடிகளில் சேவற்கொக்கு என்று அகநானூறு குறிப்பிட்டுள்ளதனை அறியமுடிகிறது. இவற்றுடன்,*

*"புன்புறப் பேடை சேவல் இன்புற"[65]*

*என்று ஐங்குறுநூற்றுள் பொதுப் பெயராகச் சேவல் குறிப்பிடப் பட்டுள்ளது சுட்டத்தக்கதாகின்றது.*

**யானையங்குருகுச் சேவல்**

யானையங்குருகுக்குரிய பெயரென்று 'சேவல்' சங்க அக நூற்களுள் இடம்பெறாத நிலையில் மதுரைக்காஞ்சி (674) மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது புலனாகின்றது.

**சேவற் வண்டு**

சங்க அகநூற்களில் வண்டுக்குரிய பெயரென்று குறிக்கப்பெறவில்லை. ஆயினும் சிறுபாணாற்றுப்படையில் (184) மட்டும் குறித்துள்ளது நோக்குதற்குரியது.

இவ்வாறாகச் சங்க அக நூற்களில் 'சேவல்' கோழிக்குரிய பெயராக 'ஆறு' இடங்களிலும், காட்டுக்கோழி, சம்பங்கோழி முறையே ஓரிடத்திலும், புறவிற்கு 'எட்டு' இடங்களிலும், அன்னத்திற்கு 'இரண்டு' இடங்களிலும், பருந்திற்கு 'ஒன்பது' இடங்களிலும், கழுகு, குயில், குருவி, ஊர்க்குருவி முறையே ஓரிடத்திலும், ஆந்தைக்கு 'இரண்டு' இடங்களிலும், நீர்க்காக்கைக்கு ஓரிடத்திலும், கூகைக்கு 'இரண்டு' இடங்களிலும், குறும்பூழ்க்கு 'மூன்று' இடங்களிலும், அன்றிலுக்கு ஓரிடத்திலும், கொக்கிற்கு 'இரண்டு' இடங்களிலும், பொதுப்பெயராக ஓரிடத்திலுமாக 'நாற்பத்து மூன்று (43)' இடங்களில் பதிவாகியுள்ளது குறிப்பிடத் தக்கதாகின்றது. இவற்றுடன் புறநூற்களில் 'பதினெட்டு (18)' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் '8' இடங்களிலுமாக 'அறுபத்தொன்பது (69)' இடங்களுள் சேவல் பெயர் காணக்கிடைக்கின்றது.

**இரலை**

'இரலை' எனும் ஆண்பாற்பெயர் புல்வாய் எனப்படும் மானிற்கு உரியதாக மரபியல் குறிப்பிடுகின்றது.

*சங்க அகநூற்களில் ஐங்குறுநூறு, குறிஞ்சிப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்கள் அனைத்தும் மானுக்குரிய பெயராகப் பதிவுசெய்துள்ளதினைப் பின்வரும் நிலையில் காணக் கிடைக்கின்றது.*

*இரலைப் பெயரினை நற்றிணை '4' இடங்களிலும், குறுந்தொகை '6' இடங்களிலும், கலித்தொகை ஓரிடத்திலும், அகநானூறு 'பதின்மூன்று (13)' இடங்களிலும், முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலுமாக " இருபத்தாறு (26)"[66] இடங்களுள் எடுத்தாளப்பட்டுள்ளதனை,*

*"மா எருத்து இரலை மடப்பிணை தழுவ,"*

*"அரலை அம் காட்டு இரலையொடு வதியும்,"*

*"தேடூஉ நின்ற இரலை,"*

*"மடப்பிணை தழீஇய மாஎருத்து இரலை,"*

*"வன்பரள் தெள்அறல் பருகிய இரலை,"*

*"இரலை மானையும் காண்பர்கொல் நமரே,"*

*"இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை,"*

*"மரற்புகா அருந்திய மாஎருத்து இரலை,"*

*"இரலை நன்மான் நெறிமுதல் உகளும்,"*

*"திரிமருப்பு இரலை அண்ணல்,"*

*"எருத்து வலிய எறுழ்நோக்கு இரலை,"*

*"பரல் அவல் அடைய இரலை தெறிப்ப,"*

*"திருமருப்பு இரலை புல்அருந்து உகள,"*

*"அண்ணல் இரலை அம்பிணை தழீஇ,"*

*"இருதிரி மருப்பின் அண்ணல் இரலை,"*

*"கருங்கோட்டு இரலைக் காமர் மடப்பிணை,"*

*"இரலை சேக்கும் பரல் உயர் பதுக்கை,"*

*"திரிமருப்பு இரலைய காடு இறந்தோரே,"*

*"வெண் புறக்கு உடைய திரிமருப்பு இரலை,"*

"திரிமருப்பு இரலை தெள்அறல் பருகி,"

"இரலை நன்மானினம் பரந்தவை போல்,"

"வலம்திரி மருப்பின் அண்ணல் இரலை,"

"திரிமருப்பு இரலை பைம்பயிர் உகள,"

"புன்கண் கொண்ட திரிமருப்பு இரலை,"

"திரிமருப்பு இரலையொடு மடமான் உகள,"

"அறுகோட்டு இரலையொடு மான்பிணை உகளவும்"

என்கின்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

இவற்றுடன் பதிற்றுப்பத்து (74:10), புறநானூறு (374:2) முறையே ஓரி டத்தில் இரலைப் பெயரைக் குறித்துள்ளன.

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களில் 'இருபத்தாறு (26)' இடங்களி லும் புற இலக்கியங்களில் 'இரண்டு' இடங்களிலுமாக 'இருபத்தெட்டு (28)' இடங்களுள் இரலைப்பெயர் பதியப்பட்டுள்ளன.

**கலை**

'கலை' எனும் ஆண்பாற்பெயர் 'புல்வாய்,' 'உழை' என்கின்ற மானினங்க ளுக்கும், 'முசு' என்ற குரங்கினத்திற்கும் உரியதாகச் சுட்டியுள்ளது மரபியல்.

சங்க அக இலக்கியங்களிலும் 'கலை' என்ற பெயர் மானுக்கும், குரங்கிற் கும் ஆகி நிற்கின்றது.

**ஆண் மான்**

ஆண் மானைக் குறிக்கும் முகமாக 'கலை' எனும் பெயர் நற்றிணையில் ' மூன்று' இடங்களிலும், குறுந்தொகையில் 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறு நூற்றில் ஓரிடத்திலும், கலித்தொகையில் 'இரண்டு' இடங்களிலும், அகநானூ

*ற்றில் 'பன்னிரண்டு (12)' இடங்களிலுமாக "இருபது (20)"[67] இடங்களில் இடம்பெற்றுள்ளது. அவற்றை,*

*"கலை ஒழி பிணையின் கலங்கி மாறி,"*

*"பல்மலர்க் கான்யாற்று உம்பர் கருங்கலை,"*

*"அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை,"*

*"கவைத்தலை முதுகலை காலின் ஒற்றிப்,"*

*"புன்கண் மடமான் நேர்பட தன்னையர்*
*சிலைமாண் கடுவிசைக் கலை நிறத்து அழுத்திக்,"*

*"புலி கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை*
*மான் பிணை அணை தர.............,"*

*"தன் நிழலைக் கொடுத்து அளிக்கும் கலை,"*

*"பல்கலை சில்பூங் கலிங்கத்தள் ஈங்கு இதுஓர்,"*

*"அமைக்கண் விடுநொடி கணக்கலை அகற்றும்,"*

*"கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு,"*

*"கள்ளி அம்காட்ட புள்ளிஅம் பொறிக்கலை,"*

*"கணக்கலை இகுக்கும் கறிஇவர் சிலம்பின்,"*

*"கலைபிணை விளிக்கும் கானத்து ஆங்கண்,"*

*"கலைமான் தலையின் முதல்முதற் கவர்த்த,"*

*"தெள் அறல் பருகிய திரிமருப்பு எழிற்கலை,"*

*"கெடுமான் இனநிரை தழிஇய கலை,"*

*"தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை,"*

*"காடுதேர் மடப்பிணை அலற கலை,"*

*"அறு கோட்டு எழிற்கலை அறுகயம் நோக்கி,"*

*"வறல்மரத்து அன்ன கவைமருப்பு எழிற்கலை"*

*என்னும் பாடலடிகள் வழி அறியமுடிகிறது. மேலும், புறநானூற்றில் (23:18, 152:3, 161:11, 166:11, 320:5, 320:7, 374:7) 'ஏழு' இடங்களிலும், மலைபடுக*

டாமில் (405) ஓரிடத்திலுமாக ‘இருபத்தெட்டு (28)’ இடங்களில் மான்கலை ( ஆண்மான்) பொதிந்திருப்பதை அறியமுடிகிறது.

**குரங்குக் கலை**

அகநூற்களில் நற்றிணை ‘2’ இடங்களிலும், குறுந்தொகை ‘6’ இடங்களிலும், அகநானூறு ‘4’ இடங்களிலுமாக “பன்னிரண்டு (12)”[68] இடங்களில் குரங்குகிற்குரிய பெயராகக் கலை குறிப்பிடப்பட்டுள்ளதை,

“இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்,”

“கலையொடு திளைக்கும் வரையக நாடன்,”

“கருங்கட் தாக்கலை பெரும்பிறிது உற்றென,”

“கலை தொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி,”

“மைப்பட்டன்ன மாமுக முசுக்கலை,”

“பலவின் இருஞ்சினைக் கலைபாய்ந்து உகளினும்,”

“கலை கை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்,”

“பலவில் சேர்ந்த பழம்ஆர் இனக்கலை,”

“ஆய்சுளைப் பலவின் மேய்கலை உதிர்த்த,”

“கலை பாய்ந்து உகளும் கல்சேர் வேங்கை,”

“அதிர்குரல் முதுகலை கறிமுறி முனைஇ,”

“மேக்குஎழு பெருஞ்சினை ஏறி கணக்கலை”

என்கின்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவைகளுடன் புறநானூறு (116: 11, 116:12, 236:1) ‘மூன்று’ இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி முறையே ஓரிடத்திலும், மலைபடுகடாமில் ‘இரண்டு’ இடங்களிலுமாக ‘பத்தொன்பது (19)’ இடங்களுள் ஆண்குரங்கு என்று குறிக்க ‘கலை’ எடுத்தாளப் பட்டிருப்பது சுட்டத்தக்கது.

இவ்வாறு மானுக்குரிய பெயராக ‘இருபத்தெட்டு (28)’ இடங்களிலும், குரங்கிற்குரிய பெயராக ‘பத்தொனபது (19)’ இடங்களிலுமாக ‘நாற்பத்தேழு ( 47)’ இடங்களுள் ‘கலை’ என்ற ஆண்பாற்பெயர் பதிவாகியுள்ளது.

**மோத்தை**

‘மோத்தை’ எனும் ஆண்பாற்பெயர் ஆட்டிற்குரிய பெயராக மரபியல் குறித்துள்ளது. சங்க அக இலக்கியங்களுள் இம்மோத்தை எனும் பெயர் எங்கும் சுட்டப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தகர் (ஆட்டுக்கிடாய்)**

ஆட்டிற்குரிய பெயராக, ‘தகர்’ குறிக்கத்தக்கது என்று மரபியல் குறிப்பிடுகின்றது. சங்க அக இலக்கியங்களுள் ஐங்குறுநூற்றில் ஓரிடத்திலும், அகநானூற்றில்‘இரண்டு’ இடங்களிலும், பட்டினப்பாலையில்‘இரண்டு’ இடங்களிலுமாக “ஐந்து”[6][9] இடங்களில் ஆட்டிற்குரிய பெயராக அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. அவற்றை,

“வார் கோட்டு வயத்தகர் வாராது மாறினும்,”

“தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு சுரிந்த,”

“வேறு வேறு இனத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற்று இளந்தகர்ப் பாடுவிறந்து அயல,”

“மேழகத் தகரொடு சிவல் விளையாட,”

“ஏழகத் தகரோடு உகளும் முன்றில்”

எனும் அடிகளில் காணக்கிடைக்கின்றது. இவற்றுள் அகநானூறு வருடை (மலையாடு) எனும் விலங்கிற்குரியதாகச் சுட்டியிருப்பது குறிக்கத்தக்கதாகின்றது.

இவற்றுடன் ஆற்றுப்படை நூற்களிலும் ஆட்டிற்குரிய பெயராக பெரும்பாணாற்றுப்படை (326) ஓரிடத்திலும், மலைபடுகடாம் (414, 503) ‘இரண்டு’ இடங்களிலும் எடுத்துரைத்துள்ளன. மேலும், பெரும்பாணாற்றுப்படை (87) பு

*துமையாக 'மேடு' என்பதைக் குறித்ததாகத் தகரை அடையாளப்படுத்தியுள்ள து சுட்டத்தக்கதாகும்.*

*இவ்வாறு 'தகர்' எனும் பெயர் ஆட்டிற்கு 'எட்டு' இடங்களிலும், முகட்டிற்கு ஓரிடத்திலுமாக 'ஒன்பது' இடங்களில் பதிவுசெய்யப் பட்டுள்ளது குறிக்கத்தக்கது.*

**உதள் (ஆட்டுக்கிடாய்)**

*மரபியல், 'உதள்' என்ற பெயரையும் ஆட்டுக்குரியதாகக் குறிப்பிட்டுள்ளது. இப்பெயரானது சங்க அக இலக்கியங்களுள் பதிவு செய்யப்படவில்லை என்பது சுட்டத்தக்கதாகும். ஆனால் ஆற்றுப்படை நூற்களில் பெரும்பாணாற்றுப்படை (151) மட்டும் ஓரிடத்தில் எடுத்தியம்பியிருப்பது அறியத்தக்கதாகின்றது.*

**அப்பர்**

*'அப்பர்' என்னும் பெயரும் ஆட்டுக்குரியதாக மரபியல் விளம்பியுள்ளது. இப்பெயர் சங்க அக இலக்கியங்களுள் எடுத்தாளப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.*

**போத்து**

*மரபியல் பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய் ஆகிய விலங்கினங்களுக்கும்; சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை ஆகிய நீர்வாழ்வனவற்றிற்கும்; மயில், எழால் (வல்லூறு) முதலான பறவையினங்களுக்கும் 'போத்து' எனும் ஆண்பாற்பெயர் உரியதாக அடையாளப்படுத்தியுள்ளது.*

*சங்க அக இலக்கியங்களுள் 'போத்து' என்ற பெயர் புலி, எருமை, முதலை, வரால், வாளை, நீர்நாய், ஒந்தி ஆகியவற்றிற்கு எடுத்தாளப் பட்டுள்ளதைப் பின்வரும் நிலைகளில் அறியக்கிடைக்கின்றன.*

**புலிப் போத்து**

*சங்க அக நூற்களில் அகநானூறு மட்டும் புலிக்குரிய பெயராகப் போத்தினை "இரண்டு"[70] இடங்களில் குறித்துள்ளது. அவை,*

*"பனை மருள் எருத்தின் பல்வரி இரும்போத்து,"*

*"குயவரி இரும்போத்துப் பொருத புண் கூர்ந்து"*

*என்ற பாடலடிகளில் புலப்படுகின்றது. இவற்றுடன் புறநானூறு (157:12), பெரும்பாணாற்றுப்படை (138) முறையே ஓரிடத்தில் புலிக்குரிய பெயரென்று சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.*

**எருமைப் போத்து**

*எருமைக்குரியதாக 'போத்து' எனும் பெயரினை நற்றிணை, ஐங்குறுநூறு , அகநானூறு முறையே ஓரிடத்திலுமாக "மூன்று"[71] இடங்களில் எடுத்துரைத்துள்ளது. இதனை,*

*"தடமருப்பு எருமைப் பிணர் சுவல்இரும் போத்து,"*

*"நெறிமருப்பு எருமை நீல இரும் போத்து,"*

*"ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்து"*

*என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது.*

**முதலைப் போத்து**

*நீர்வாழ் சாதியுள் ஒன்றான முதலைக்குரிய பெயரென்று ஐங்குறுநூற்றில் மட்டும் ஓரிடத்தில் பதிவு செய்துள்ளதை,*

*"முதலைப் போத்து முழுமீன் ஆரும்"[72]*

*என்ற பாடலடி மூலம் அறியலாகின்றது.*

**வரால் போத்து**

*"பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்து"[73]*

*எனும் பாடலடியில் நீர்வாழ் உயிரினமாகிய வரால்மீனுக்குரிய பெயராக அகநானூறு மட்டும் ஓரிடத்தில் புலப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.*

**வாளைப் போத்து**

"வாளை வெண்போத்து உணீஇய"[74]

என்ற பாடலடியில் நீரின்கண் வாழும் வாளைமீனுக்குரிய பெயரென்று 'போத்து' சுட்டப்பட்டிருப்பது அகநானூற்றில் காணக் கிடைக்கின்றது.

**நீர்நாய் போத்து**

மரபியலின் வரையறைக்கு அப்பாற்பட்டு அகநானூறு நீரில் வாழ்கின்றநாய்க்குரிய (நீர்நாய்) பெயரென்று அடையாளப்படுத்தியுள்ளது. அதனை,

"பொய்கை நீர்நாய்ப் புலவுநாறு இரும்போத்து"[75]

என்ற பாடலடி மூலம் புலனாகின்றது.

**ஓந்திப் போத்து**

மரபியலுள் வகுத்துரைக்கப் பெறாத உயிரினமான 'ஓந்தி' போத்து என்கின்ற பெயரினைப் பெறுவதாக நற்றிணையும் குறுந்தொகையும் அடையாளப் படுத்தி நிற்கின்றன. இதனை,

"வேனில் ஓதி நிறம்பெயர் முதுபோத்து,"[76]

"வேதின வெரிநின் ஓதி முதுபோத்து"[77]

என்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன.

இவற்றுடன் மரபியலும் சங்க அக நூற்களும் ஆட்டிற்குரிய பெயராகக் குறிப்பிடாத நிலையில் புறநானூறு (364:4) மட்டும் புதுமைப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறாகச் சங்க அக நூற்களுள் போத்துப்பெயர், புலிக்குரியதாக 'இரண்டு' இடங்களிலும், எருமைக்குரியதாக 'மூன்று' இடங்களிலும், முதலை, வரால், வாளை, நீர்நாய் முறையே ஓரிடத்திலும், ஓந்திக்குரியதாக இரண்டிடங்களுமென்று 'பதினொரு (11)' இடங்களில் இடம்பெற்றுள்ளது. இவைகளுடன் புறநூற்களில் 'இரண்டு' இடங்களி

லும், ஆற்றுப்படையுள் ஓரிடத்திலுமாக ‘பதினான்கு (14)’ இடங்களில் போத்துப் பெயரினைக் காணமுடிகின்றது.

**கண்டி**

‘கண்டி’ எனும் பெயரினை மரபியலுள் தொகுத்தவற்றுள் மட்டுமே காணமுடிகின்றது. வகுத்துரைக்கப் பெற்றனவற்றுள் இடம்பெறாத நிலையில், சிறப்பு வழக்காக வகுக்கப்பெற்றனவற்றுள் எருமைக்குரிய பெயராகக் குறிப்பிடுகின்றது மரபியல்.

சங்க அக இலக்கியங்களுள் ‘கண்டி’ என்ற பெயர் பதிவுசெய்யப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ‘கண்டி’ என்பதனைப் பதிற்றுப்பத்து மட்டும் ஓரிடத்தில் கணுக்களைக் (கணுக்களையுடைய கோல்) குறிப்பதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளதனை,

“கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்” (பதிற்றுப்.43:27)

என்ற பாடலடி புலப்படுத்தி நிற்கின்றது.

**கடுவன்**

மரபியலுள், ‘கடுவன்’ எனும் ஆண்பாற்பெயர் தொகுத்தவற்றுள் இடம் பெற்று; வகுத்தனவற்றுள் இடம்பெறாது; சிறப்பு வழக்கினைக் குறிக்கின்ற நிலையில் குரங்கிற்குரிய பெயராக வகுக்கப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

சங்க அக இலக்கியங்களில் குரங்கிற்குரிய பெயரென்று நற்றிணை ‘மூன்று’ இடங்களிலும், குறுந்தொகை ‘இரண்டு’ இடங்களிலும், ஐங்குறுநூறு ஐந்திடங்களிலும், கலித்தொகை ஓரிடத்திலும், அகநானூறு மூன்றிடங்களிலுமாக “பதினான்கு (14)”[78] இடங்களில் குறிக்கப்பட்டுள்ளன. இதனை,

“கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி,”

“............................................ கடுவன்

முறிஆர் பெருங்கிளை அறிதல் அஞ்சி,"

"கல்லாக் கடுவன் நடுங்க முள் எயிற்று,"

"கடுவனும் அறியும் அக்கொடியோனையே,"

"............................................. கடுவன்

ஊழுறு தீம்கனி உதிர்ப்பக்கீழ் இருந்து,"

"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்,"

"குரங்கின் தலைவன் குருமயிர்க் கடுவன்,"

"மந்திக் காதலன் முறிமேய் கடுவன்,"

"கல்லா மந்தி கடுவனொடு உகளும்,"

"கடுவனும் அறியாக் காடு இறந்தோளே,"

"கல்லாக் கடுவன் கணம்மலி சுற்றத்து,"

"அறியாது உண்ட கடுவன் அயலது,"

"பல்கிளைத் தலைவன் கலலாக் கடுவன்,"

"கல்லா மந்தி கடுவனோடு உகளும்"

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. மேலும், புறநானூற்றில் (158:23, 200: 2) இரண்டிடங்களிலும், மலைபடுகடாமில் (237) ஓரிடத்திலும் இக்கடுவன் எனும் பெயரினைக் காணமுடிகிறது.

இவ்வாறாகக் கடுவன் என்ற பெயரினை எட்டுத்தொகை அகநூற்கள்மட்டும் 'பதினான்கு (14)' இடங்களில் எடுத்தியம்பியுள்ளது குறிக்கத்தக்கதுடன்; புறநூற்களில் இரண்டிடங்களிலும், ஆற்றுப்படையுள் ஓரிடத்திலுமாக 'பதினேழு (17)' இடங்களில் 'கடுவன்' பெயர் பதிவாகியிருக்கின்றது.

**ஆண்**

'ஆண்பால் எல்லாம் ஆண்' (தொல்.மரபி.51:1) என்று ஆண்பாற் பெயர்களுக்கு முடிபு கூறியுள்ளது மரபியல்.

*சங்க அக நூற்களில் உயர்திணைக்கும், பறவை, மான் ஆகிய அஃறிணைக்கும் 'ஆண்' என்ற பெயர் குறிக்கப்பட்டுள்ளது.*

**உயர்திணை**

*உயர்திணைக்குரிய பெயராக, எட்டுத்தொகை அக நூற்களில் குறுந்தொகை விடுத்து ஏனைய நூற்களுள் "ஒன்பது"*[79] *இடங்களில் ஆண் என்ற பெயர் பதிவுசெய்யப்பட்டுள்ளது. அவற்றைப் பின்வரும் பாடலடிகள் வழித் தெளிய முடிகின்றது,*

*"காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்,"*
*"ஆண்தகை விறலி வேள் அல்லன்,"*
*"ஆண்எழில் அண்ணலோடு அருஞ்சுரம் முன்னிய,"*
*"அன்னான் ஒருவன்தன் ஆண் தகை விட்டு,"*
*"ஆண்எழில் முற்றி உடைத்து உள் அழிதரும்,"*
*"வில் அலைந்து உண்ணும் வல்ஆண் வாழ்க்கை,"*
*"வல் ஆண் பதுக்கைக் கடவுள் பேண்மார்,"*
*"வல்ஆண் அருமுனை நீத்தி அல்லாந்து,"*
*"ஆடூஉச் சென்னித் தகைப்ப."*

*இவற்றுள் அகநானூறு ஓரிடத்தில் 'ஆண்' என்னும் பெயரினைக் குறிக்கும் பொருட்டாக 'ஆடூஉ' என்று இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.*

*இவற்றுடன் சங்க புறநூற்களான பதிற்றுப்பத்து (31:14, 67:10, 86:4) 'மூன்று' இடங்களிலும், புறநானூறு (179:9, 201:14, 292:8, 346:3) 'நான்கு' இடங்களிலும், மதுரைக்காஞ்சி (29) ஓரிடத்திலும், ஆற்றுப்படையுள் சிறுபாணாற்றுப்படை (29) மட்டும் ஓரிடத்திலுமாக 'பதினெட்டு (18)' இடங்களில் உயர்திணை குறித்து 'ஆண்' எனும் பெயர் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.*

**ஆண் பறவை**

"கோளுடை நெடுஞ்சினை ஆண்குரல் விளிப்பின்"[80]

என்ற அடியில் நற்றிணை பறவைக்குரிய பெயராக 'ஆண்' என்பதை எடுத்தா ண்டுள்ளது குறிக்கத்தக்கது.

**ஆண்மான்**

'ஆண்' என் பெயரினை மானுக்குரியதென்று ஐங்குறுநூறும் அகநானூறு ம் "ஐந்து"[81] இடங்களில் குறிப்பிட்டுள்ளன. இதனை,

"மான் பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்,"

"அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்,"

"கெடுமான் இனநிரை தழீஇய கலையே
கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்கும்,"

"ஆண்குரல் விளிக்கும் சேண்பால் வியன்சுரை,"

"அலந்தலை மூதேறு ஆண்குரல் விளிப்ப"

என்ற அடிகள் அறியச் செய்கின்றன.

இவ்வாறாக 'ஆண்' எனும் பெயரினை, உயர்திணைக்குரியதாகப் 'பதி னெட்டு (18)' இடங்களிலும், பறவைக்குரியதாக ஓரிடத்திலும், மானுக்குரியதா க 'ஐந்து' இடங்களிலுமாக 'இருபத்தினான்கு (24)' இடங்களில் எடுத்தாளப்ப ட்டுள்ளமை சுட்டத்தக்கதாகும்.

தொல்காப்பிய மரபியல் சுட்டும் ஏழு சிறப்பு வழக்குப் பெயர்களில் கடு வன், கோட்டான், பூசை, சேவல், ஏனம், கண்டியின் பதிவுகள் மட்டும் இடம் பெற்றுள்ளன. இவற்றில் ஆய்வுக்கு உட்பட்ட சங்க அக இலக்கியங்களில் கடு வன் குறித்த பதிவுகள் குரங்கின் ஆண்பாற் பெயரினைக் குறிப்பதாக ஏற்கனே வ விளக்கப்பட்டுள்ளது.

சேவல் குறித்த பதிவுகள் பறவைகளின் ஆண்பாற்பெயராக எடுத்தாண்டு , ஆண் குதிரைக்குரிய பெயராகச் சுட்டப்படாதது நோக்கத்தக்கது.

இவ்வாறாக மரபியலுள் வகுக்கப் பெற்ற ஆண்பாற்பெயர்களை விடுத்து , ‘ஏற்று, களிற்று, காளை, பகடு, பகட்டு, வல்லியம், போகில், ஓரி, உழை, விடை, மா, உம்பல் ஆகியவை உயர்திணை, அஃறிணைக்குரியவைகளாகவும்; அகன்றோர், அகுதை, அஞ்சி, அண்டர், அண்டிரன், அதிகன், அந்தணன், அரசன், அரைசர், அருமன், அவினி, அவுணன், அறவன், அறவோன், அறனிலாளன், அறியான், அறிவான், அன்பினன், அன்னிமிஞிலி, ஆஅய், ஆடவர், ஆட்டனத்தி, ஆண்மை, ஆதன், ஆதிரையான், இடையன், உதியஞ்சேரல், உதியன், உமணன், உலையன், உழவன், ஊமன், ஊரன், எயினன், எவ்வி, எழினி, ஏதிலாளன், ஐயர், ஐயன், ஓரி, கங்கன், கடவன், கட்டி, கணவன், கண்ணியன், கம்மியன், கரிகால்வளவன், கள்வன், காமன், காரி, காலன், கானகநாடன், கிழவோன், கிழவன், கிள்ளிவளவன், குடவர், குட்டுவன், குயவன், குரிசில், குருடன், குழும்பன், குழையன், குன்றநாடன், கொங்கன், கொடியன், கொல்லன், கோமான், கோவலர்,சாரல்நாடன், சிலம்பன், சுறாக்கொடியன், செம்பியன், செழியன், சென்னி (சோழன்), சேணோன், சேந்தன், சேரலாதன், சேர்ப்பன், தச்சன், தாரன், திதியன், தித்தன் வெளியன், திருமா, துறைவன், தென்னவன், தேரோன், தொடியன், நள்ளி, நன்னன், நாடன், பசும்பூண்பாண்டியன், பரதவர், பழையன், பாகன், பாணன், பாரி, பார்ப்பனன், பார்ப்பான், பிட்டன், பிண்டன், புலம்பன், பூழியன், பெரியன், பேகன், பொதுவன், பொருநன், பொருப்பன், பொறையன், மகிழ்நன், மடவோன், மத்தி, மருத்துவன், மலைநாடன், மலையன், மல்லன், மள்ளன், மறவன், மன்னன், மிஞிலி, முக்கண்ணன், முடியன், முருகு, மூவன் போன்ற பெயர்களும் உயர்திணை ஆண்பாற்குரியவையென்று சங்க அக இலக்கியங்களுள் குறிக்கப்பட்டுள்ளன.

**தொகுப்புரை**

♦ மரபியலில் பெயர் மரபுகளுக்குத் தனிச்சிறப்பிடம் தந்துள்ள தொல்காப்பிய ர் ஆண்பாற்பெயர்களை இரண்டாவதாகத் தொகுத்துள்ளார்.

♦ அஃறிணைகளில் எருது, ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் ஆகியன ஆண்பாற்பெயர்களாக வரையறுக்கப்பட்டுள்ளன.

♦ நிகண்டுகளும் உயர்தரக் கட்டுரை இலக்கணமும் ஆண்பாற் பெயர்களைமரபி யல்அடிப்படையிலும், சமகாலவழக்குமுறைகளிலும் விளம்பியுள்ளன.

♦ எருது எனும் ஆண்பாற்பெயர் தொகுத்தவற்றுள் மட்டும் இடம்பெற்று, வகுத் தனவற்றுள் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கதாகும்.

♦ சங்க அகநூற்களுள் 'எருது' எனும் பெயர் நற்றிணையில் 'இரண்டு' இடங்க ளிலும், அகநானூற்றில் ஓரிடத்திலுமாக 'மூன்று' இடங்களில் காளைமாட் டிற்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

♦ மரபியலுள் 'ஏறு' என்பது மானினங்கள், பன்றி, எருமை, மரை, ஆ, பெற்றம், சுறாமீன் ஆகியவற்றிற்குரிய பெயராக வகுத்துரைக்கப் பட்டுள்ளது.

♦ சங்க அக இலக்கியங்களுள் மாடு, மரை, மான், சுறவு ஆகியவற்றிற்கும், மரபியல் வகுக்காத இடி, எழால் (பறவையினம்) ஆகியவையும் ஏறு பெயருக்குரியன வாக இடம்பெற்றிருப்பது கவனித்தற்குரியது.

♦ ஏறு எனும் பெயர் சங்க அக நூற்களில் மாட்டிற்குரியதாக 'நாற்பத்தேழு (47 )' இடங்களிலும், மானுக்குரியதாக 'பன்னிரண்டு (12)' இடங்களிலும், மை ரக்குரியதாக 'மூன்று' இடங்களிலும், சுறாமீன், சிங்கம், குறும்பூழ் பறவை மு

றையே ஓரிடத்திலும், இடிக்குரியதாக 'பதினைந்து (15)' இடங்களிலுமாக 'எண்பது (80)' இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

♦ தொல்காப்பியத்தில் 'ஏற்றை' எனும் ஆண்பாற்பெயர் ஆற்றல்மிக்க வலிமை வாய்ந்த ஆணினங்கள் அனைத்திற்கும் இப்பெயர் உரியதாக வகுக்கப்பட்டுள்ளது.

♦ சங்க அக நூற்களில் பன்றி, முள்ளம்பன்றி, காளைமாடு, குரங்கு, நாய், செந்நாய், புலி, கரடி, இறாமீன், முதலை, வெள்ளெலி, காட்டுப்பூனை, சங்கு, நரி, கழுதை ஆகிய உயிரினங்கள் ஏற்றை எனும் பெயரினைப் பெறுவன என்று எட்டுத்தொகை அக நூற்களுள் மட்டும் இடம்பெற்றிருப்பது குறிக்கத்தக்கது.

♦ ஏற்றைப்பெயர் புலிக்குரியதாக 'பதினொரு (11)' இடங்களிலும், கரடிக்குரியதாக 'ஏழு' இடங்களிலும், செந்நாய்க்குரியதாக 'ஐந்து' இடங்களிலும், மாட்டுக்குரியதாக 'இரண்டு' இடங்களிலும், முள்ளம்பன்றி, பன்றி, முதலை, குரங்கு, நாய், வெள்ளெலி, வெருகு, சங்கு, நரி, கழுதை, இறால், உயர்திணை முறையே ஓரிடத்திலுமாக 'முப்பத்தேழு (37)' இடங்களில் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகின்றது.

♦ ஒருத்தல் என்ற பெயர் புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம், யானை, பன்றி, எருமை ஆகிய உயிரினங்களுக்குரியதாக மரபியலில் வகுக்கப்பெற்றுள்ளது.

♦ சங்க அக நூற்களுள் யானை, பன்றி, மான், யாளி முதலானவற்றிற்குரிய பெயராகப் பதிவு செய்துள்ளது. இவற்றுள் 'யாளி' எனும் விலங்கு மரபியலுள் வகுக்கப்படாதது நோக்குதற்குரியது.

♦ யானைக்குரியதாக ‘பதினேழு (17)’ இடங்களிலும் பன்றிக்குரியதாக ‘ஐந்து’ இடங்களிலும், மான், யாளி முறையே ஓரிடத்திலுமாக ‘இருபத்தினான்கு (2 4)’ இடங்களில் ஒருத்தல் பெயரினைக் காணமுடிகின்றது.

♦ ஆண்பாற்பெயர்களுள் ‘களிறு’ யானை, பன்றி ஆகியவற்றிற்குரிய பெயரெ ன்று மரபியல் அடையாளப்படுத்தியுள்ளது.

♦ சங்க அக நூற்களுள் முல்லைப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்களில் இப்பெ யர் பதிவாகியுள்ளது. யானைக்குரிய பெயராக நற்றிணையில் ‘இருபத்தெட் டு (28)’ இடங்களிலும், குறுந்தொகையில் ‘பத்து (10)’ இடங்களிலும், ஐங்கு றுநூற்றில் ‘மூன்று’ இடங்களிலும், கலித்தொகையில் ‘பதினைந்து (15)’ இட ங்களிலும், அகநானூற்றில் ‘நாற்பத்தொரு (41)’ இடங்களிலும், குறிஞ்சிப்பாட்டு , பட்டினப்பாலை முறையே ‘இரண்டு’ இடங்களிலுமாக ‘நூற்றியொரு (101)’ இடங்களில் இடம்பெற்றுள்ளன.

♦ பன்றிக்குரிய பெயராக ‘களிறு’ என்பதனை அகநானூறு மட்டும் ஓரிடத்தில் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

♦ மரபியலில் ‘சே’ என்னும் ஆண்பாற்பெயர் தொகுத்தவற்றில் மட்டும் இடம் பெற்று; வகுத்தவற்றில் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கது.

♦ சங்கஅக இலக்கியங்களில் ‘சே, சேயிறா, சேயிதழ், சேயரி, சேயிலை, சேயிழை, சேவடி’ போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன. ‘சே’ எனும் பெயர் காளைக் குரியதாக ‘எட்டு’ இடங்களிலும், இறாமீனுக்குரியதாக ‘ஏழு’ இடங்களிலும், சி வந்த இதழுக்கு ஓரிடத்திலும், சிவந்த கண் வரியைக் குறித்து ‘ஆறு’ இடங்க ளிலும், நெல்லின் சிவந்த அரிக்கு ஓரிடத்திலும், வேல் நுனிக்குரியதாக ‘இர ண்டு’ இடங்களிலும், அணிகலனுக்குரியதாக ‘பத்து (10)’ இடங்களிலும், அ

டிக்குரியதாக ‘பன்னிரண்டு (12)’ இடங்களிலுமாக ‘நாற்பத்தேழு (47)’ இட ங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

- மயிலல்லாத சிறகுடைய அனைத்தும் ‘சேவல்’ எனும் ஆண்பாற் பெயரினை ப் பெறுவனவாகும் என்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களுள் கோழி, காட்டுக்கோழி, சம்பங்கோழி, புறவு, அன்னம், பருந்து, கழுகு, குயில், குருவி, ஊர்க்குருவி, ஆந்தை, நீர்க்காக்கை, கூகை, குறும்பூழ், அன்றில், கொக்கு ஆகிய பறவையினங்களுக்குரிய பெயராக பயின்று வந்துள்ளது.

- சேவல் கோழிக்குரிய பெயராக ஆறிடங்களிலும், புறவிற்கு ‘எட்டு’ இடங்களிலும், அன்னம், ஆந்தை, கூகை, கொக்கு முறையே ‘இரண்டு’ இடங்களிலும், பருந்திற்கு ‘ஒன்பது’ இடங்களிலும், காட்டுக்கோழி, சம்பங்கோழி, கழுகு , குயில், குருவி, ஊர்க்குருவி, நீர்க்காக்கை, அன்றில் முறையே ஓரிடத்திலும், குறும்பூழுக்கு மூன்றிடங்களிலும், பொதுப்பெயரென்று ஓரிடத்திலுமாக ‘நாற்பத்திமூன்று (43)’ இடங்களில் பதிவாகியுள்ளது.

- இரலை என்னும் ஆண்பாற்பெயர் புல்வாய் எனப்படும் மானிற்குரியதாக அடையாளப்படுத்தியுள்ளது, மரபியல். சங்க அக நூற்களில் ஐங்குறுநூறு, குறிஞ்சிப்பாட்டு தவிர்த்து ஏனைய நூற்களில் இப்பெயர் மானுக்குரியதாக பதிவு செய்யப்பட்டுள்ளது. நற்றிணையில் ‘நான்கு’ இடங்களிலும், குறுந்தொகை ‘ஆறு’ இடங்களிலும், அகநானூறு ‘பதின்மூன்று (13)’ இடங்களிலும், கலித்தொகை, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலுமாக ‘இருபத்தாறு (26)’ இடங்களில் இரலைப்பெயர் எடுத்தாளப்பட்டுள்ளது.

- கலை எனும் ஆண்பாற்பெயர் புல்வாய், உழை என்கின்ற மானினங்களுக்கும் ‘முசு’ எனும் குரங்கினத்திற்கும் உரியதாக மரபியல் சுட்டியுள்ளது. கலைப்பெயர் மானுக்குரியதாக நற்றிணை ‘மூன்று’ இடங்களிலும், குறுந்தொகை, கலித்தொகை முறையே ‘இரண்டு’ இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ஓரிடத்தி

லும், அகநானூற்றில் ‘பன்னிரண்டு (12)’ இடங்களிலுமாக, ‘இருபது (20)’ இடங்களில் விளம்பப்பட்டுள்ளது. முசு குரங்கிற்குரியதாக நற்றிணை, குறுந்தொகை முறையே ஓரிடத்தில் குறித்துள்ளதுடன், நற்றிணையில் ஓரிடத்திலும், குறுந்தொகை ‘ஐந்து’ இடங்களிலும், அகநானூற்றில் ‘நான்கு’ இடங்களிலும் குரங்கிற்குரிய பெயராக அடையாளப் படுத்தப்பட்டுள்ளன.

♦ மோத்தை, உதள், அப்பர் ஆகிய பெயர்கள் ஆட்டுக்குரியதாக மரபியலில் குறிக்கப்பட்டபோதும், சங்க அக இலக்கியங்களுள் இப்பெயர்கள் எடுத்தாளப்படாதது குறிப்பிடத்தக்கதாகும்.

♦ தகர் எனும் பெயர் ஆட்டுக்குரியதாக வகுத்துள்ளது மரபியல். சங்க அக இலக்கியங்களுள் ஐங்குறுநூற்றில் ஓரிடத்திலும், அகநானூறு, பட்டினப்பாலை முறையே ‘இரண்டு’ இடங்களிலுமாக ஐந்திடங்களில் ஆட்டுக்குரிய பெயராகப் பயின்று வந்துள்ளதைக் காணமுடிகின்றது.

♦ மரபியல் பெற்றம், எருமை, மரை, புலி, புல்வாய் ஆகிய விலங்கினங்களுக்கும்; இடங்கர், கராம், வரால், வாளை முதலான நீர்வாழ்வனவற்றிற்கும்; மயில், எழால் (வல்லூறு) ஆகிய பறவையினங்களுக்கும் ‘போத்து’ பெயர் குறிக்கப்பெறுவன என்கிறது.

♦ சங்க அக நூற்களுள் ‘போத்து’ என்ற பெயர் புலி, எருமை, முதலை, வரால், வாளை, நீர்நாய், ஓந்தி முதலானவற்றிற்கு எடுத்தாளப்பட்டுள்ளது. இவற்றில் நீர்நாய், ஓந்தி ஆகியன மரபியல் விளம்பாப் பெயர்கள் என்பது கவனித்தற்குரியதாகும்.

♦ சங்க அக இலக்கியங்களில் போத்துப் பெயர் புலிக்குரியதாக ‘இரண்டு’ இடங்களிலும், எருமைக்குரியதாக ‘மூன்று’ இடங்களிலும், முதலை, வரால், வாளை, நீர்நாய் முறையே ஓரிடத்திலும், ஓந்திக்குரியதாக இரண்டிடங்களிலுமாக ‘பதினொரு (11)’ இடங்களில் இடம்பெற்றுள்ளன.

♦ கண்டி எனும் பெயர் மரபியலுள் தொகுத்தவற்றுள் மட்டுமே காணமுடிகின்றது. வகுத்துரைக்கப்பட்டவற்றுள் இடம்பெறா நிலையில்; சிறப்பு வழக்காக வகுக்கப்பெற்றவற்றுள் எருமைக்குரியதாக மரபியல் குறிப்பிட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களில் 'கண்டி' என்ற பெயர் எடுத்தாளப்படவில்லை என்பது கவனித்தற்குரியது.

♦ மரபியலுள் கடுவன் என்ற ஆண்பாற்பெயர் தொகுத்தனவற்றுள் இடம்பெற்று; வகுக்கப்பெற்றனவற்றுள் இடம்பெறாது; சிறப்பு வழக்கினுள் மட்டும் குரங்கிற்குரிய பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது. சங்க அக நூற்களில் குரங்கிற்குரிய பெயராகக் குறுந்தொகை 'இரண்டு' இடங்களிலும், ஐங்குறுநூறு ஐந்திடங்களிலும், கலித்தொகை ஓரிடத்திலும், அகநானூறு மூன்றிடங்களிலுமாக 'பதினான்கு (14)' இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

♦ கடுவன் பெயரினை எட்டுத்தொகை அகநூற்கள் மட்டும் குறித்துள்ளது நோக்குதற்குரியது.

♦ ஆண்பால் எல்லாம் ஆண்பாற்குரிய பெயரென்று முடிபு கூறியுள்ளது மரபியல். சங்க அக நூற்களில் உயர்திணைக்கும், பறவை, மான் ஆகிய அஃறிணைகளுக்கும் 'ஆண்' என்ற பெயர் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

♦ 'ஆண்' எனும் பெயர் உயர்திணைக்குரிய பெயராக நற்றிணை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்திலும், கலித்தொகை 'மூன்று' இடங்களிலும், அகநானூறு 'நான்கு' இடங்களிலுமாக 'ஒன்பது' இடங்களிலும் குறிக்கப்பட்டுள்ளன. பறவைக்குரிய பெயரென்று நற்றிணை மட்டும் ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளது. மானுக்குரிய பெயராக ஐங்குறுநூறு ஓரிடத்திலும், அகநானூறு 'நான்கு' இடங்களிலுமாக ஐந்திடங்களில் பதிவுசெய்துள்ளதைக் காணமுடிகிறது.

♦ தொல்காப்பிய மரபியல் சுட்டும் ‘ஏழு’ சிறப்பு வழக்குப் பெயர்களில் தத்தை நீங்கலாக கடுவன், கோட்டான், பூசை, சேவல், ஏனம், கண்டியின் பதிவுகள் சங்க நூற்களில் இடம்பெற்றுள்ளன. சங்க அக இலக்கியங்களில் கடுவன் குறித்த பதிவுகள் குரங்கின் ஆண்பாற்பெயரினையும், சேவல் குறித்த பதிவுகள் பறவையின் ஆண்பாற்பெயரினையும் குறிப்பதால் இவற்றைப் பற்றி ஆண்பாற்பெயர் மரபுகளுள் விளக்கப்பட்டுள்ளது. சிறப்பு வழக்கில் சேவல் என்பது ஆண் குதிரையைக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. சங்க அக இலக்கியங்களுள் சேவல் பெயர் ஆண் குதிரையைக் குறித்துப் பதிவு செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

♦ மரபியலுள் வகுக்கப்பெற்ற ஆண்பாற்பெயர்களை விடுத்து, ‘ஏற்று, களிற்று, காளை, பகடு, பகட்டு, வல்லியம், போகில், ஓரி, உழை, விடை, மா, உம்பல் ஆகியவை உயர்திணை, அஃறிணைக்கு உரிய பெயர்களாகவும்; அகன்றோன், அகுதை, அஞ்சி, அண்டர், அண்டிரன், அதிகன், அந்தணன், அரசன், அரைசர், அருமன், அவினி, அவுணன், அறவன், அறவோன், அறனிலாளன், அறியான், அறிவான், அன்பினன், அன்னிமிஞிலி, ஆஅய், ஆடவர், ஆட்டனத்தி, ஆதன், ஆண்மை, ஆதிரையான், இடையன், உதியஞ்சேரல், உதியன், உமணன், உலையன், உழவன், ஊமன், ஊரன், எயினன், எவ்வி, எழினி, ஏதிலாளன், ஐயர், ஐயன், ஓரி, கங்கன், கடவன், கட்டி, கணவன், கண்ணியன், கம்மியன், கரிகால் வளவன், கள்வன், காமன், காரி, காலன், கானகநாடன், கிழவோன், கிழவன், கிள்ளிவளவன், குடவர், குட்டுவன், குயவன், குரிசில், குருடன், குழும்பன், குழையன், குன்றநாடன், கொங்கன், கொடியன், கொல்லன், கோமான், கோவலர், சாரல்நாடன், சிலம்பன், சுறாக்கொடியன், செம்பியன், செழியன், சென்னி (சோழன்), சேணோன், சேந்தன், சேரலாதன், சேர்ப்பன், தச்சன், தாரன், திதியன், தித்தன்வெளியன், திருமா, துறைவன், தென்னவன், தேரோன், தொடியன், நள்ளி, நன்னன், நாடன், பசும்பூண்பாண்டியன், பரதவர், பழையன், பாகன், பாணன், பாரி, பார்ப்பனன், பார்ப்பான்,

பிட்டன், பிண்டன், புலம்பன், பூழியன், பெரியன், பேகன், பொதுவன், பொருநன், பொருப்பன், பொறையன், மகிழ்நன், மடவோன், மத்தி, மருத்துவன், மலைநாடன், மலையன், மல்லன், மள்ளர், மள்ளன், மறவர், மறவன், மன்னர், மன்னன், மிஞிலி, முக்கண்ணன், முடியன், முருகு, மூவன், யவனர், யாணர், வணிகன், வயவன், வளவன், வேந்தன், வேலன் போன்ற பெயர்களும் ஆண்பாற்குரியவையென்று சங்க அக இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளன.

- உயர்திணையில் அர், அன், ஆ, ஆர் போன்ற ஆண்பாற் விகுதிகள் பின்னொட்டாக இடம்பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

*1. சு.இலம்போதரன் (ப.ஆ.), திவாகர நிகண்டு, ப.34*

*2. மேலது, பக்.34-35*

*3. மேலது, பக்.31-33*

*4. பிங்கலமுனிவர், பிங்கலநிகண்டு, பக்.339-341*

*5. ப.கணேசமுதலியார் (உ.ஆ.), சூடாமணி நிகண்டு, பக்.64-67*

*6. ஞா.தேவநேயப்பாவாணர், உயர்தரக் கட்டுரை இலக்கணம், பக்.9-10*

*7. நற்.125:9, 315:4, அகநா.37:16*

*8. குறுந்.190:6-7, 275:3-4, 363:1, ஐங்.445:3, 493:1, கலித்.101:9, 101:41, 101:47, 102:9, 102:27, 102:28, 102:29, 102:32, 103:17, 103:23, 103:58, 103:65, 104:23, 104:31, 104:42, 104:60, 104:71, 105:34, 105:44, 105:47, 105:51, 105:56, 106:13, 106:22, 106:25, 106:26, 106:31, 106:36, 106:38, 106:43, 107:3, 107:4, 108:48, 113:28, அகநா.0:7, 213:6, 249:7, 265:12, 269:3, 291:3, 341:7, பட்டினப்.46*

*9. குறுந்.317:1, 321:5, அகநா.287:4*

*10. நற்.204:9, 242:10, குறுந்.256:3, 319:1, 338:1, கலித்.13:3-4, அகநா.7:10, 121:14, 234:10-11, 287:10, 321:4, 367:3*

*11. கலித்.84:23*

*12. கலித்.2:7*

*13. அகநா.103:1*

*14. அகநா.285:11*

*15. நற்.7:5, 37:10-11, 51:4, 114:9, 261:2-3, குறுந்.176:7, ஐங்.469:3-4, 493:1, கலித்.46:10, அகநா.119:6, 144:11-12, 159:13, 222:14-15, 328:2-3, 364:2*

*16. நற்.36:1, 104:1, 148:9, 154:5, 279:5, குறுந்.141:5, 343:3, ஐங்.216:1, அகநா.8:6, 147:6, 389:20*

*17. நற்.125:1, 325:1, அகநா.8:2, 72:5, 171:9-15, 201:16, 247:4*

*18. நற்.285:4*

*19. மேலது, 336:1-4*

*20. குறுந்.324:1*

*21. மேலது, 373:5*

*22. ஐங்.354:1, 397:1, அகநா.21:18, 111:11, 285:6*

*23. பட்டினப்.140*

*24. கலித்.101:36, 106:15*

*25. அகநா.133:2*

*26. மேலது, 246:1*

*27. மேலது, 337:15*

*28. மேலது, 343:12*

*29. மேலது, 367:8*

*30. நற்.211:5*

*31. அகநா.44:7*

*32. நற்.92:9, 126:3, 148:10, 317:2, குறுந்.396:4, கலித்.2:26, 21:1-2, 46:3, அகநா.65:16, 78:4, 207:9, 227:9, 308:1, 308:15, 379:24, 388:12, 397:10*

*33. நற்.82:7, 386:1, குறுந்.391:1, ஐங்.266:1, 267:1*

*34. அகநா.219:13*

*35. மேலது, 381:1*

*36. நற்.14:8, 36:3, 47:1, 51:9, 103:4, 112:3, 114:12, 125:12, 137:7, 144:1, 150:2, 154:4, 182:9, 192:2, 205:4, 222:9, 255:4, 261:6, 284:9, 292:5, 300:11, 302:7, 310:9, 344:10, 349:7, 362:7, 383:4, 399:7, குறுந்.36:2, 52:1, 88:2, 112:3, 208:2, 244:2, 307:4, 329:3, 346:1, 393:5, ஐங்.218:3, 305:1, 379:3, கலித்.7:1, 11:9, 25:5, 45:12, 49:21, 50:15, 52:14, 55:20, 60:10, 61:18, 103:18, 104:44, 132:5, 135:4, 149:1, அகநா.17:16, 29:3, 45:4, 46:12, 57:12, 59:9, 62:13, 81:12, 96:17, 102:9, 106:12, 111:8, 112:6, 121:6, 137:3, 138:11, 148:13, 152:11, 155:11, 162:22, 163:7, 165:2, 168:9, 189:6, 211:4,*

*218:1, 238:12, 257:16, 261:13, 276:10, 291:7, 298:10, 301:16, 308:9, 309:7, 321:9, 322:7, 328:13, 346:23, 349:11, 389:20, குறிஞ்சிப்.212, 253, பட்டினப்.48, 172*

*37. அகநா.72:13*

*38. கலித்.103:16, 103:51, 104:14, 104:25, 105:18, அகநா.36:7, 63:18, 297:16*

*39. அகநா.19:10*

*40. நற்.13:4, 16:9, 75:8, குறுந்.86:1, ஐங்.52:2, அகநா.113:19*

*41. அகநா.156:3*

*42. குறுந்.15:5*

*43. அகநா.221:5*

*44. நற்.24:6, 398:7, குறுந்.281:6, 293:7, ஐங்.481:2, கலித்.59:24, 75:3, அகநா.51:12, 369:5, 373:10*

*45. நற்.31:2, 278:8, 358:8, ஐங்.188:1, 196:3, அகநா.60:1, 270:5*

*46. நற்.0:1, 297:2, 342:9, குறுந்.0:1, கலித்.95:4, அகநா.5:3, 89:18, 117:8, 254:3, 309:11, 376:7, பட்டினப்.146*

*47. நற்.389:7-8, குறுந்.0:5, 107:1-2, அகநா.87:5, 277:15, 367:12*

*48. குறுந்.242:1*

*49. ஐங்.51:1*

*50. நற்.71:8, 162:1-2, 189:8, 384:1, குறுந்.154:3, அகநா.47:11, 254:5, 271:1*

*51. கலித்.70:1-2, 147:66*

*52. நற்.298:4, அகநா.33:5, 51:6, 161:6, 215:12, 297:17, 363:13, 375:8, 381:10*

*53. நற்.352:4*

*54. நற்.118:3*

*55. நற்.181:1*

*56. குறுந்.85:2*

57. நற்.218:3

58. அகநா.89:3

59. நற்.319:4, அகநா.122:13-15

60. நற்.272:1

61. அகநா.63:7, 103:4, 387:10-12

62. அகநா.270:13

63. மேலது, 290:4

64. மேலது, 346:3

65. ஐங்.425:1

66. நற்.69:4, 121:4, 242:10, 256:8, குறுந்.65:1, 183:4, 220:2, 232:3, 250:2, 338:1, கலித்.15:5, அகநா.4:4, 14:6, 23:8, 34:4, 74:9, 91:10, 133:18, 139:10, 154:8, 194:6, 304:9, 314:6, 371:5, முல்லைப்.99, பட்டினப்.245

67. நற்.37:6, 119:6, 265:2, 213:2, குறுந்.272:4-5, ஐங்.373:2-3, கலித்.11:17, 56:11, அகநா.47:7, 82:5, 97:1, 112:14, 129:5, 151:7, 184:10, 199:11, 241:10, 285:5, 353:12, 395:8

68. நற்.119:5, 334:5, குறுந்.69:1, 90:4, 121:2, 153:2, 342:1, 385:1, அகநா.7:20, 141:27, 182:14, 205:21

69. ஐங்.238:1, அகநா.101:4, 378:6-7, பட்டினப்.77, 141

70. அகநா.238:5, 398:22

71. நற்.330:1, ஐங்.91:1, அகநா.316:3

72. ஐங்.5:4

73. அகநா.36:1

74. மேலது, 276:2

75. மேலது, 386:1

76. நற்.186:5

77. குறுந்.140:1

*78. நற்.22:3, 151:5-6, 233:1, குறுந்.26:8, 278:4-5, ஐங்.274:1, 275:1, 276:1, 277:2, 374:4, கலித்.40:15, அகநா.2:5, 352:2, 378:21*

*79. நற்.94:2, ஐங்.250:4, கலித்.9:10, 47:7, 139:21, அகநா.31:13, 35:7, 107:12, 301:12*

*80. நற்.174:3*

*81. ஐங்.373:3, அகநா.147:7, 199:1-2, 321:6, 367:3.*

# சங்க அக இலக்கியங்களில் பெண்பாற்பெயர்கள்

*தொல்காப்பியம் கூறும் செய்யுள் இலக்கணங்களுக்கு ஏற்பச் சங்கப் பாக்கள் அமைந்துள்ளன. மரபியலில் இளமைப்பெயர், ஆண்பாற்பெயர்களைத் தொடர்ந்து பெண்பாற்பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இதில் தொல்காப்பியர் தொகுத்தும் வகுத்தும் உயர்திணை, அஃறிணைகளுக்குரிய பெண்பாற்பெயர் மரபுகளை விளக்கியுள்ளார். சங்க அக இலக்கியங்களில் அமையப் பெற்றுள்ள பெண்பாற்பெயர் மரபுகள் குறித்து ஆய்வது இவ்இயலின் நோக்கமாகும்.*

**மரபியல் கூறும் பெண்பாற்பெயர்கள்**

*மரபியல் பெண்பாற்பெயர்களைப் பதினாறாகக் குறிப்பிடுகின்றது. அவை பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி, பிணவல், ஆ, பிணா (தொல்.மரபி. 3,60,61,62) ஆகியவைகளாகும்.*

**நிகண்டுகளில் பெண்பாற்பெயர்கள்**

*மரபியலில் சுட்டப்பெற்றுள்ள பெண்பாற்பெயர்கள் நிகண்டுகளில் பின்வருமாறு காணக்கிடைக்கின்றன.*

**திவாகர நிகண்டு**

*திவாகர நிகண்டு பெண்பாற்பெயர்களாக, "பெட்டை, பிணை, பிணா, ஆண், நாகு, மூடு, கடமை, பாட்டி, மந்தி (9)"[1] என்று சுட்டியுள்ளதுடன்,*

*"பெட்டை : ஒட்டகம், குதிரை, கழுதை, மரை*

*பிணை : புலி, உழை, புல்வாய், கவரி, யானை, குதிரை, ஒட்டகம், கழுதை*

*பிணா : பன்றி, புல்வாய், நாய்*

*ஆன் : எருமை, பசு, மரை*

*நாகு : மரை, பெற்றம், எருமை*

மூடு-கடமை : ஆடு அன்றி மற்றவைக்கு இல்லை

பாட்டி : பன்றி, நாய், நரி மற்றும் ஒருசார் விலங்கின் பெண் அப்பெயர் பெறும்.

மந்தி : குரங்கு, ஊகம், முசு

பெண் : பெண் பாலெவையும் பெண் பிணாவும் ஆகும்"[2]

என்றும்,

"பெண்யானை: கரேணு, பிடி

பெண் பசு : சுரபி, தேனு, சுரை, கபிலை, சேதா, குரம், கோமளம்

பெண் குரங்கு : மந்தி, யூகம்

பெண் நாய் : முடுவல்

பெண் ஆமை : துளி"[3]

என்பனவற்றையும் குறித்துள்ளது.

**பிங்கல நிகண்டு**

பிங்கல நிகண்டு பெண்பாற்பெயர்களைக் குறித்துப் பின்வருமாறு விளம்பியுள்ளது. அவை,

"விலங்கு (பெண்பால்) பிணை, பாட்டி, பெட்டை, பிணா, ஆ, ஆன், பிடி, நாகு, மந்தி, மூடு, கடமை (11).

பிணையும் பாட்டியும் பெட்டையும் பிணவு
மாவு மானும் பிடியு நாகும்
மந்தியு மூடுங் கடமையு மென்றவை
பிறவும் விலங்கின் பெண்பா லாமே (2571)

அவற்றுள்,

பிணை : உழை, நாய், பன்றி, புல்வாய் (4)

அவற்றுள்,

உழையு நாயும் பன்றியும் புல் வாயும்
பிணையெனும் பெயர்க்கொடை பேசப் படுமே (2572)

பாட்டி : பன்றி, நாய் (2)

பன்றியும் நாயும் பாட்டியென் றாகும் (2573)

பாட்டி (தொடர்ச்சி) : நரி (1) (2+1=3)

(பாட்டி என்பது ஒருசார் விலங்கின் பெண்பாற்கும் பொது).

நரியிற் பாட்டி நடைபெற் றியலும்
ஒருசார் விலங்கின் பெண்பெயர்க் குரைப்பர் (2574)

பெட்டை : ஒட்டகம், குதிரை, கழுதை, மரை, சிங்கம் (5)

ஒட்டகங் குதிரை கழுதைமரை சிங்கம்
பெட்டை யென்னும் பெயர்க்கொடை பெறுமே (2575)

பிணா : பன்றி, புல்வாய், நாய் (3)

பன்றி புல்வாய் நாயென மூன்றும்
பின்றாக் காட்சிப் பிணாவொடு வருமே (2576)

ஆ : எருமை, பசு, மரை (3)

எருமையும் பசுவும் மரையுமா வென்ப (2577)

ஆன் : ஆ, எருமை, மரை (3)

ஆவு மெருமையு மரையு மானே (2578)

பிடி : கரி, யூகம், கவரி (3)

கரியும் யூகமுங் கவரியும் பிடியே (2579)

நாகு : மரை, பெற்றம், எருமை (3)

மரையும் பெற்றமு மெருமையு நாகே (2580)

நாகு (தொடர்ச்சி): நந்து, நீர்வாழ் சாதி (2) (3+2=5)

நந்து நீர்வாழ் சாதியு நாகே (2581)

மந்தி : குரங்கு, யூகம், முசு (3)

குரங்கும் யூகமு முசுவு மென்றிவை
வருங்காற் பெண்பெயர் மந்தியென் றாகும் (2582)

மூடு, கடமை : ஆடு (1)

*மூடுங் கடமையு மாடல பெறாவே (2583)*

*பெண், பிணா: அஃறிணையில் வரும் பெண்பால் எவற்றிற்கும் ஆம்*

*பெண்பா லெவையும் பெண்ணும் பிணாவுமாம் (2584)"*[4]

*என்பனவாகும்.*

**சூடாமணி நிகண்டு**

*சூடாமணி நிகண்டு பெண்பாற்பெயர்களினை,*

*"பிடிபிணைபெட்டைமந்திபிணாவோடாநாகுபாட்டி*

*கொடுவிலங்கின்பெண்பாலாங்குஞ்சரங்கவரியோடு*

*நெடியுவொட்டகமிம்மூன்றுநெடும்பிடிநிகழ்த்துநாமம்*

*வடிவுளவுழைபுல்வாய்நாய்வராகமேபிணையின்வைக்கும் (34)*

*விலங்கின் பெண்பாற்பெயர் - பிடி, பிணை, பெட்டை, மந்தி, பிணா, ஆ, நாகு, பாட்டி (8)*

*பிடியென்னும் பெயர் - குஞ்சரம், கவரி, ஒட்டகம் (3)*

*பிணையென்னும் பெயர் - உழை, புல்வாய், நாய், வராகம் (4)*

*ஒட்டகங்கழுதைவாசியுறுசிங்கமரையிவ்வைந்தும்*

*பெட்டையாமுசுவோடூகம்பேசியகுரங்குமந்தி*

*பட்டபுல்வாய்நாய்பன்றிபகர்ந்திடும்பிணாவெனும்பேர்*

*கட்டியவெருமைபெற்றங்காட்டுளமரையேயாவாம் (35)*

*பெட்டையென்னும்பெயர் - ஒட்டகம், கழுதை, வாசி, சிங்கம், மரை (5)*

*மந்தியென்னும் பெயர் - முசு, ஊகம், குரங்கு (3)*

*பிணாவென்னும் பெயர் - புல்வாய், நாய், பன்றி (3)*

*ஆவென்னும் பெயர் - எருமை, பெற்றம், மரை (3)*

*எருமையேமரையேபெற்றமேற்றநீர்சாதிநாகாம்*

*நரிபன்றிநாயிம்மூன்றுநாட்டியபாட்டியாகும்*

*பெருகுபெண்பால்பிணாபெண்பேணுமாணைவையுமாணாம்*

பொருவினூலுணர்ந்துசொன்னபுலவர்தம்வாக்குத்தானே (36)

நாகென்னும் பெயர் - எருமை, மரை, பெற்றம், நீர்ச்சாதி (4)

பாட்டியென்னும் பெயர்- நரி, பன்றி, நாய் (3)

பிணாப் பெண்ணென்னும் பெயர்கள் - பெண்பாலெவற்றிற்குமாம்”[5] என்பன வாகக் குறித்துள்ளது.

**உயர்தரக் கட்டுரை இலக்கணம்**

உயர்தரக்கட்டுரை இலக்கணம் எனும் நூலில் தேவநேயப்பாவாணர் மரபுப்பெயர்களைக் குறிக்கும் நிலையில் பெண்பாற்பெயர்களையும் விளம்பியுள்ளார். அவற்றை,

| **உயிரினப் பெயர்** | **பெண்பாற் பெயர்** |
|---|---|
| “யானை | பிடி |
| ஒட்டகம், குதிரை, கழுதை, மரை | பெட்டை |
| பறவைகள் | பெட்டை, பெடை, பேடை |
| கோழி, கூகை, மயில் | அளகு |
| புல்வாய், நவ்வி, கவரி | பிணை |
| பன்றி, புல்வாய், நாய் | பிணா, பிணவு, பிணவல் |
| கரடி | பிணவு |
| மாடு, எருமை, மரை | ஆ, ஆன் |
| மாடு, எருமை, மரை, நந்து (சங்கு) | நாகு |
| ஆடு | மூடு, கடமை, மறி |
| பன்றி, நாய், நரி | பாட்டி |
| குரங்கு, முசு, ஊகம் | மந்தி |
| மாடு, எருமை | கிடேரி |

பெண்பாற்குச் சிறப்புப் பெயர் பெறாத உயிரினங்களின் பெண்பாலெல்லாம், பெண் என்னும் அடைமொழி பெற்ற பொதுப்பெயராற் குறிக்கப்பெறும்.

(எ-டு.) பெண் மடங்கல், பெண்பல்லி (மடங்கல் - சிங்கம்)"[6]

ஆகியவற்றின் மூலம் அறியச் செய்கின்றார்.

இவ்வாறு நிகண்டுகளும் உயர்தரக் கட்டுரை இலக்கணமும் பெண்பாற் பெயர்களின் அமைவுகளை மரபியலின்வழி பிற்கால வழக்கு மாற்றங்களையும் எடுத்தியம்புகின்றன.

**சங்க அக இலக்கியங்களில் பெண்பாற்பெயர்கள்**

மரபியல் வழிச் சங்க அக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள பெண்பாற்பெயர் மரபுகளைப் பின்வரும் பகுதி விளக்கும்.

**பேடை**

'பேடை' என்பது பறவையினம் அனைத்திற்கும் உரிய பெண்பாற் பெயராக மரபியல் சுட்டுகிறது. அவ்வகையில் சங்க அக இலக்கியங்களில் பறவையினத்தின் பெண்பாற்பெயராகப் பேடை சுட்டப்பட்டுள்ளதை,

"பொதிவயிற்று இளங்காய் பேடை ஊட்டி
போகில் பிளந்திட்ட பொங்கல் வெண்காழ்"[7]

என்னும் அகநானூற்று அடிகள் விளக்குகின்றன. மேலும் காட்டுக்கோழி, கோழி, சம்பங்கோழி, புறா, நாரை, கொக்கு, குருவி, ஊர்க் குருவி, நீர்க்காக்கை, காக்கை, வங்காப்பறவை, மயில், பருந்து, அன்னம், வாவல், அன்றில், காடை முதலான பறவையினங்களுக்குரிய பெண்பாற் பெயராகக் குறிப்பிட்டுள்ளன.

**காட்டுக் கோழி**

'பேடை' காட்டுக் கோழிக்குரிய பெண்பாற்பெயராக நற்றிணை மட்டும் ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளது. அதனை,

*"காமரு தகைய கான வாரணம்*

*..........................................*

*..........................................*

*படை நோக்கிய பெருந்தகு நிலையே"*[8]

*என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.*

**கோழி**

*குறுந்தொகை, அகநானூறு முறையே ஓரிடத்தில் கோழிக்குரிய பெண்ப ாற்பெயராகப் பேடை எடுத்தாளப்பட்டுள்ளமையை,*

*"மனைஉறை கோழிக் குறுங்காற் பேடை,"*[9]

*"இளைப்படு பேடை இரியகுரைத்து எழுந்து"*[10]

*என்கின்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவற்றுடன், புறநானூறு (326:2 ) கோழிக்குரிய பெண்பாற்பெயராகப் பதிவுசெய்துள்ளது குறிப்பிடத்தக்கது.*

**சம்பங் கோழி**

*பேடைப்பெயர் சம்பங் கோழிக்குரியதாக ஐங்குறுநூறு "இரண்டு"*[11] *இ டங்களில் சுட்டியுள்ளதை,*

*"நீர்உறை கோழி நீலச் சேவல்*

*கூர்உகிர்ப் பேடை வயாஅம் ஊர,"*

*"வெண்நுதல் கம்புள் அரிக்குரல் பேடை"*

*எனும் பாடலடிகள் வழி அறிய முடிகின்றது.*

**புறா**

*புறாவிற்குரிய பெண்பாற்பெயராகிய 'பேடை' நற்றிணையில் 'இரண்டு' இடங்களிலும், குறுந்தொகையில் ஓரிடத்திலுமாக "மூன்று"*[12] *இடங்களில் இ டம்பெற்றிருப்பதைப் பின்வரும் பாடலடிகள் விளக்குகின்றன.*

*"மனைஉறை புறவின் செங்கால் பேடை,"*

*"பைம்புறப் புறவின் செங்கால் சேவல்*

……………………………………………

……………………………………………

உயவுநடைப் பேடை உணீஇய மன்னர்,"

"பொறிமயிர் எருத்தின் குறுநடைப் பேடை"

**நாரை**

'பேடை' எனும் பெண்பாற்பெயர் நாரைக்குரியதாக நற்றிணை "மூன்று"[13] இடங்களில் குறிப்பிட்டுள்ளது. அவற்றை,

"தோ டுஅமை தூவித் தடந்தாள் நாரை

நலன் உணப்பட்ட நல்கூர் பேடை,"

"கழனி ஒழிந்த கொடுவாய்ப் பேடைக்கு

முடமுதிர் நாரை கடல்மீன் ஒய்யும்,"

"கொடுவாய்ப் பேடைக் கடம்பைச் சேரிய

……………………………………………

பயிர்தல் ஆனா பைதல்ஆம் குருகே"

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**கொக்கு**

"குடுமிக் கொக்கின் பைங்கால் பேடை"[14]

எனும் பாடலடியில் கொக்குக்குரிய பெண்பாற்பெயராகப் பேடையினை அக நானூறு சுட்டியள்ளது.

**குருவி**

"உள்இறைக் குரீஇக் கார் அணல் சேவல்

……………………………………………

வந்ததன் செவ்வி நோக்கி பேடை"[15]

என்ற நற்றிணைப் பாடலடிகளில் குருவிக்குரிய பெயராகப் பேடை இடம்பெ ற்றுள்ளதை அறிய முடிகிறது.

**ஊர்க் குருவி**

*குறுந்தொகையில் ஊரின்கண் வாழ்கின்ற குருவியின் பெண்ணினத்தைக் குறிக்கும் பொருட்டுப் பேடை எனும் பெண்பாற் பெயரினை எடுத்தியம்பியுள்ளது. அதனை,*

*"உள்ளூர் குரீஇத் துள்ளுநடைச் சேவல்*

*சூல்முதிர் பேடைக்கு ஈனில் இழைஇயர்"*[16]

*எனும் பாடலடிகள் அறியச் செய்கின்றன.*

**நீர்க் காக்கை**

*நீர்க் காக்கைக்குரிய பெண்பாற்பெயர் பேடை என்பதனை நற்றிணை ஓரிடத்தில் குறித்துள்ளது. இதனை,*

*"கடல்அம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்*

……………………………………………….

……………………………………………….

*கடுஞ்சூல் வதிந்த காமர் பேடை"*[17]

*என்ற பாடலடிகள் வழி புலனாகின்றது.*

**காக்கை**

*"கொடுங்கண் காக்கைக் கூர்வாய்ப் பேடை"*[18]

*எனும் அடியில் நற்றிணை காக்கைக்குரிய பெயராக அடையாளப் படுத்தியிருப்பதைக் காணமுடிகின்றது.*

**வங்கா**

*வங்காப் பறவையின் பெண்ணினத்தைப் 'பேடை' என்னும் சொல்லால் வழங்கப்பட்டதைக் குறுந்தொகை ஓரிடத்தில் எடுத்தாண்டுள்ளது. இதனை,*

*"வங்காக் கடந்த செங்கால் பேடை"*[19]

*என்ற பாடலடி புலப்படுத்துகிறது.*

**மயில்**

*பேடை எனும் பெண்பாற்பெயர் மயிலுக்குரியதாகச் சங்க அக இலக்கியங்களில் "இரண்டு"[20] இடங்களில் குறித்துள்ளது.*

*"புன்தலைப் பேடைவரி நிழல் அகவும்,"*

*"புன்புறப் பேடை சேவல் இன்புற"*

*என்னும் ஐங்குறுநூற்று அடிகள் இதனை விளக்குகின்றன.*

**பருந்து**

*பருந்திற்குரிய பெண்பாற்பெயராகப் 'பேடை' என்பது ஐங்குறுநூற்றில் ஓரிடத்திலும், அகநானூற்றில் 'நான்கு' இடங்களிலுமாக "ஐந்து"[21] இடங்களில் காணக் கிடைக்கின்றன. அவற்றைப் பின்வரும் பாடலடிகளின் வழி அறியலாகின்றது.*

*"உறுதலைப் பருந்தின் உளிவாய்ப் பேடை,"*

*"கொடுவாய்ப் பேடைக்கு அல்குஇரை தரீஇய*
*மான்று வேட்டு எழுந்த செஞ்செவி எருவை,"*

*"வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்*
*வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரும்,"*

*"வளைவாய்ப் பருந்தின் வான்கண் பேடை,"*

*"கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்*
*........................................................*
*........................................................*
*வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்."*

**அன்னம்**

*"மெல்நடைப் பேடை துனைதர தற்சேர்ந்த*
*அன்னவான் சேவல் புணர்ச்சிபோல் ஒண்ணுதல்"*[22]

எனும் பாடலடிகளில் பெண் அன்னத்திற்குரிய பெயராகப் பேடையைக் கலித்தொகை எடுத்தாண்டுள்ளது. இதனைப் புறநானூறும் (67:13) ஓரிடத்தில் பதிவு செய்திருப்பதைக் காணமுடிகிறது.

**வாவல்**

வாவலுக்குரிய பெண்பாற்பெயராகப் பேடையினை அகநானூறு ஓரிடத்தில் சுட்டியிருக்கின்றது. இதனை,

"சிறுபைந் தூவிச் செங்காற் பேடை
நெடுநீர் வானத்து வாவுப்பறை நீந்தி"[23]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றது.

**அன்றில்**

அன்றிலின் பெண்பாற்பெயராகப் பேடையினை அகநானூறு சுட்டியுள்ளதை,

"சேவலொடு புணராச் சிறுகரும் பேடை"[24]

என்ற பாடலடி வழி அறியலாகின்றது.

**காடை**

"வரிப்புற இதலின் மணிக்கண் பேடை"[25]

என்ற அகநானூற்றுப் பாடலடியில் காடைக்குரிய பெண்பாற்பெயராகப் 'பேடை' இடம்பெற்றிருப்பதை அறியமுடிகின்றது.

இவ்வாறாகச் சங்க அக நூற்களில் 'பேடை' எனும் பெண்பாற் பெயரானது காட்டுக்கோழிக்கு ஓரிடத்திலும், கோழிக்கு 'இரண்டு' இடங்களிலும், சம்பங்கோழிக்கு இரண்டிடங்களிலும், புறாவிற்கு மூன்றிடங்களிலும், நாரைக்கு மூன்றிடங்களிலும், கொக்கு, குருவி, ஊர்க்குருவி, நீர்க்காக்கை, காக்கை, வங்கா, அன்னம், வாவல், அன்றில், காடை முறையே ஓரிடத்திலும், மயிலுக்கு இரண்டிடங்களிலும், பருந்திற்கு ஐந்திடங்களிலுமாக 'இருபத்தெட்டு (28)' இ

டங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவை நற்றிணையில் ‘ஒன்பது’ இடங்களிலும், குறுந்தொகையில் ‘நான்கு’ இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ‘ஐந்து’ இடங்களிலும், கலித்தொகையில் ஓரிடத்திலும், அகநானூற்றில் ‘பத்து (10)’ இடங்களிலும், புறநானூற்றில் ‘இரண்டு’ இடங்களிலுமாக ‘முப்பத்தொரு (31)’ இடங்களில் காணக்கிடைக்கின்றது.

**பெடை**

‘பெடை’ என்னும் பெண்பாற்பெயரானது பறவையினம் அனைத்திற்கும் அமையப்பெறும் என்கின்றது மரபியல். சங்க அக இலக்கியங்களில் இம்மரபுப்பெயர் மயில், புறா, நீர்க்காக்கை, நாரை, அன்றில், சம்பங்கோழி, குயில், அன்னம், பறவை (பொதுப்பெயர்), பருந்து, குறும்பூழ் ஆகிய பறவையினங்களுக்குரிய பெயராகவும் எருமைக்குரிய பெயராகவும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**மயில்**

மயிலின் பெண்ணினப் பெயராகிய ‘பெடை’ என்பதனை நற்றிணை, கலித்தொகை, அகநானூற்றில் ஒவ்வொரு பதிவுகள் முறையே “மூன்று”[26] இடங்களில் இடம்பெற்றுள்ளன. அவற்றை,

“பீலி மஞ்ஞை பெடையோடு ஆலும்,”

“ஆய்தூவி அனம்என அணிமயிற் பெடை என,”

“கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை”

என்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவற்றுடன், புறநானூறு (120:6), பொருநராற்றுப்படை (47) முறையே ஓரிடத்தில் மயிலுக்குரிய பெயராக அடையாளப்படுத்தியிருப்பதையும் காணமுடிகின்றது.

**புறா**

பெடையெனும் பெண்பாற்பெயர் புறாவிற்குரியதாக நற்றிணை ஓரிடத்திலும், குறுந்தொகை ‘இரண்டு’ இடங்களிலும், கலித்தொகை ஓரிடத்திலும்,

அகநானூறு இரண்டிடங்களிலுமாக "ஆறு"[27] இடங்களில் இடம்பெற்றிருப்ப தை,

"புன்புறா வீழ்பெடைப் பயிரும்,"

"புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்,"

"புன்புறப் பெடையொடு பயிரி இன்புறவு,"

"அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறகரல் ஆற்றும் புறவுஎனவும் உரைத்தனரே,"

"பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்
சிறுபுன் பெடையொடு சேண்புலம் போகி,"

"இரும்புறாப் பெடையொடு பயிரும்"

என்ற பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

**நீர்க்காக்கை**

நீர்க்காக்கைக்குரிய பெயராகப் பெடையினை நற்றிணை, அகநானூறு முறையே ஓரிடத்திலென்று "இரண்டு"[28] இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ள து. இதனை,

"சேயிறா எறிந்த சிறுவெண் காக்கை
...................................................
தான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉ சுரக்கும்,"

"கடற்சிறு காக்கை காமர் பெடை யொடு"

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**நாரை**

"பாடு இமிழ் பனிக்கடல் துழைஇ பெடையோடு
உடங்குஇரை தேரும் தடந்தாள் நாரை"[29]

என்கின்ற பாடலடிகளில் நாரைக்குரிய பெண்பாற்பெயராக நற்றிணை ஓரிட த்தில் பதிவுசெய்துள்ளதைக் காணமுடிகின்றது.

**அன்றில்**

*அன்றிலுக்குரிய பெண்பாற்பெயராகப் 'பெடை' என்பதனை நற்றிணை ஓரிடத்திலும், குறுந்தொகை இரண்டிடங்களிலுமாக "மூன்று"[30] இடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. அவற்றை,*

*"பெடைபுணர் அன்றில் உயங்குகுரல் அளைஇ,"*

*"நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்*
*இறவின் அன்ன கொடுவாய்ப் பெடையொடு,"*

*"கருங்கால் அன்றில் காமர் கடுஞ்சூல்*
*வயவுப்பெடை அகவும் பானாள் கங்குல்"*

*என்ற பாடலடிகளின் மூலம் அறியலாகின்றது.*

**சம்பங்கோழி**

*"பழனக் கம்புள் பயிர்ப்பெடை அகவும்"*[31]

*என்ற ஐங்குறுநூற்று பாடலடியில் சம்பங்கோழிக்குரிய பெண்பாற் பெயராகப் பெடை இடம்பெற்றுள்ளமையை அறியமுடிகின்றது.*

**குயில்**

*குயிலுக்குரிய பெண்பெயராகப் பெடை குறிக்கப்பட்டுள்ளதை ஐங்குறு நூறு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலென்று "இரண்டு"[32] இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. இதனை,*

*"குயிற் பெடை இன்குரல் அகவ,"*

*"ஆவுதி நறும்புகை முனைஇ குயில்தம்*
*மாஇரும் பெடையொடு இரியல்போகி"*

*என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.*

**அன்னம்**

அன்னப்பறவைக்குரிய பெண்பாற்பெயராகப் பெடை இடம் பெற்றுள்ளதைக் கலித்தொகை 'மூன்று' இடங்களிலும், அகநானூறு ஓரிடத்திலுமாக "நான்கு"[32] இடங்களில் இடம்பெற்றிருப்பதை,

"ஆய்தூவி அன்னம் தன்அணி நடைப் பெடையொடு,"

"மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்து ஆடும் அன்னம்தன்

.........................................................................

கதுமென காணாது கலங்கி அம்மடப் பெடை,"

"சாற்றுள் பெடை அன்னார் கண்பூத்து நோக்கும் வாயெல்லாம்,"

"அன்ன மாண் பெடையின் மென்மெல இயலி"

என்ற பாடலடிகள் புலப்படுத்தி நிற்கின்றன.

**பறவை (பொதுப் பெயர்)**

"விரவுப் பல்உருவின வீழ்பெடை துணையாக

இரை தேர்ந்து உண்டு அசாவிடூஉம் புள்ளினம்"[34]

எனும் பாடலடிகளில் பறவைக்குரிய பெயராகப் பெடை இடம் பெற்றிருப்பதைக் கலித்தொகை வழி அறியமுடிகின்றது.

**பருந்து**

பருந்திற்குரிய பெண்பாற்பெயர் 'பெடை' என்பதனை அகநானூறு "இரண்டு"[35] இடங்களில் சுட்டியிருக்கின்றது. அதனை,

"முடைநசை இருக்கைப் பெடை முகம் நோக்கி

...................................................................

எருவைச் சேவல் கரிபு சிறைதீய,"

"பருந்து பெடை பயிரும் பாழ்நாட்டு ஆங்கண்"

என்ற பாடலடிகள் அறியச் செய்கின்றன. இவற்றுடன் பதிற்றுப்பத்து (36:9), புறநானூறு (370:8) முறையே ஓரிடத்தில் பருந்திற்குரிய பெயராக அடையாளப்படுத்தியிருப்பதையும் காணமுடிகின்றது.

**குறும்பூழ்**

"கருந்தாள் மிடற்ற செம்பூழ்ச் சேவல்

சிறுபுன் பெடையொடு குடையும் ஆங்கண்"[36]

என்ற அகநானூற்றுப் பாடலடிகளில் குறும்பூழ்ப் பறவைக்குரிய பெண்பாற்பெயராகப் பெடை இடம் பெற்றிருப்பதைத் தெளிய முடிகின்றது.

**எருமை**

'பெடை' என்னும் பெயர் பறவைகளுக்குரிய பெண்பாற் பெயராக மரபியல் அடையாளப்படுத்தி நிற்க ; சங்க அகநூற்களில் கலித்தொகை மட்டும் புதுமையாக எருமைக்குரிய பெண்பாற் பெயராகச் சுட்டியிருப்பதை,

"எருமைப் பெடையோடு எமர்ஈங்கு அயரும்"[37]

என்ற பாடலடி வழி புலனாகின்றது.

இவற்றுடன் புறநானூறு (318:8) ஓரிடத்தில் குருவிக்குரிய பெயராகவும் , திருமுருகாற்றுப்படை (311) கோழிக்குரிய பெயரென்றும் சுட்டியிருப்பதனைக் காணமுடிகின்றது.

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களுள் மயிலுக்குரிய பெயராக மூன்றிடங்களிலும், புறாவிற்குரிய பெயராக ஆறிடங்களிலும், நீர்க்காக்கைக்குரிய பெயராக இரண்டிடங்களிலும், நாரைக்குரிய பெயராக ஓரிடத்திலும், அன்றிலுக்குரிய பெயராக மூன்றிடங்களிலும், சம்பங்கோழிக்குரிய பெயராக ஓரிடத்திலும், குயிலுக்குரிய பெயராக இரண்டிடங்களிலும், அன்னப்பறவைக்குரிய பெயராக நான்கிடங்களிலும், பறவைக்குரிய பெயராக ஓரிடத்திலும், பருந்திற்குரிய பெயராக இரண்டிடங்களிலும், குறும்பூழ், எருமை முறையே ஓரிடத்திலுமாக 'இருபத்தேழு (27)' இடங்களில் 'பெடை' எனும் பெண்பாற்பெயர் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகின்றது.

பெடையெனும் பெண்பாற்பெயர் நற்றிணையில் ‘ஐந்து’ இடங்களிலும், குறுந்தொகையில் ‘நான்கு’ இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ‘இரண்டு’ இடங்களிலும், கலித்தொகையில் ‘ஏழு’ இடங்களிலும், அகநானூற்றில் ‘எட்டு’ இடங்களிலும், பட்டினப்பாலையில் ஓரிடத்திலும், புறநூற்களில் பதிற்றுப்பத்தில் ஓரிடத்திலும், புறநானூற்றில் ‘மூன்று’ இடங்களிலும், நெடுநல்வாடையில் ஓரிடத்திலும், ஆற்றுப்படைகளில் ‘இரண்டு’ இடங்களிலுமாக ‘முப்பத்திநான்கு (34)’ இடங்களில் எடுத்தியம்பியிருப்பதைத் தெளியமுடிகின்றது.

**பெட்டை**

மரபியலில் பேடை, பெடை எனும் பெண்பாற்பெயர்களுக்கு அடுத்ததாக ‘பெட்டை’ என்ற பெயர் கூறப்பட்டுள்ளது. இப்பெயர் ஒட்டகம், குதிரை, கழுதை, மரை (காட்டுப்பசு) ஆகிய விலங்கினங்களுக்கு உரியதாகச் சுட்டப்பட்டிருப்பினும் சங்க அக இலக்கியங்களுள் இப்பெயரானது இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**பெண்**

பெண்பாற்பெயர்களாகத் தொகுக்கப்பட்டவைற்றுள் நான்காவதாகச் சுட்டப்பட்டிருப்பது ‘பெண்’ எனும் பெயராகும். இப்பெயர் உயர்திணையாகிய மக்களுக்கு மட்டும் உரியதாக மரபியலில் விளம்பப் பட்டிருக்கின்றது. சங்க அக இலக்கியங்களுள் உயர்திணைக்குரிய பெயராகப் பதிவு செய்யப்பட்டிருப்பதுடன் ; புலி, பன்றி ஆகிய விலங்கினங்களுக்குரிய பெயராகவும் எடுத்தாளப்பட்டிருப்பது சுட்டத்தக்கதாகின்றது.

**பெண் (உயர்திணை)**

‘பெண்’ என்ற பெண்பாற்பெயரினை குறுந்தொகை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்திலும், கலித்தொகையில் ‘நான்கு’ இடங்களிலும், அகநானூற்றில் ‘மூன்று’ இடங்களிலுமாக “ஒன்பது”[38] இடங்களில் பதிவுசெய்யப்பட்டிருப்பதனை,

"பெண் கொலை புரிந்த நன்னன்போல,"

"எண்ணிய நாளகம் வருதல் பெண் இயல்,"

"பெண் அன்று உரைத்தல் நமக்காயின் இன்னதூஉம்,"

"பெண் அன்று புனைஇழாய் எனக்கூறி தொழூஉம்,"

"கண் நோக்கு ஒழிக்கும் கவின்பெறு பெண் நீர்மை,"

"கண்ணினும் முகத்தினும் நகுபவள் பெண் இன்றி,"

"பெண் கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி,"

"பேடிப் பெண் கொண்டு ஆடுகை கடுப்ப,"

"பெண்துணை சான்றனள் இவள் எனப் பல்மாண்"

என்ற பாடலடிகள் மூலம் அறிய முடிகின்றது. இவற்றுடன் புறநூற்களுள் பதிற்றுப்பத்தில் (4:1) ஓரிடத்திலும், புறநானூற்றில் (1:7, 82:1) 'இரண்டு' இடங்களிலும், மதுரைக் காஞ்சியில் (555) ஓரிடத்திலும், அகப்புற நூலில் (பரிபாடல்) (8:58, 11:100, 20:44) 'மூன்று' இடங்களிலும் பெண் எனும் பெயர் காணலாகின்றது.

**பெண்புலி**

"மெய்ம்மை அன்ன பெண்பாற் புணர்ந்து"[39]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடியில் பெண்புலிக்குரிய பெயராக 'பெண்' இடம்பெற்றிருப்பது புலனாகின்றது.

**பெண் பன்றி**

'பெண்' பெயர் பன்றிக்குரியதாக ஐங்குறுநூறு "இரண்டு"[40] இடங்களில் சுட்டியுள்ளது. இதனை,

"இளம்பிறை அன்ன கோட்ட கேழல்
களங்கனி அன்ன பெண்பால் புணரும்,"

"புலி கொல் பெண்பால் பூவரிக் குருளை
வளை வெண்மருப்பின் கேழல் புரக்கும்"

என்ற பாடலடிகள் மூலம் அறியலாகின்றது.

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களுள் 'பெண்' எனும் பெயர் உயர்திணை மக்களுக்குரிய பெயராக 'ஒன்பது' இடங்களிலும், புலிக்குரிய பெயராக ஓரிடத்திலும், பன்றிக்குரிய பெயராக 'இரண்டு' இடங்களிலுமாக 'பன்னிரண்டு (12)' இடங்களில் பதிவுசெய்யப் பட்டிருப்பதனை அறிய முடிகின்றது.

'பெண்' என்னும் பெயரானது குறுந்தொகையில் ஓரிடத்திலும், ஐங்குறுநூறு, கலித்தொகை முறையே 'நான்கு' இடங்களிலும், அகநானூற்றில் 'மூன்று' இடங்களிலும், புறநூற்களில் 'நான்கு' இடங்களிலும், அகப்புற நூலில் 'மூன்று' இடங்களிலுமாக 'பத்தொன்பது (19)' இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதனைக் காணமுடிகிறது.

**மூடு**

மரபியலில் பெண்பாற்பெயர்களாகத் தொகுத்தனவற்றுள் பேடை, பெடை, பெட்டை, பெண் ஆகியவற்றைத் தொடர்ந்து 'மூடு' எனும் பெயர் சுட்டப்பட்டுள்ளது. இப்பெயர் ஆட்டிற்குரியதாக (யாடு) விளம்பப்பட்டிருக்கின்றது.

'மூடு' என்ற பெண்பாற்பெயர் சங்க அக இலக்கியங்களில் பதிவுசெய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**நாகு**

'நாகு' என்னும் பெண்பாற்பெயர் எருமை, மரை, பெற்றம் ஆகிய விலங்கினங்களுக்கும், நீர்வாழ் சாதியில் நந்து (நத்தை) எனும் உயிரினத்திற்கும் உரியதாக மரபியல் குறிப்பிட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களில் பசு (பெற்றம்), எருமை, மீன், வேங்கை மரம் முதலானவற்றிற்குரிய பெயராகச் சுட்டப்பட்டு

ள்ளது ; மரை, நீர் வாழ் சாதியான நந்து குறித்த பதிவுகள் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**மாடு**

நாகு எனும் பெண்பாற்பெயரினை மாட்டுக்குரியதாக ஐங்குறுநூறு, அகநானூறு முறையே ஓரிடத்திலும், கலித்தொகை ‘நான்கு’ இடங்களிலுமாக “ ஆறு”[41] இடங்களில் எடுத்துரைத்துள்ளன. அவற்றினை,

“நல்ஏறு தழீஇ நாகுபெயர் காலை,”

“போர் ஆரா ஏற்றின் பொரு நாகு,”

“கடுஞ்சூலா நாகு போல் நிற்கண்டு நாளும்,”

“நல்ஏறு நாகுடன் நின்றன,”

“கடுவய நாகு போல் நோக்கி தொடுவாயில்,”

“உடன்நிலை வேட்கையின் மடநாகு தழீஇ”

என்ற பாடலடிகளின் வழி அறிய முடிகின்றது. இவற்றுடன் புறநானூறும் (261:3) ஓரிடத்தில் மாட்டிற்குரிய பெயராகச் சுட்டியிருப்பதையும் காணமுடிகின்றது.

**எருமை**

“மடக்கண் எருமை மாண் நாகு தழீஇ”[42]

என்ற பாடலடியில் எருமைக்குரிய பெண்பாற்பெயராக நாகு என்பதனை அகநானூறு குறித்துள்ளது.

**மீன், வேங்கை மரம்**

மரபியலில் எருமை, பெற்றம், மரை, நந்து ஆகியவற்றின் பெண்பாற்பெயராக வகுக்கப்பட்டதனை விடுத்துப் புதுமையாகக் குறுந்தொகை மீனுக்குரிய பெயராகவும், அகநானூறு வேங்கை மரத்திற்குரிய பெயராகவும் சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அவற்றை,

“கணைக் கோட்டு வாளை கமஞ்சூல் மடநாகு”[43]

“நல்நாள் பூத்த நாகு இள வேங்கை”[44]

என்ற பாடலடிகள் வழி அறிய முடிகின்றது. இவற்றுடன் புறநானூறும் (352:1 2) ஓரிடத்தில் வேங்கை மரத்திற்குரிய பெயராகக் குறித்திருப்பதையும் காண முடிகிறது. மேலும் புறநானூறு சங்கிற்குரிய பெயராகவும் (266:5) கோழிக்குரிய பெயராகவும் (326:2) நாகு என்னும் பெயரைக் குறித்துள்ளது. சிறுபாணாற்றுப்படை நுணா, சுரபுன்னை மரத்திற்குரிய பெண்பாற்பெயராகக் கூறப்பட்டுள்ளதையும் காணமுடிகின்றது.

சங்க அக இலக்கியங்களில் 'நாகு' எனும் பெண்பாற்பெயர் மாட்டிற்குரிய பெயராக 'ஆறு' இடங்களிலும், எருமை மாட்டிற்குரிய பெயராக ஓரிடத்திலும், மீன், வேங்கைமரம் முறையே ஓரிடத்திலுமாக 'ஒன்பது' இடங்களில் இடம் பெற்றிருப்பது சுட்டத்தக்கதாகின்றது.

'நாகு' என்ற பெண்பாற்பெயரினைக் குறுந்தொகை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்திலும், கலித்தொகையில் 'நான்கு' இடங்களிலும், அகநானூற்றில்'மூன்று' இடங்களிலும், புறநானூற்றில்' நான்கு' இடங்களிலும், சிறுபாணாற்றுப்படையில் 'இரண்டு' இடங்களிலுமாக 'பதினைந்து (15)' இடங்களில் பதிவுசெய்யப்பட்டிருப்பதை அறியமுடிகின்றது.

**கடமை**

பெண்பாற்பெயர்களுள் பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு ஆகியவற்றைத் தொடர்ந்து 'கடமை' என்ற பெயர் இடம் பெற்றிருக்கின்றது. இப்பெயர் ஆட்டிற்குரியதாக வரையறுத்துள்ளது மரபியல்.

சங்க அக இலக்கியங்களில், இப்பெயர் எடுத்தாளப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**அளகு**

'அளகு' என்ற பெண்பாற்பெயரானது கோழி, கூகை, மயில் ஆகிய பறவையினங்களுக்கு உரியதாக மரபியல் விளம்புகிறது.

சங்க அக நூற்களில் 'அளகு' என்ற பெண்பாற்பெயர் எடுத்தாளப் படவில்லையென்பது சுட்டுதற்குரியதாகும். ஆனால், புறநூலான பதிற்றுப்பத்தில் (35:5) பருந்திற்குரிய பெண்பாற்பெயராகவும், பெரும்பாணாற்றுப்படையுள் (256) கோழிக்குரிய பெண்பாற் பெயராகவும் பதிவுசெய்திருப்பதைக் காணமுடிகின்றது.

**மந்தி**

மரபியல் 'மந்தி' எனும் பெண்பாற்பெயர் குரங்கிற்கும் அதன் வகையினங்களாகிய முசு, ஊகத்திற்குமுரிய பெயர்களென்று வரையறுத்துள்ளது. சங்க அக இலக்கியங்களில் குரங்கின் பெண்ணினத்தைக் குறிக்கும் பொருட்டு 'மந்தி' என்னும் பெண்பாற்பெயரினை நற்றிணை 'பதின்நான்கு (14)' இடங்களிலும், குறுந்தொகை 'நான்கு' இடங்களிலும், ஐங்குறுநூறு 'எட்டு' இடங்களிலும், கலித்தொகை 'இரண்டு' இடங்களிலும், அகநானூறு 'ஏழு' இடங்களிலுமாக "முப்பத்தைந்து (35)"[45] இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

அவற்றைப் பின்வரும் பாடலடிகள் அறியச் செய்கின்றன,
"முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி,"
"துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி,"
"துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்க,"
"செம்முக மந்தி செய்குறி கருங்கால்,"
"புன்தலை மந்தி வன்பறழ் நக்கும்,"
"மந்தியும் அறியா மரம்பயில் ஒருசிறை,"
"மடமா மந்தி மாணா வன்பறழ்,"
"கொழுமுதல் ஆய்கனி மந்தி கவரும்,"
"துய்த்தலை மந்தி தும்மும் நாட,"

“கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை,”

“கருவிரல் மந்திக்கு வருவிருந்து அயரும்,”

“செம்முக மந்தி ஆரும் நாட,”

“புன்தலை மந்தி தூர்ப்ப தந்தை,”

“புன்தலை மந்திக் கல்லா வன்பறழ்,”

“மகவுடை மந்தி போல,”

“கைம்மை உய்யாக் காமர் மந்தி,”

“பார்ப்புடை மந்திய மலை இறந்தோரே,”

“பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்,”

“அவரை அருந்த மந்தி பகர்வர்,”

“கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்,”

“புன்தலை மந்தி வன்பறழ் ஆரும்,”

“மந்திக் கணவன் கல்லாக் கடுவன்,”

“மந்திக் காதலன் முறிமேய் கடுவன்,”

“கல்லா மந்தி கடுவனோடு உகளும்,”

“குளவி மேய்ந்த மந்தி துணையொடு,”

“கருவிரல் மந்திக் கல்லா வன் பார்ப்பு,”

“மரல்சாய மலைவெம்ப மந்தி உயங்கா,”

“மெல்விரல் மந்திகுறை கூறும் செம்மற்றே,”

“மந்தி நல்அவை மருள்வன நோக்க,”

“மந்தியும் அறியா மரம்பயில் இறும்பின்,”

“துறுகல் மந்தியின் தோன்றும் ஊரன்,”

“செம்முக மந்தி ஆடும்,”

“கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்,”

“கல்லா மந்தி கடுவனொடு உகளும்,”

“அருவி பாய்ந்த கருவிரல் மந்தி.”

இவற்றுடன் புறநூற்களில் புறநானூறு (128:1, 158:24, 200:3, 247:4) 'நான்கு' இடங்களிலும், மதுரைக் காஞ்சி (334), நெடுநல்வாடை (9) முறையே ஓரிடத்திலும், ஆற்றுப்படை நூற்களில் திருமுருகாற்றுப்படை (42), பொருநராற்றுப்படை (224), சிறுபாணாற்றுப்படை (56) முறையே ஓரிடத்திலும், பெரும்பாணாற்றுப்படையில் (395, 497) 'இரண்டு' இடங்களிலும், மலைபடுகடாமில் (311) ஓரிடத்திலும் குரங்கிற்குரிய பெயராகவே சுட்டப்பட்டுள்ளதனையும் காண முடிகின்றது.

**ஆதிமந்தி**

மரபியலில் குரங்கிற்கும் அதன் இனத்திற்கும் உரிய பெயராக 'மந்தி' குறிக்கப்பட்டுள்ள நிலையில் அகநானூற்றில் உயர்திணைக்குரிய பெயராக ஆதிமந்தி என்ற பெண்ணினைக் குறித்து நிற்கின்றதனை,

"இனியான் விடுக்குவென் அல்லென் மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந்து உறைய"[46]

என்ற பாடலடிகளின் மூலம் புலனாகின்றது.

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களில் மந்தி என்ற பெயர் பெண் குரங்கினைக் குறித்து 'முப்பத்தைந்து (35)' இடங்களிலும், உயர்திணை (ஆதிமந்தி என்ற பெண்) குறித்து ஓரிடத்திலுமாக 'முப்பத்தாறு (36)' இடங்களில் எடுத்தாளப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகின்றது.

மந்தி என்ற பெண்பாற்பெயர் சங்க அக இலக்கியங்களில் 'முப்பத்தாறு (36)' இடங்களிலும்; புறநூற்களில் 'ஆறு' இடங்களிலும், அகப்புற நூலில் ஓரிடத்திலும், ஆற்றுப்படை நூற்களில் 'ஆறு' இடங்களிலுமாக 'நாற்பத்தொன்பது (49)' இடங்களில் பதிவாகியிருப்பதைக் காணமுடிகின்றது.

**பாட்டி**

*'பாட்டி' என்னும் பெயர் பன்றி, நாய், நரி ஆகியவற்றின் பெண்ணினத் திற்குரியதாக மரபியல் வரையறுத்துள்ளது. சங்க அக இலக்கியங்களில் அகநா னூறு மட்டும் ஓரிடத்தில் உயர்திணைக்குரிய பெயராக (பாண் மகளிர்) அடை டயாளப்படுத்தியுள்ளது. மரபியல் வரையறுத்த விலங்கினங்களுக்குரிய பெயர ாகச் சங்க அக இலக்கியங்களில் பதிவுசெய்யப்படவில்லை.*

**பாணன் மனைவி**

*"வேட்டம் மறந்து துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி"[47]*

*என்ற அகநானூற்றுப் பாடலடியில் பாண்மகளிரைக் குறிக்கும் பொருட்டு 'பா ட்டி' என்னும் பெண்பாற்பெயர் இடம்பெற்றிருப்பதை அறிய முடிகின்றது. இவற்றுடன் பரிபாடலில் (10:37) வயதில் மூத்த பெண்ணைக் குறித்தும், மது ரைக்காஞ்சியில் (749) பாணியைக் குறித்தும் 'பாட்டியர்' என்ற பெயரால் பதிவுசெய்துள்ளதையும் நோக்க முடிகிறது.*

**பிணை**

*பிணை என்ற பெண்பாற்பெயர் புல்வாய், நவ்வி, உழை, கவரி ஆகிய ம ானினங்களுக்குரிய பெயராக மரபியல் சுட்டியுள்ளது. சங்க அக இலக்கியங்க ளில் முல்லைப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்களில் மானிற்குரிய பெயராக எ டுத்தாளப்பட்டுள்ளது.*

*பிணை எனும் பெயர் நற்றிணையில் 'எட்டு' இடங்களிலும், குறுந்தொ கையில் 'நான்கு' இடங்களிலும், ஐங்குறுநூற்றில் 'ஏழு' இடங்களிலும், கலித்தொ தாகையில் 'எட்டு' இடங்களிலும், அகநானூற்றில் 'இருபத்திரண்டு (22)' இட ங்களிலும், குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலுமாக "ஐ ம்பத்தொரு (51)"[48] இடங்களில் பதிவுசெய்யப்பட்டிருப்பதை,*

*"கலை ஒழி பிணையின் கலங்கி மாறி,"*

*"ஏமான் பிணையின் வருந்தி னெனாக,"*

*"மாஎருத்து இரலை மடப்பிணை தழுவ,"*

“கவைக் கதிர் கறித்த காமர் மடப்பிணை,”

“ஏறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு,”

“வெரூஉம் மான் பிணையின் ஒரீஇ,”

“மடப்பிணை தழீஇய மாஎருத்து இரலை,”

“உழைபடு மான் பிணை தீண்டலின் இழைமகள்,”

“சிறுதலைப் பிணையின் தீர்த்த நெறி கோட்டு
இரலை மானையும் காண்பர் கொல் நமரே,”

“பிணங்கு அரில் மென்கொம்பு பிணையொடு மாந்தி
மான் ஏறு உகளும் கானம் பிற்பட,”

“மான் ஏறு மடப்பிணை தழீஇ மருள் கூர்ந்து,”

“அரிமடப் பிணையோடு அல்குநிழல் அசைஇ,”

“மடமான் அம்பிணை மறியொடு திரங்க,”

“மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்,”

“மான் பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்,”

“பெருமடமான் பிணை அலைத்த,”

“மறிஇடைப் படுத்தமான் பிணை போல,”

“மறியுடை மான் பிணை உகள,”

“மாதர் மான் பிணை மறியொடு மறுக,”

“இன்நிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்கு,”

“பிணையும் காணிரோ பிரியுமோ அவையே,”

“பேதுறு மடமொழி பிணை எழில மான்நோக்கின்,”

“பேர் எழில் மலர் உண்கண் பிணை எழிமான் நோக்கின்,”

“சோலைமலர் வேய்ந்த மான்பிணை அன்னார் பலர்நீ,”

“வெரூஉப் பிணை மான் நோக்கின் நல்லாட் பெறூஉம்,”

“மாழை மடமான் பிணை இயல்வென்றாய் நின்ஊசல்,”

“மருள்கூர் பிணை போல் மயங்க வெந்நோய் செய்யும்,”

“ஏறுடை இனத்த நாறு உயிர் நவ்வி

வலைகாண் பிணையின் போகி ஈங்குஓர்,"
"அம்காட்டு ஆர்இடை மடப்பிணை தழீஇ,"
"அண்ணல் இரலை அமர் பிணை தழீஇ,"
"வெரூஉம் மான் பிணையின் ஒரீஇ நின்ற,"
"மறிஆடு மருங்கின் மடப்பிணை அருத்தி,"
"கருங்கோட்டு இரலைக் காமர் மடப்பிணை
மருண்ட மான் நோக்கம் காண்தொறும்,"
"கலை பிணை விளிக்கும் கானத்து ஆங்கண்,"
"வரிமரல் கறிக்கும் மடப்பிணை,"
"கணைக்கால் அம்பிணைக் காமர் புணர்நிலை,"
"உழைமான் அம்பிணை இனன் இரிந்து ஓட,"
"புள்ளிஅம் பிணையொடு வதியும் ஆங்கண்,"
"மான்பிணை நோக்கின் மடநல்லாளை,"
"ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பிணை,"
"காடுதேர் மடப்பிணை அலற கலையின்,"
"கணைக்கால் அம்பிணை ஏறுபுறம் நக்க,"
"புள்ளி அம்பிணை உணீஇய உள்ளி,"
"சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை,"
"மறியுடை மடப்பிணை தழீஇ புறவின்,"
"கதிர்க்கால் அம்பிணை உணீஇய புகல்ஏறு,"
"உயங்குநடை மடப்பிணை தழீஇய வயங்கு பொறி,"
"பிணைஏர் நோக்கம் பெருங்கவின் கொளவே,"
"மேய்பிணைப பயிரும் மெலிந்துஅழி படர்குரல்,"
"பிணைஏர் நோக்கின் மனையோள் மடுப்ப,"
"அறுகோட்டு இரலையொடு மான்பிணை உகளவும்"

என்னும் சங்க அகச் சான்றுகள் விளக்குகின்றன. இவற்றுள் உழைக்குரிய பெயராக ' இரண்டு' இடங்களிலும், நவ்விக்குரியதாக ஓரிடத்தில் மட்டும் இடம்பெற்று

ள்ளன. இவற்றுடன் புறநூற்களில் புறநானூறு (2:21, 23:19, 132:6, 157:11, 320 :4, 320:8, 354:10) 'ஏழு' இடங்களிலும், மதுரைக்காஞ்சி (27, 276, 555) 'மூன்று' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் திருமுருகாற்றுப்படை (216), மலைபடுகடாம் (404) முறையே ஓரிடத்தில் மானுக்குரிய பெயராகச் சுட்டப்பட்டிருப்பதையும் காணமுடிகின்றது.

'பிணை' எனும் பெண்பாற்பெயர் சங்க அக இலக்கியங்களில் 'ஐம்பத்தொரு (51)' இடங்களிலும், புறநூற்களில் 'பத்து (10)' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களில் 'இரண்டு' இடங்களிலுமாக 'அறுபத்து மூன்று (63)' இடங்களில் பதிவாகியுள்ளதனை அறியமுடிகிறது.

**பிணவு**

'பிணவு' என்ற பெண்பாற்பெயரினைப் பன்றி, புல்வாய், நாய் ஆகிய விலங்கினங்களுக்குரிய பெயராக மரபியல் விளம்பியுள்ளது. சங்க அக நூற்களில் செந்நாய், நீர்நாய், பன்றி ஆகியவற்றிற்கும்; புது மரபாகப் புலி, கரடி, வெருகு (காட்டுப்பூனை) ஆகியவற்றிற்குமுரிய பெயராக எடுத்தாளப்பட்டிருக்கின்றது.

**செந்நாய்**

செந்நாய்க்குரிய பெண்பாற்பெயராக நற்றிணை ஓரிடத்திலும், ஐங்குறுநூறு 'இரண்டு' இடங்களிலும், அகநானூறு 'மூன்று' இடங்களிலுமாக "ஆறு"[49] இடங்களில் இப்பிணவு பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றை,

"பசிஅட முடங்கிய பைங்கண் செந்நாய்
..........................................................
பொய்யா மரபின் பிணவு நினைந்து இரங்கும்,"
"வள்ளயிற்றுச் செந்நாய் வயவுஉறு பிணவிற்கு,"
"ஈர்ம் பிணவு புணர்ந்த செந்நாய் ஏற்றை,"
"மென்புனிற்று அம்பிணவு பசித்தென பைங்கண்

*செந்நாய் ஏற்றை கேழல் தாக்க,"*

*"வள் எயிற்றுச் செந்நாய் வருந்து பசிப் பிணவோடு,"*

*"ஊன் நசைப் பிணவின் உறுபசி களைஇயர்*

*..........................................................*

*ஒடுங்குறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை"*

*ஆகிய பாடலடிகளின் வழி அறிய முடிகின்றது.*

**நீர்நாய்**

*"உண்ணாப் பிணவின் உயக்கம் சொலிய*

*நாள்இரை தரீஇய எழுந்த நீர்நாய்"*[50]

*என்ற அகநானூற்றப் பாடலடிகளில் நீர்நாய்க்குரிய பெண்பாற் பெயராகச் சு ட்டப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.*

**பன்றி**

*"பிணர்ச் சுவல் பன்றி தோல்முலைப் பிணவொடு"*[51]

*என்ற நற்றிணைப் பாடலடியில் பன்றிக்குரிய பெண்பாற்பெயராக இடம்பெற்றி ருப்பது புலனாகின்றது. இவற்றுடன் பெரும்பாணாற்றுப்படை (342), மதுரைக்காஞ்சி (17 4) முறையே ஓரிடத்தில் பன்றிக்குரிய பெண்பாற்பெயராக அடையாளப்படுத் தப்பட்டுள்ளது.*

**புலி**

*நற்றிணை, அகநானூறு முறையே 'ஐந்து' இடங்களிலுமாக "பத்து (10)"*[52] *இடங் களில் 'பிணவு' என்ற பெயர் புலியின் பெண்ணினத்திற்குரிய பெயராகி நிற்பதை,*

*"ஈன்றுகான் மடிந்த பிணவுப்பசி கூர்ந்தென*

*..........................................................*

*புலிபார்த்து உறையும் புல்அதர்ச் சிறுநெறி,"*

*"பிணவுப் புலி வழங்கும் அணங்கு அருங்கவலை,"*

*"கல் அளைச் செறிந்த வள்உகிர்ப் பிணவின்*

*..........................................................*

*செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை,"*

*"ஊன்தின் பிணவின் உயங்குபசி களைஇயர்*

*..........................................................*

*கடுங்கண் வயப்புலி ஒடுங்கும் நாடன்,"*

*"ஈன்பிணவு ஒடுக்கிய இருங்கேழ் வயப்புலி,"*

*"ஈர்உயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய*

*இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை,"*

*"துறுகல் விடர்அளைப் பிணவுப்பசி கூர்ந்தென*

*பொறிகிளர் உழுவைப் போழ்வாய் ஏற்றை,"*

*"கடையல்அம் குரல வாள்வரி உழுவை*

*பேழ்வாய்ப் பிணவின் விழுப்பசி நோனாது,"*

*"உண்ணாப் பிணவின் உயக்கம் தீரிய*

*..........................................................*

*..........................................................*

*புலவுப் புலி புரண்ட புல்சாய் சிறுநெறி,"*

*"பைங்கண் வல்லியம் கல்அளைச் செறிய*

*முருக்கு அரும்புஅன்ன வள்உகிர் வயப்பிணவு"*

*எனும் பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது.*

**கரடி**

*"பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை*

*..........................................................*

*தோல்முலைப் பிணவொடு திளைக்கும்"*[53]

*என்ற அகநானூற்றுப் பாடலடிகளில் கரடிக்குரிய பெண்பாற் பெயராகப் 'பிண வு' எடுத்தாளப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகின்றது.*

**வெருகு**

*காட்டுப் பூனைக்குரிய பெண்பாற்பெயராகப் ‘பிணவு’ இடம் பெற்றிரு ப்பதை அகநானூற்றின் மூலம் அறிய முடிகின்றது. இதனை,*

*“குவிஅடி வெருகின் பைங்கண் ஏற்றை*

*ஊன்நசைப் பிணவின் உயங்குபசி களைஇயர்”*[54]

*என்ற அடிகளின் மூலம் புலனாகின்றது.*

**நாய்**

*சங்க அக இலக்கியங்களில் நாய்க்குரிய பெண்பாற்பெயராகப் ‘பிணவு’ இடம் பெறாத நிலையில், மலைபடுகடாமில் (177) மட்டும் நாய்ப்பிணவு என்று சுட்டப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.*

**யானை**

*மரபியலும், சங்க அக இலக்கியங்களும் யானைக்குரிய பெண்பாற்பெயராகப் பிணவு என்பதனைக் குறிக்காத நிலையில்; பரிபாடல் (10:15) மட்டும் யானைப்பிணவு என்று சுட்டியிருப்பது நோக்குதற்குரியது.*

**எயிற்றி**

*‘பிணவு’ எனும் பெண்பாற்பெயர் விலங்கினங்களுக்கு மட்டும் மரபியல் விளம்பியுள்ள நிலையினில், பெரும்பாணாற்றுப்படை உயர்திணைக்குரிய பெயராக எடுத்தாளப்பட்டிருப்பதை,*

*“ஈன்பிணவு ஒழியப் போகி நோன்காழ்*

.........................................................

.........................................................

*நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்” (பெரும்பாண்.90-94)*

*என்ற பாடலடிகளின் வழி அறியலாகின்றது.*

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களில் ‘பிணவு’ எனும் பெண்பாற்பெயர் செந்நாய்க்கு ‘ஆறு’ இடங்களிலும், நீர்நாய், பன்றிக்கு முறையே ஓரிடத்திலும், புலிக்குப் ‘பத்து (10)’ இடங்களிலும், கரடி, காட்டுப்பூனைக்கு முறையே ஓரிடத்திலுமாக ‘இருபது (20)’ இடங்களில் பதிவுசெய்யப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது. புல்வாய்க்குரிய (மானினம்) பெயராகச் சங்க அக இலக்கியங்களில் பதிவு செய்யப்படாதது சுட்டத்தக்கதாகும்.

‘பிணவு’ என்ற பெண்பாற்பெயர் நற்றிணையில் ‘ஏழு’ இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ‘இரண்டு’ இடங்களிலும், அகநானூற்றில் ‘பதினொரு (11)’ இடங்களிலுமாக ‘இருபது (20)’ இடங்களிலும், அகப்புற நூலான பரிபாடலில் ஓரிடத்திலும், புறநூலான மதுரைக்காஞ்சியில் ஓரிடத்திலும், பெரும்பாணாற்றுப்படையில் ‘இரண்டு’ இடங்களிலும், மலைபடுகடாமில் ஓரிடத்திலுமென்று ‘இருபத்தைந்து (25)’ இடங்களில் பதிவாகியுள்ளது.

**பிடி**

மரபியலில் ‘பிடி’ எனும் பெண்பாற்பெயர் பெண் யானைக்குரியதாகச் சுட்டப்பட்டிருக்கின்றது. சங்க அக இலக்கியங்களுள் குறிஞ்சிப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்களுள் யானைக்குரிய பெண்பாற்பெயராகவே இடம்பெற்றுள்ளன.

பிடி என்னும் பெயரினைப் பெண் யானைக்குரியதாக நற்றிணையில் ‘இருபத்தொரு (21)’ இடங்களிலும், குறுந்தொகையில் ‘பதின்மூன்று (13)’ இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ‘ஐந்து’ இடங்களிலும், கலித்தொகையில் ‘ஏழு’ இடங்களிலும், அகநானூற்றில் ‘நாற்பத்தினான்கு (44)’ இடங்களிலும், முல்லைப்பாட்டில் ஓரிடத்திலும், பட்டினப்பாலையில் ‘இரண்டு’ இடங்களிலுமாகத் “தொண்ணூற்று மூன்று (93)”[55] இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றை,

“துஞ்சாத் துயரத்து அஞ்சு பிடிப் பூசல்,”

“பூநுதல் இரும்பிடி புலம்ப தாக்கி,”

“பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி,”

“புன்தலை மடப்பிடி கன்றொடு ஆர,”

“பிடி பிளந்திட்ட நார்இல் வெண் கோட்டுப்,”

“மையல் மடப்பிடி இனைய,”

“சூல்முதிர் மடப்பிடி நாள்மேயல் ஆரும்,”

“கயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇயர்,”

“பெருங்களிறு உழுவை தாக்கலின் இரும்பிடி,”

“துஞ்சுபிடி வருடும் அத்தம்,”

“பெருங்கை யானை பிடி எதிர் ஓடும்,”

“கன்றுடை மருங்கின் பிடி புணர்ந்து இயலும்,”

“மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்,”

“துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபட காணாது,”

“முயப்பிடி செவியின் அன்ன பாசடை,”

“பிசிப்பிடி உதைத்த ஓமைச் செவ்வரை,”

“நீடுஇருஞ் சிலம்பின் பிடியொடு புணர்ந்த,”

“புன்தலை மடப்பிடி புலம்பிய குரலே,”

“இரும்பிடித் தடக்கையின் தடைஇய பெரும்புனம்,”

“கடுஞ்சூல் வயப்பிடி கன்று ஈன்று உயங்க,”

“ஒளிதிகழ் விளக்கத்து ஈன்ற மடப்பிடி,”

“பிடிபசி களைஇய பெருங்கை வேழம்,”

“கூழை இரும்பிடிக் கைகரந் தன்ன,”

“மடப்பிடித்த தடக்கை அன்ன பால்வார்ப்பு,”

“தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட,”

“மடப்பிடி பரிசில் மானப்,”

“உயங்குநடை மடப்பிடி வருத்தம் நோனாது,”

“உயங்கு உயிர் மடப்பிடி உலைபுறம் தைவர,”

“கையுடை நல்மாப் பிடியொடு பொருந்தி,”

“மடப்பிடி தழீஇத் தடக்கை யானை,”

“நாகுபிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு,”

“பிடிக்கை அனன பெருங்குரல் ஏனல்,”

“செல்லா தீமோ சிறுபிடி துணையே,”

“முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி,”

“நெடும்புதல் கானத்து மடப்பிடி ஈன்ற,”

“இரும்பிணர்த் துறுகல் பிடிசெத்துத் தழூஉம்நின்,”

“களிறுபிடி தழீஇப் பிறபுலம் படராது,”

“மடப்பிடி தழீஇய மாவே,”

“மாதர் மடப்பிடி போகிய சுரனே,”

“பிடிஊட்டி பன்உண்ணும் களிறு எனவும் உரைத்தனரே,”

“ஒடுங்கா எழில் வேழம் வீழ்பிடிக்கு உற்ற,”

“பிடியொடு மேயும் புன்செய் யானை,”

“மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி,”

“விறல் மலை வியல்அறை வீழ்பிடி உழையதா,”

“தொய்யல் அம்தடக்கையின் வீழ்பிடி அளிக்கும்,”

“பிடிதுஞ்சு அன்ன அறைமேல நுங்கின்,”

“பிடி படி முறுக்கிய பெருமரப் பூசல்,”

“பிடிக்கை அன்ன பின்னகம் தீண்டி,”

“என்றூழ் உழந்த புன்தலை மடப்பிடி,”

“புன்தலை மடப்பிடி உணீஇயர் அம்குழை,”

“புன்தலை மடப்பிடிப் பூசல் பலவுடன்,”

“கடுஞ்சூல் மடப்பிடி நடுங்கும் சாரல்,”

“கறைஅடி மடப்பிடி கானத்து அலற,”

“ஈன்றுநாள் உலந்த மெல்நடை மடப்பிடி,”

“ஓய்பசிப் பிடியொடு ஒருதிறன் ஒடுங்க,”

“பிடிமடை களிற்றின் தோன்றும்,”

“புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்,”

“இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்,”

“கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணி,”

“சிறுபல் கேணிப் பிடி அடி நசைஇ,”

“கயந்தலை மடப்பிடி பயம்பில் பட்டென,”

“ஈன்றணி இரும்பிடி தழீஇ களிறுதன்,”

“இரும்பிடித் தடக்கைமான நெய் அருந்து,”

“பிடிமடிந் தன்ன கல்மிசை ஊழ் இழிபு,”

“வயவுப்பிடி இனத்தின் வயின்வயின் தோன்றி,”

“நாறுஉயிர் மடப்பிடி தழீஇ வேறுநாட்டு,”

“கடுஞ்சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்டு,”

“கயந்தலை மடப்பிடி இனன் ஏமார்ப்ப,”

“பிடிபடு பூசலின் எய்தாது ஒழிய,”

“இரும்பிடி இரியும் சோலை,”

“பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்,”

“இரும்பிடி இரியும் சோலை,”

“கயந்தலைக் குழவிக் கவிஉகிர் மடப்பிடி,”

“பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்,”

“பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போல,”

“பல்மர ஒருசிறைப் பிடியொடு வதியும்,”

“இரும்பிடித் தொழுதியின் இனம்தலை மயங்காது,”

“செறிநடைப் பிடியொடு களிறுபுணர்ந் தென்னக்,”

“இரும்பிடிப் பரிசிலர் போலக் கடைநின்று,”

“கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்,”

“அடக்குவம் மன்னோ தோழி மடப்பிடி
மழை தவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று,”

“யாழ் இசைப் பறவை இமிர பிடி புணர்ந்து,”

“இரும்பிடித் தொழுதியின் ஈண்டுவன குழீஇ,”

"விண்பொரக் கழித்த திண்பிடி ஒள்வாள்,"

"கன்று ஒழித்து ஓடிய புன்தலை மடப்பிடி,"

"வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை,"

"பிடிபுணர் களிற்றின் எம்மொடு ஆடி,"

"பிடி இடு பூசலின் அடிபடக் குழிந்த,"

"வீழ்பிடி கெடுத்த வெண்கோட்டு யானை,"

"உயங்குபிடி தழீஇய மதன்அழி யானை,"

"பிடிக்கணம் மறந்த வேழம் வேழத்துப்,"

"பெருங்கை யானை பிடி புக்காங்கு,"

"பெருநல் யானையொடு பிடிபுணர்ந்து உறையவும்"

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. இவற்றுடன் புறநூற்களான பதிற்றுப்ப த்து (12:13, 43:5, 43:22, 82:6) 'நான்கு' இடங்களிலும், புறநானூறு (40:10, 4 4:1, 130:2, 151:4, 181:3, 234:2, 303:10, 308:10, 345:8, 369:26, 389:9) 'பதி னொரு (11)' இடங்களிலும்; மதுரைக்காஞ்சி (634, 676), நெடுநல்வாடை (83, 178) முறையே 'இரண்டு' இடங்களிலும்; அகப்புற நூலான பரிபாடலில் (6:2 6, 10:29, 10:42, 10:43, 10:47, 10:51, 12:27, 12:47) 'எட்டு' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களான திருமுருகாற்றுப்படையுள் (304) ஓரிடத்திலும், பொருநர ாற்றுப்படையுள் (19,124,191), மலைபடுகடாம் (127, 307, 457) முறையே 'மூன் று' இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படையுள் (53,186,199,358) 'நான்கு' இ டங்களிலும் பெண் யானைக்குரிய பெயராகக் காணக்கிடைக்கின்றன.

மரபியலில் பிடியென்னும் பெண்பாற்பெயர் பெண் யானைக்கு உரியதா க மட்டும் வரையறுத்துள்ளது. ஆனால் சங்க அக இலக்கியங்களில் 'பிடி' எனும் மு றைமை கைப்பிடிக்கும் கடிவாளத்திற்கும் உரித்தாகி நிற்பதைக் காணமுடிகின் றது.

**கைப்பிடி**

‘பிடி’ என்னும் சொல்வழக்குமுறை சங்க அக இலக்கியங்களில் கைப்பிடிக்கு எடுத்தாளப்பட்டுள்ளது. இதனை ஐங்குறுநூற்றில் ஓரிடத்திலும், கலித்தொகையில் ‘இரண்டு’ இடங்களிலும், அகநானூறு, முல்லைப்பாட்டு முறையே ஓரிடத்திலுமாக “ஐந்து”[56] இடங்களில்,

“கோல் பிடி குருடர் ஏய்க்கும்,”

“தாரின் வாய்க் கொண்டு முயங்கி பிடி மாண்டு,”

“பிடி அமை நூலொடு பெய்ம் மணிகட்டி,”

“பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி,”

“இரவுபகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்”

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இவற்றுடன் புறநானூறு (98:11), மதுரைக்காஞ்சி (637) ஆகிய புறநூற்களிலும், ஆற்றுப்படையுள் மலைபடுகடாமிலும் (105) கைப்பிடிக்கு உரியதாகப் ‘பிடி’ எடுத்தாளப் பட்டிருப்பதையும் காண முடிகின்றது.

**கடிவாளம்**

“உத்தி ஒரு காழ் நூல் உத்தரியத் திண்பிடி”[57]

என்ற கலித்தொகைப் பாடலடியில் ‘பிடி’ என்னும் பதமானது கடிவாளத்திற்கு உரித்தாகி நிற்பதனைக் காணமுடிகின்றது.

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களுள் ‘பிடி’ என்பது நற்றிணையில் ‘இருபத்தொரு (21)’ இடங்களிலும், குறுந்தொகையில் ‘பதின்மூன்று (13)’ இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ‘ஆறு’ இடங்களிலும், கலித்தொகையில் ‘பத்து (10)’ இடங்களிலும், அகநானூற்றில் ‘நாற்பத்தைந்து (45)’ இடங்களிலும், முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ‘இரண்டு’ இடங்களிலுமாகத் ‘தொண்ணூற்றுஒன்பது (99)’ இடங்களில் பதிவாகியிருப்பதைக் காணமுடிகின்றது. மேலும் புறநூற்களான பதிற்றுப்பத்தில் ‘நான்கு’ இடங்களிலும், புறநானூற்றில் ‘பன்னிரண்டு (12)’ இடங்களிலும், மதுரைக்காஞ்சியில் ‘மூன்று’ இடங்களிலும்,

நெடுநல்வாடையில் 'இரண்டு' இடங்களிலும், அகப்புற நூலான பரிபாடலில் 'எட்டு' இடங்களிலும், ஆற்றுப்படை நூற்களான திருமுருகாற்றுப்படையில் ஓரிடத்திலும், பொருநராற்றுப்படையில் 'இரண்டு' இடங்களிலும், சிறுபாணாற் றுப்படையில்'மூன்று' இடங்களிலும், பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் முறையே'ந ான்கு' இடங்களிலுமாக'நூற்றிநாற்பத்திரண்டு (142)' இடங்களில் இடம்பெற்றுள்ளை தக் காணமுடிகின்றது.

**பிணவல்**

மரபியல் பன்றி, புல்வாய், நாய் ஆகிய விலங்கினங்களுக்குரிய பெண்பா ற்பெயராகப் பிணவல் என்பதனைச் சுட்டியுள்ளது. சங்க அக இலக்கியங்களில் பன்றிக்குரிய பெயராக மட்டும் அகநானூறு "இரண்டு"[58] இடங்களில் பதிவு செய்துள்ளது. இதனை,

"செந்நாய் ஏற்றை கேழல் தாக்க
இரியல் பிணவல் தீண்டலின் பரீஇ,"
"நால் முலைப் பிணவல் சொலிய கான் ஒழிந்து
.........................................................
தறுகண் பன்றி நோக்கி கானவன்"

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**ஆ**

பெற்றம், எருமை, மரை ஆகிய மூன்றனுக்கும் 'ஆ' என்ற பெண்பாற்பெ யர் உரியதாகும் என்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களில் பெற்றம், எரு மை ஆகியவற்றிற்குரிய பெயராக எடுத்தாளப்பட்டிருப்பினும், மரைக்குரிய பெ யராகப் பதிவு செய்யப்படவில்லை என்பது சுட்டத்தக்கதாகும்.

**பெற்றம்**

'ஆ' என்ற பெண்பாற்பெயர் பெற்றம் எனும் பெண் மாட்டிற்குரியதாக சங்க அக இ லக்கியங்களுள் ஐங்குறுநூறு, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை நீங்கலாக ஏ

னைய அகநூற்களில் "நாற்பது (40)"[59] இடங்களில் எடுத்தாண்டிருப்பதைப் பின்வரும் பாடலடிகள் வழி அறியமுடிகிறது,

"பல்ஆ நெடுநிரை வில்லின் ஒய்யும்,"

"உச்சிக் கட்டிய கூழை ஆ வின்,"

"இல்எழு வயலை ஈற்று ஆ தின்றென,"

"குழவிச் சேதா மாந்தி அயலது,"

"ஆ பூண் தெண்மணி இயம்பும்,"

"கன்றுடை புனிற்று ஆ தின்ற மிச்சில்,"

"தாதுஎரு மறுகின் ஆ புறம் தீண்டும்,"

"சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா,"

"பல்ஆ தந்த கல்லாக் கோவலர்,"

"ஆபுலம் புகுதரு பேர்இசை மாலை,"

"பல்ஆ நெடுநெறிக்கு அகன்று வந்தென,"

"தாளித் தண்பவர் நாள்ஆ மேயும்,"

"பல்ஆ புகுதரூஉம் புல்லென் மாலை,"

"மூதா தைவந் தாங்கு,"

"பல்ஆ பயந்த நெய்யின் தொண்டி,"

"கன்று இல் ஓர் ஆ விலங்கிய,"

"ஆ போல் படர்தக நாம்,"

"ஆ முனியா ஏறுபோல் வைகல் பதின்மர்,"

"கடுஞ்சூல் சூ நாகுபோல் நிற்கண்டு நாளும்,"

"நீ நீங்கு கன்று சேர்ந்தர்கண் கதஈற்று ஆ சென்றாங்கு,"

"அத்தக் கள்வர் ஆ தொழு அறுத்தென,"

"முனை ஆத்தந்து முரம்பின் வீழ்த்த,"

"ஆ கொள் வயப்புலி ஆகும் அஃது எனத்தம்,"

"புனிற்று ஆப் பாய்தெனக் கலங்கி யாழ்இட்டு,"

"ஆபூண் தெண்மணி ஐது இயம்பு இன்இசை,"

*“சேதா எடுத்த செந்நிலக் குரூஉத் துகள்,”*

*“அதர் பார்த்து அல்கும் ஆ கெழு சிறுகுடி,”*

*“குவை இமில் விடைய வேற்று ஆ ஒய்யும்,”*

*“கொழுப்பு ஆ தின்ற கூர்ம்படை மழவர்,”*

*“நாள் ஆ உய்த்த நாமவெஞ் சுரத்து,”*

*“மூதா தின்றல் அஞ்சி காவலர்,”*

*“ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ,”*

*“எல்ஊர் எறிந்து பல் ஆத் தழீஇய,”*

*“நாகு ஆ வீழ்த்து திற்றி தின்ற,”*

*“ஆர் இருள் நடுநாள் ஏர்ஆ உய்ய,”*

*“பாசிலை அமன்ற பயறுஆ புக்கென,”*

*“கொழுப்பு ஆ எறிந்து குருதி தூஉய்,”*

*“ஆ கொள் மூதூர்க் கள்வர் பெருமகன்,”*

*“ஓர் ஆ யாத்த ஒருதூண் முன்றில்,”*

*“ஆ காண் விடையின் அணிபெற வந்துஎம்.”*

*இவற்றுடன் புறநூற்களில் பதிற்றுப்பத்து (13:6, 21:21, 22:15, 62:13, 77: 11, 78:14) ‘ஆறு’ இடங்களிலும், புறநானூறு (9:1, 204:7, 258:10, 261:11, 263 :5, 323:2, 339:1, 342:13) ‘எட்டு’ இடங்களிலும், மதுரைக்காஞ்சி (157) ஓரிடத்திலு ம், ஆற்றுப்படையுள் பொருநராற்றுப்படை (151) ஓரிடத்திலும், பெரும்பாணாற்றுப்ப டை (141, 243, 306) ‘மூன்று’ இடங்களிலும் மாட்டிற்குரிய பெண்பாற்பெயர ாக இடம் பெற்றிருப்பதையும் அறியமுடிகின்றது.*

**எருமை (ஆ)**

*“கருங்கோட்டு எருமைச் செங்கண் புனிற்றுஆ”*[60]

*என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடியில் பெண் எருமையைக் குறிக்கும் முகத்தான் ‘ ஆ’ எடுத்தாளப்பட்டுள்ளது.*

இவ்வாறாகச் சங்க அக இலக்கியங்களில் 'ஆ' என்ற பெண்பாற்பெயர் மாட்டின் பெண்பாற்பெயர் குறித்து 'நாற்பது (40)' இடங்களிலும், பெண் எருமை குறித்து ஓரிடத்திலும் பதிவு செய்யப்பட்டிருப்பது குறிக்கத்தக்கது.

'ஆ' என்னும் பெண்பாற்பெயரினை நற்றிணையில் 'பத்து (10)' இடங்களிலும், குறுந்தொகையில் 'ஆறு' இடங்களிலும், ஐங்குறுநூற்றில் ஓரிடத்திலும், கலித்தொகையில் 'நான்கு' இடங்களிலும், அகநானூற்றில் 'பத்தொன்பது (19)' இடங்களிலுமாக 'நாற்பத்தொரு (41)' இடங்களில் காணமுடிகின்றது. மேலும் பதிற்றுப்பத்தில் 'ஆறு' இடங்களிலும், புறநானூற்றில் 'எட்டு' இடங்களிலும், மதுரைக்காஞ்சி, பொருநராற்றுப்படை முறையே ஓரிடத்திலும், பெரும்பாணாற்றுப்படையில் 'மூன்று' இடங்களிலுமென்று 'அறுபது (60)' இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது சுட்டுதற்குரியது.

**பிணா**

'பிணா' என்ற பெண்பாற்பெயர் உயர்திணை மக்களுக்குரிய பெயராகக் குறித்துள்ளது மரபியல்.

சங்க அக இலக்கியங்களில் 'பிணா' என்ற பெயர் எடுத்தாளப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆயினும் இப்பெயர் அகப்புற நூலான பரிபாடலில் (19:95) மட்டும் உயர்திணைக்குரிய பெயராகவே எடுத்தாண்டிருப்பதை,

"குறப்பிணாக் கொடியைக் கூடியோய்" (பரி.19:95)

என்ற அடியில் குறப் பெண்ணைக் குறித்து நிற்பதனைக் காணமுடிகின்றது.

இவ்வாறாக மரபியலில் வகுக்கப்பெற்ற பெண்பாற்பெயர்கள் நீங்கலாக, சங்க அக இலக்கியங்களில் ஆன், உழை, பிண, புருவை ஆகியன விலங்கினங்களுக்குரியதாகச் சுட்டியுள்ளதுடன், அஃதை (அகநா.96:12), அஞ்ஞை (அகநா.15:19, 145:22), அட்டிலோள், அயலிலாட்டி, அரிவை, அருங்காப்பினள்,

*அளியள், அனையோள், அன்னள், அன்னாய், அன்னை, அன்னோள், ஆயம், ஆயிழை, ஆய்ச்சியர், இகுளை, இறைவி, இனியோள், உடையள், உழையள் (நற்.356:8), உறவி, உறைவி, ஊங்காள், எயிற்றள், எயிற்றி, எளியள், ஏதிலாட்டி, ஏதிலாள், ஐயை, ஐயோள், கண்ணி, கழுது, கன்னி, கிழத்தி, கொடிச்சி, கெடிச்சியர், கொண்டி (நற்.174:9), கொடியள், கொடியை, கோதை, செய்யோள், செல்வி, செவிலி, செவிலியர், ஞாய், ஞாயர், தங்கை, தாய், தாயர், தமியே, திருமாவுண்ணி (நற்.216:9), தெரிவை, தெரியள், தையல், தொடியோள், தோழி, நலத்தாள், நொதுமலாட்டி, நுவ்வை, பரத்தை, புழைத்தி, பெண்டிர், பெண்டு, பெண்மை, பெரியள், பேதை, மாஅயோள், மகள், மகளிர், மகடூஉ, மங்கையர், மடந்தை, மடவீர், மடவை, மதுகையள், மருதி, மனைமுதல் (அகநா.51:13), மனையோள், மனைவி, மாதர், மாயோள், மொழியாள், யாய், வள்ளி, விறலி, வெள்ளிவீதி (அகநா.147:9) போன்றவை உயர்திணை (மக்கட்குரிய) பெண்பாற் பெயர்களாகச் சுட்டப்பட்டுள்ளன.*

**தொகுப்புரை**

♦ *இளமைப்பெயர், ஆண்பாற்பெயர்களை அடுத்து பெண்பாற் பெயர்களை மூன்றாவதாக மரபியலில் தொல்காப்பியர் வகுத்துள்ளார்.*

♦ *அஃறிணையில் பேடை, பெடை, பெட்டை, மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி, பிணவல், ஆ ஆகியவற்றையும் உயர்திணையில் பெண், பிணாவும் பெண்பாற் பெயர்களாக வரையறுக்கப்பட்டுள்ளன.*

♦ *நிகண்டுகளும், உயர்தரக் கட்டுரை இலக்கணமும் பெண்பாற் பெயர்களை மரபியல் அடிப்படையிலும் சமகால வழக்கு முறைகளிலும் எடுத்தியம்பியுள்ளன.*

♦ *பேடை எனும் பெண்பாற்பெயர் பறவையினம் அனைத்திற்கும் பொதுவானதாகச் சுட்டப்பட்டுள்ளது.*

♦ *சங்க அக நூல்களில் 'பேடை' எனும் பெண்பாற்பெயரானது காட்டுக் கோழிக்கு ஓரிடத்திலும், கோழிக்கு 'இரண்டு' இடங்களிலும், சம்பங்கோழிக்கு இரண்டிடங்களிலும், புறாவிற்கு 'மூன்று' இடங்களிலும், நாரைக்கு 'மூன்று' இடங்களிலும், கொக்கு, குருவி, ஊர்க்குருவி, நீர்க்காக்கை, காக்கை, வங்கா, அன்னம், வாவல், அன்றில், காடை முறையே ஓரிடத்திலும், மயிலுக்கு இரண்டிடங்களிலும், பருந்திற்கு ஐந்திடங்களிலுமாக 'இருபத்தொன்பது (29)' இடங்களில் குறிப்பிடப் பட்டுள்ளன.*

♦ *இவை நூல் அடிப்படையில் நற்றிணையில் 'ஒன்பது', குறுந்தொகையில் 'நான்கு,' ஐங்குறுநூற்றில் 'ஐந்து,' கலித்தொகையில் 'ஒன்று,' அகநானூற்றில் 'பத்து (10)' இடங்களில் பயின்று வந்துள்ளன.*

♦ ‘பெடை’ எனும் பெண்பாற்பெயரானதும் பறவையினம் அனைத்திற்கும் பொதுவ ானதாக அமையும் என்கிறது மரபியல்.

♦ பெடையானது மயிலுக்கு ‘மூன்று’ இடங்களிலும், புறாவிற்கு ‘ஆறு’ இடங்க ளிலும், நீர்க்காக்கைக்கு ‘இரண்டு’ இடங்களிலும், நாரைக்கு ஓரிடத்திலும், அன்றிலுக்கு ‘மூன்று’ இடங்களிலும், சம்பங்கோழிக்கு ஓரிடத்திலும், குயிலுக் கு ‘நான்கு’ இடங்களிலும், பறவைக்கு ஓரிடத்திலும், பருந்திற்கு ‘இரண்டு’ இட ங்களிலும், குறும்பூழ், எருமை முறையே ஓரிடத்திலுமாக ‘இருபத்தேழு (27) ’ இடங்களில் இப்பெண்பாற்பெயர் இடம்பெற்றுள்ளது.

♦ பெடைப்பெயர் பறவையினங்களுக்குரியதாக மரபியல் வரையறுத்துள்ள நி லையில், கலித்தொகை மட்டும் எருமைக்குரிய பெண்பாற்பெயராகச் சுட்டி யிருப்பது நோக்கத்தக்கது.

♦ இது எட்டுத்தொகை அக நூற்களான நற்றிணையில் ‘ஐந்து,’ குறுந்தொகையி ல் ‘நான்கு,’ ஐங்குறுநூற்றில் ‘இரண்டு,’ கலித்தொகையில் ‘ஏழு,’ அகநானூற்றில் எட்டாகப்பதிவு செய்யப்பட்டுள்ளன.

♦ பெட்டை என்னும் இப்பெண்பாற்பெயரானது ஒட்டகம், குதிரை, கழுதை, மரை (காட்டுப் பசு) ஆகிய விலங்கினங்களுக்கு உரியதாகச் சுட்டப்பட்டிரு ப்பினும் சங்க அக இலக்கியங்களுள் இப்பெயரானது இடம் பெறாதது குறி ப்பிடத்தக்கது.

♦ ‘பெண்’ எனும் இப்பெயரானது உயர்திணைக்குரிய மக்களுக்கு மட்டும் உரி யதாக மரபியல் சுட்டப்பட்டிருப்பினும் சங்க அக இலக்கியங்களுள்உயர்திணைப்பெயராகமட்டுமல்லாதுஅஃறிணைகளான புலி, பன்றி ஆகிய விலங்கினங்களு க்குரிய பெயராகவும் எடுத்தாளப்பட்டுள்ளது சுட்டத்தக்கது.

♦ பெண் எனும் பெயர் உயர்திணை மக்களுக்குரிய பெயராக ‘ஒன்பது’ இடங்களிலும், புலிக்குரிய பெயராக ஓரிடத்திலும், பன்றிக்குரிய பெயராக ‘இரண்டு’ இடங்களிலுமாக மொத்தம் ‘பன்னிரண்டு (12)’ இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இப்பதிவுகள் குறுந்தொகையில் ‘ஒன்று,’ ஐங்குறுநூறு, கலித்தொகை முறையே ‘நான்கு,’ அகநானூற்றில் மூன்றுமாக இடம்பெற்றுள்ளது.

♦ ‘மூடு’ என்னும் பெண்பாற்பெயர் மரபியலில் ஆட்டுக்குரியதாகச் சுட்டப்பட்டிருந்தாலும், சங்க அக இலக்கியங்களில் இப்பெயர் பதிவு செய்யப்படவில்லை என்பது கவனித்தற்குரியது.

♦ ‘நாகு’ எனும் பெண்பாற்பெயர் எருமை, மரை, பெற்றம் ஆகிய விலங்கினங்களுக்கும், நீர் வாழ் சாதியில் நந்து (நத்தை) எனும் உயிரினத்திற்கும் உரியதாக மரபியல் சுட்டியுள்ள போதும் சங்க அக இலக்கியங்களில் பெற்றம் (பசு ), எருமை, மீன், வேங்கை மரம் முதலானவற்றிற்குரிய பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது. மரை, நீர்வாழ் சாதி நந்து ஆகியவற்றிற்கு இப்பெயர் எடுத்தாளப் படவில்லையென்பது சுட்டுதற்குரியது.

♦ சங்க அக இலக்கியங்களுள் மீன், வேங்கைமரத்திற்கு இப்பெயர் எடுத்தாளப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

♦ ‘நாகு’ என்ற பெயரானது சங்க அக இலக்கியங்களுள் மாட்டிற்குரிய பெயராக ‘ஆறு’ இடங்களிலும், எருமை மாட்டிற்குரியதாக ஓரிடத்திலும், மீன், வேங்கைமரம் முறையே ஓரிடத்திலுமாக ‘ஒன்பது’ இடங்களில் இடம்பெற்றுள்ளது. இவை குறுந்தொகை, ஐங்குறுநூறு முறையே ஓரிடத்திலும், கலித்தொகையில் ‘நான்கு,’ அகநானூற்றில் மூன்றிலுமாக இடம்பெற்றுள்ளது.

♦ ‘கடமை’ என்ற பெண்பாற்பெயரானது ஆட்டிற்குரியதாக மரபியல் சுட்டினாலும், சங்க அக இலக்கியங்களில் இப்பெயரானது எடுத்தாளப்படவில்லை என்பது குறிக்கத்தக்கது.

♦ ‘அளகு’ எனும் பெயரானது கோழி, கூகை, மயிலுக்குரியதாக மரபியல் சுட்டுகிறது. ஆனால் சங்க அக இலக்கியங்களில் இப்பெண்பாற் பெயரானது சுட்டப்பெறவில்லை.

♦ மந்திப் பெயரினைக் குரங்கிற்கும் அதன் வகையினங்களாகிய முசு, ஊகத்திற்குமுரியதாக வரையறுத்துள்ளது மரபியல். சங்க அக இலக்கியங்களில் ‘மந்தி’ என்ற பெயர் பெண் குரங்கினைக் குறித்து ‘முப்பத்தைந்து (35)’ இடங்களிலும், உயர்திணை (ஆதிமந்தி) குறித்து ஓரிடத்திலும் என ‘முப்பத்தாறு (36)’ இடங்களில் இப்பெயர் இடம்பெற்றுள்ளது. இவை நற்றிணை ‘பதின்நான்கு (14),’ குறுந்தொகை ‘நான்கு,’ ஐங்குறுநூறு ‘எட்டு,’ கலித்தொகை ‘இரண்டு,’ அகநானூறு எட்டுமாக இடம் பெற்றிருக்கின்றது.

♦ ‘பாட்டி’ எனும் பெயர் பன்றி, நாய், நரி ஆகியவற்றின் பெண்ணினத்திற்குரியதாக மரபியல் வரையறுத்துள்ளது. சங்க அக இலக்கியங்களில் அகநானூறு மட்டும் ஓரிடத்தில் உயர்திணைக்குரிய பெயராக அடையாளப்படுத்தியுள்ளது. மரபியல் வரையறுத்த விலங்கினங்களுக்குரியதாக இப்பெயர் பதிவு செய்யப்படவில்லை.

♦ பாண் மகளிரைக் குறிக்கும் பொருட்டு ‘பாட்டி’ என்னும் பெண்பாற் பெயர் அகநானூற்றில் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகிறது.

♦ ‘பிணை’ என்ற பெண்பாற்பெயரானது புல்வாய், நவ்வி, உழை, கவரி ஆகிய மானினங்களுக்குரிய பெயராக மரபியல் சுட்டுகிறது. பெண் மானைக் குறிக்கும் பொதுப்பெயராக நற்றிணையில் ‘ஏழு,’ குறுந்தொகையில் ‘நான்கு,’ ஐங்குறுநூற்றில் ‘ஏழு,’ கலித்தொகையில் ‘எட்டு,’ அகநானூற்றில் ‘இருபது (20),’ குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ஓரிடத்திலுமாக ‘நாற்பத்தெட்டு (48)’ இடங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

♦ மேலும் உழைக்குரிய பெயராக நற்றிணை, அகநானூறு முறையே ஓரிடத்தி லும், நவ்விக்குரியதாக அகநானூற்றில் ஓரிடத்திலுமாக மரபியல் வழி இட ம்பெற்றுள்ளன.

♦ 'பிணவு' என்ற பெண்பாற்பெயரினைப் பன்றி, புல்வாய், நாய் ஆகிய விலங் கினங்களுக்குரிய பெயராக மரபியல் விளம்பியுள்ளது. சங்க அக நூற்களில் செந்நாய், நீர்நாய், பன்றி ஆகியனவும், மரபியல் சுட்டாத புலி, கரடி, வெரு கு (காட்டுப்பூனை) ஆகியனவற்றிற்குமுரிய பெயராக எடுத்தாளப்பட்டிருக் கிறது.

♦ சங்க அக இலக்கியங்களில் பிணவு எனும் பெண்பாற்பெயரானது செந்நாய் க்கு 'ஆறு' இடங்களிலும், நீர்நாய், பன்றிக்கு முறையே ஓரிடத்திலும், புலிக் குப் 'பத்து (10)' இடங்களிலும், கரடி, காட்டுப்பூனைக்கு முறையே ஓரிடத் திலுமாக 'இருபது (20)' இடங்களில் சுட்டப்பட்டுள்ளன. புல்வாய்க்குரிய பெயராகச் சங்க அக இலக்கியங்களில் பதிவு செய்யப்படாதது நோக்கத்தக் கது.

♦ இவை நற்றிணையில் 'ஏழு,' ஐங்குறுநூற்றில் 'இரண்டு,' அகநானூற்றில் 'பதினொரு( 11)' இடங்களிலுமாக 'இருபது (20)' இடங்களில் இடம்பெற்றுள்ளன.

♦ 'பிடி' எனும் பெண்பாற்பெயர் பெண்யானைக்குரியதாக மரபியல் சுட்டுகிற து. சங்க அக இலக்கியங்களுள் குறிஞ்சிப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்களு ள் யானைக்குரிய பெண்பாற்பெயராக இடம்பெற்றுள்ளன. மேலும் சங்க அக இலக்கியங்களில் பிடி எனும் முறைமை கைபிடிக்கும், கடிவாளத்திற்கு ம் சுட்டப்பட்டுள்ளது.

♦ நூலடிப்படையில் பிடி என்ற பெயர் நற்றிணையில் 'இருபத்தொன்று (21),' குறுந்தொகை யில் 'பதின்மூன்று (13),' ஐங்குறுநூற்றில் 'ஆறு,' கலித்தொகையில் 'பத்து (10),

’ அகநானூற்றில் ‘நாற்பத்தைந்து (45),’ முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை முறையே ‘இரண்டு’ இடங்களிலுமாக ‘தொண்ணூற்று ஒன்பது (99)’ இடங்களில் பதிவாகியிருப்பதைக் காணமுடிகிறது.

♦ மரபியல் பன்றி, புல்வாய், நாய் ஆகிய விலங்கினங்களுக்குரிய பெண்பாற்பெயராகப் ‘பிணவல்’ குறிக்கப்பட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களில் பன்றிக்குரிய பெயராக மட்டும் அகநானூறு ‘இரண்டு’ இடங்களில் பதிவுசெய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

♦ ‘ஆ’ என்ற பெண்பாற்பெயர் பெற்றம், மரை, எருமை ஆகிய மூன்றனுக்கும் உரியது என்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களில் பெற்றம், எருமை ஆகியவற்றிற்குரிய பெயராக எடுத்தாளப்பட்டிருப்பினும் மரைக்குரிய பெயராகப் பதிவு செய்யப்படவில்லை. இவை நற்றிணையில் ‘பத்து (10),’ குறுந்தொகையில் ‘ஆறு,’ ஐங்குறுநூற்றில் ‘ஒன்று,’ கலித்தொகையில் ‘நான்கு,’ அகநானூற்றில் ‘பத்தொன்பது (19)’ குறிஞ்சிப்பாட்டில் ஒன்றுமாக ‘நாற்பத்தொரு (41)’ இடங்களில் இடம்பெற்றுள்ளது.

♦ ‘பிணா’ என்ற பெண்பாற்பெயரானது மக்களுக்குரிய உயர்திணைப் பெயராகக் குறிக்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களில் இப்பெயரானது எடுத்தாளப்படவில்லை என்பது சுட்டத்தக்கது.

♦ மரபியலில் வகுக்கப்பெற்ற பெண்பாற்பெயர்கள் நீங்கலாக, சங்க அக இலக்கியங்களில் ஆன், உழை, பிண, புருவை ஆகியன விலங்கினங்களுக்குரிய பெயராகச் சுட்டப்பட்டுள்ளன. மேலும் அஃதை, அஞ்ஞை, அட்டிலோள், அயலிலாட்டி, அரிவை, அருங்காப்பினள், அளியள், அனையோள், அன்னள், அன்னாய், அன்னை, அன்னோள், ஆயம், ஆயிழை, ஆய்ச்சியர், இகுளை, இறைவி, இனியோள், உடையள், உழையள், உறவி, உறைவி, ஊங்காள், எயிற்றள், எயிற்றி, எளியள், ஏதிலாட்டி, ஏதிலாள், ஐயை, ஐயோள், கண்ணி,

கழுது, கன்னி, கிழத்தி, கொடிச்சி, கெடிச்சியர், கொண்டி, கொடியள், கொ டியை, கோதை, செய்யோள், செல்வி, செவிலி, செவிலியர், ஞாய், ஞாயர், தங்கை, தாய், தாயர், தமியே, திருமாவுண்ணி, தெரிவை, தெரியள், தையல், தொடியோள், தோழி, நலத்தாள், நொதுமலாட்டி, நுவ்வை, பரத்தை, புரை மூத்தி, பெண்டிர், பெண்டு, பெண்மை, பெரியள், பேதை, மாஅயோள், மக ள், மகளிர், மகடூஉ, மங்கையர், மடந்தை, மடவீர், மடவை, மதுகையள், ம ருதி, மனைமுதல், மனையோள், மனைவி, மாதர், மாயோள், மொழியாள், யாய், வள்ளி, விறலி, வெள்ளிவீதி போன்றவை உயர்திணை (மக்கட்குரிய) பெ ண்பாற் பெயர்களாகச் சுட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

*1. சு.இலம்போதரன் (ப.ஆ.), திவாகர நிகண்டு, ப.35*

*2. மேலது, ப.35*

*3. மேலது, பக்.31,32,33,34,40*

*4. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, பக்.341-343*

*5. ப.கணேசமுதலியார் (உ.ஆ.), சூடாமணி நிகண்டு, பக்.66-67*

*6. ஞா.தேவநேயப்பாவாணர், உயர்தரக் கட்டுரை இலக்கணம் - 2, ப.10*

*7. அகநா.129:8-9*

*8. நற்.21:8-12*

*9. குறுந்.139:1*

*10. அகநா.310:15*

*11. ஐங்.51:1-2, 85:1*

*12. நற்.162:1, 384:1-4, குறுந்.154:4*

*13. நற்.178:2-3, 263:6-7, 338:10-12*

*14. அகநா.290:1*

*15. நற்.181:1-3*

*16. குறுந்.85:2-3*

*17. நற்.272:1-4*

*18. மேலது, 367:1*

*19. குறுந்.151:1*

*20. ஐங்.62:2, 425:1*

*21.மேலது, 321:1, அகநா.3:4-5, 33:5-6, 79:12, 215:12-15*

*22. கலித்.147:65-66*

*23. அகநா.57:1-2*

*24. மேலது, 270:13*

*25. மேலது, 387:10*

*26. நற்.288:3, கலித்.56:15, அகநா.177:10*

*27. நற்.314:11, குறுந்.79:4, 285:5, கலித்.11:12-13, அகநா.271:1-2, 307:14*

*28. நற்.31:2-4, அகநா.170:10*

*29. நற்.91:3-4*

*30. நற்.152:7, குறுந்.160:1-2, 301:3-4*

*31. ஐங்.60:1*

*32. ஐங்.341:2, பட்டினப்.55-56*

*33. கலித்69:6, 70:1-3, 102:15, அகநா.279:15*

*34. மேலது, 132:2-3*

*35. அகநா.53:4-6, 117:7*

*36. மேலது, 63:7-8*

*37. கலித்.114:13*

*38. குறுந்.292:5, ஐங்.466:3, கலித்.37:9, 60:7, 108:37, 142:8, அகநா.112:17, 206:2, 315:3*

*39. ஐங்.246:4*

*40. மேலது, 264:1-2, 265:1-2*

*41. ஐங்.445:3, கலித்.109:4, 110:14, 113:28, 116:6, அகநா.64:12*

*42. அகநா.146:3*

*43. குறுந்.164:1*

*44. அகநா.85:10*

*45. நற்.22:2, 57:3, 95:4, 151:8, 168:5, 194:7, 233:2, 251:3, 326:4, 334:1, 353:6, 355:5, 373:2, 379:1, குறுந்.29:6, 69:2, 278:7, 335:4, ஐங்.271:1, 272:1, 273:2, 274:1, 276:1, 277:2, 279:2, 280:1, கலித்.13:5, 40:16, அகநா.82:8, 92:8, 206:6, 241:15, 288:12, 378:21, 382:9*

*46. அகநா.396:11-12*

*47. மேலது, 196:4*

48. நற்.37:6, 61:3, 69:4, 121:3, 204:9, 250:9, 256:8, 274:3, குறுந்.183:3-4, 256:2-3, 319:1, 338:2, ஐங்.326:2, 354:2, 373:3, 394:4, 401:1, 434:2, 493:2, கலித்.11:16, 20:23, 27:3, 58:2, 93:8, 104:22, 131:12, 146:32, அகநா.7:10-11, 14:5, 23:8, 32:13, 34:6, 74:9-10, 129:5, 133:17, 134:12, 173:11, 184:12, 195:6, 234:10, 285:5, 287:10, 291:18, 304:8, 314:5, 321:4, 353:11, 363:19, 395:11, குறிஞ்சிப்.154, பட்டினப்.245

49. நற்.103:6-8, ஐங்.323:1, 354:1, அகநா.21:17-18, 53:6, 285:4-6

50. அகநா.336:3-4

51. நற்.336:1

52. நற்.29:3-5, 144:6, 148:7-9, 322:5-7, 332:6, அகநா.72:12-13, 147:5-6, 227:5-6, 357:3-6, 362:4-5

53. அகநா.201:16-18

54. மேலது, 367:8-9

55. நற்.14:9, 36:2, 47:1, 92:7, 107:2, 114:11, 116:5, 137:6, 144:1, 162:11, 186:3, 194:3, 202:4, 222:8, 230:1, 279:7, 317:1, 318:9, 344:3, 393:2, 399:6, குறுந்.337:2, 111:4, 198:3, 225:2, 298:7, 307:5, 308:4, 319:3, 332:4, 346:1, 360:5, 390:2, 394:1, ஐங்.216:2, 239:2, 305:1, 416:4, ஐங்.திரட்டு.7:5, கலித்11:9, 40:26, 41:7, 50:2, 53:2, 54:13, 108:40, அகநா.8:11, 9:22, 43:3, 59:7, 68:18, 78:6, 83:3, 85:6, 91:6, 99:13, 113:3, 118:7, 121:5, 137:2, 165:1, 168:9, 177:4, 178:6, 183:8, 189:4, 197:13, 202:2, 211:10, 221:13, 227:17, 228:12, 229:4, 269:6, 276:10, 295:7, 298:8, 301:16, 311:1, 321:9, 328:11-12, 332:8, 334:6, 338:17, 347:13, 359:10, 368:11, 379:25, 392:2, 398:23, முல்லைப்.69 பட்டினப்.224, 251

56. ஐங்.திரட்டு.4:4, கலித்.95:15, 140:6, அகநா.73:15, முல்லைப்.46

57. கலித்.96:13

58. அகநா.21:18-19, 248:4-6

*59. நற்.100:8, 109:8, 179:1, 213:4, 264:8, 290:2, 343:3, 359:1, 364:9, 395:8 , குறுந்.64:1, 104:3, 162:2, 204:4, 210:2, 260:7, கலித்.81:37, 108:48, 110: 14, 116:8, அகநா.7:14, 35:5, 52:6, 56:11, 64:15, 79:7, 103:7, 113:14, 129: 12, 131:7, 156:4, 214:12, 239:5, 249:13, 253:10, 262:4, 309:5, 342:6, 369 :24, குறிஞ்சிப்.136*

*60. ஐங்.92:1.*

# முடிவுரை

தொல்காப்பிய மரபியல் விளக்கம் என்னும் இயலில் மரபு, இயல், மரபியல் ஆகியவற்றிற்கு அகராதிகள், நிகண்டுகள், கலைக்களஞ்சியங்கள் தரும் விளக்கங்கள் ஒப்பு நோக்கப்பட்டுள்ளன.

'மரபு' குறித்து மு.இராகவையங்கார், சி.இலக்குவனார், லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார், மா.இராசமாணிக்கனார், க.வெள்ளைவாரணனார், இரா.இளங்குமரனார், சு.இராசாராம், சிற்பி, நா.செயராமன், ச.வே.சுப்பிரமணியன், ச.சிவகாமி , சா.கிருஷ்ணமூர்த்தி, ந.சுப்பிரமணியன், க.தமிழரசன், வி.பி.புருஷோத்தமன், இரா.பாலசுப்பிரமணியன், க.காந்தி, கரு.அழ.குணசேகரன், தமிழண்ணல், ஆ.சு. ஞானசம்பந்தன், ஒ.முத்தையா, சு.இராசாராம், ஜெசந்தியாசந்திரசேகரன், சு.வேலாயுதம் ஆகியோரின் கருத்துரைகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

'மரபு எனும் சொல் பயின்று வந்துள்ள இடங்களும் பொருண்மையும்' என்பனவற்றுள் தொல்காப்பிய எழுத்ததிகாரத்துள் 'பத்து (10)' இடங்களில் 'மரபு' என்ற சொல் சுட்டப்பட்டுள்ளன. அவற்றுள் நூல் மரபு, மொழி மரபு, தொகை மரபு என மூன்று இயல்களுக்குத் தலைப்பாக இடம்பெற்றுள்ளது சிறப்பிற்குரியது. சொல்லதிகாரத்தில் 'இருப்பத்தைந்து (25)' இடங்களுள் குறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் 'விளிமரபு' என்று ஓரியலுக்குத் தலைப்பாகச் சுட்டப்பட்டுள்ளது. பொருளதிகாரத்துள் 'ஐம்பத்து நான்கு (54)' இடங்களில் பதிவுசெய்யப் பட்டுள்ளதுடன் 'மரபியல்' என்ற இயல் இவற்றுள் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் பிறப்பியல், புணரியல், உருபியல், உயிர்மயங்கியல் ஆகிய நான்கு இயல்களை விடுத்து ஏனைய இயல்களிலும், சொல்லதிகாரத்தில் வேற்றுமையியல் நீங்கலாக ஏனைய இயல்களிலும், பொருள

*திகாரத்தில் மெய்ப்பாட்டியல் நீங்கலாக ஏனைய இயல்களுள் 'எண்பத்தொன் பது (89)' இடங்களுள் 'மரபு' எனும் சொல் குறிக்கப்பட்டுள்ளது.*

*சங்க இலக்கியங்களில் பொருநராற்றுப்படை, முல்லைப்பாட்டு, நெடுந ல்வாடை நீங்கலாக ஏனைய நூற்களுள் 'தொண்ணூற்று இரண்டு (92)' இடங் களில் மரபு என்ற சொல் சுட்டப்பட்டுள்ளது.*

*மரபு என்னும் சொல் பெரும்பான்மையாகத் தொல்காப்பியத்தில் இலக் கணத்தைக் குறித்தனவாகவும், சங்க இலக்கியங்களுள் முறைமையைக் குறித்த தாகவும் இடம்பெற்றுள்ளது.*

*மேலும் மரபினைக் காத்தல், இன்றியமையாமை, பயன்கள் ஆகியன வி ளக்கப்பட்டுள்ளன.*

*மரபியல் தமிழில் தோன்றிய பிற இலக்கண நூல்களில் இடம்பெறாத பொழுதும் காலத்தாற் முற்பட்ட தொல்காப்பியத்தில் தனியொரு இயலாக வகு க்கப்பெற்று 'நூற்றிப்பன்னிரண்டு (112)' நூற்பாக்களைக் கொண்டு தனிப்பெரு மையைக் கொண்டிலங்குகின்றது.*

*தொல்காப்பியத்தின் கடை இயலாக அமையப்பெற்றுள்ள மரபியலின் கட்டமைவுகளாக 'மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்' என்று தொடங்கி , நூலின் முப்பத்திரண்டு உத்திகளுடன் நிறைவு பெற்றுள்ளது.*

*அவற்றுள் முதல் மூன்று நூற்பாக்கள் இளமை, ஆண்பால், பெண்பாற்பெயர்களைத் தொகுத்து நிற்கின்றன.*

*நான்காவது நூற்பா முதல் இருபத்தாறாம் நூற்பா வரை இளமைப்பெயர் களைப் பெறும் உயிரினங்கள் வகுத்துரைக்கப் பட்டுள்ளன.*

இருபத்தேழாம் நூற்பா முதல் முப்பத்து மூன்றாம் நூற்பா வரை (ஏழு நூற்பாக்கள்) உயிர்களின் பாகுபாடுகளைக் குறித்துள்ளன.

முப்பத்து நான்காம் நூற்பா முதல் ஐம்பத்தொன்றாம் நூற்பா வரை ஆண்பாற்பெயர்களையும், ஐம்பத்திரண்டாம் நூற்பா முதல் எழுபதாம் நூற்பா வரை பெண்பாற்பெயர்களைப் பெறுகின்ற உயிரினங்களும் வகுத்துரைக்கப்பட்டுள்ளன. அறுபத்தொன்பதாம் நூற்பா சிறப்பு வழக்காறுகளையும், எழுபதாம் நூற்பா மரபுப் பெயர்களின் புறனடையாகவும் அமையப் பெற்றுள்ளன.

எழுபத்தொன்றாம் நூற்பா முதல் எம்பத்தைந்தாம் நூற்பா வரை தொழில் மரபுகளையும், எம்பத்தாறாம் நூற்பா முதல் எம்பத்தொன்பதாம் நூற்பா வரை புல், மர வேறுபாடுகள், உறுப்புப் பெயர்கள், பொதுப் பெயர்களைச் சுட்டியுள்ளன. தொண்ணூறாம் நூற்பாவில் சொல் மரபின் சிறப்பிற்கு ஐம்பூதங்களினாலான உலகில் மரபு வழக்கு மாறாது, திரிபுபடாத நல்லச் சொற்கள் வழங்குவதைக் குறித்துள்ளது. தொண்ணூற்றொன்று முதல் தொண்ணூற்றிமூன்று வரை மரபினை மாற்றக் கூடாததையும், மாற்ற முடியாததனையும், உயர்ந்தோர் வழக்கு மரபாகவும் குறிக்கப்பட்டுள்ளன.

தொண்ணூற்று நான்கு முதல் நூற்றிப் பன்னிரண்டு வரை நூலினது மரபுகளை விளக்கி நிற்கின்றன.

க.வெள்ளைவாரணனார், சி.இலக்குவனார், லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார், சோ.ந.கந்தசாமி, தெ.பொ.மீனாட்சிசுந்தரம், ச.பாலசுந்தரம், வி.பி.புருஷோத்தமன், தமிழண்ணல், இரா.இளங்குமரனார், ச.வே.சுப்பரமணியன், சு.இராசாராம் ஆகியோர் மரபியலுள் கட்டமைத்த இடைச்செருகல்களென்று தொழில் மரபுகளையும் நூல் மரபுகளையும் சுட்டிக்காட்ட; இவர்களுள் வி.பி.புருஷோத்தமன் மட்டும் மேற்சுட்டிய இரண்டுடன் உயிரினப் பாகுபாடுகளையும் இடைச்செருகல்கள் என்று நிறுவியுள்ளார்.

தொல்காப்பியர் பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி, போத்து என்பனவற்றை இளமைப்பெயர்களாகச் சுட்டியுள்ளார்.

அணங்கு, கசளி, கயந்தலை, கரு, கருந்து, குஞ்சு, குருமன், குழந்தை, குன்னி, செள், சேய், நன்னி, நாகு, பொடி, முனி ஆகியவை பிற்காலத்தனவென்று சொல்ல முடியாது என்பார் தேவநேயப்பாவாணர்.

நிகண்டுகளும் உயர்தரக் கட்டுரை இலக்கணமும் தொல்காப்பிய மரபியலின் வழி நின்று பிற்கால வழக்கு முறைகளையும் சுட்டியுள்ளன.

பார்ப்பு என்னும் பெயர் பறவை, தவழ்பவைகளுக்கு மட்டும் என்கிறது, மரபியல். சங்க அக இலக்கியங்களில் இப்பெயரினை எட்டுத்தொகை அக நூற்கள் மட்டுமே எடுத்தியம்பியுள்ளன. அவற்றுள் பறவை, அன்னம், கழுகு, நாரை, யாமை, குரங்கு, முதலை ஆகியவற்றிற்குரிய பெயராகக் காணமுடிகின்றது.

பறழ் எனும் பெயரினை எட்டுத்தொகை அகநூற்களில் மட்டும் எடுத்தாளப்பட்டு மரபியல் வகுத்துள்ள விலங்கினங்களுக்குரிய பெயராகச் சுட்டடப்பட்டிருப்பினும், கலித்தொகை மட்டும் ஓரிடத்தில் புதுமையாக ஆண்டலைப் பறவைக்கு ‘பறழ்’ பெயர் குறிக்கப் பட்டுள்ளது சுட்டுதற்குரியதாகும். மூங்கா ( கீரி), வெருகு, எலி, அணில், புலி, நரி ஆகியவற்றிற்குரிய பெயராகச் சங்க அக இலக்கியங்களுள் பதிவு செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

குட்டி என்ற இளமைப்பெயர் சங்க அக இலக்கியங்களுள் எடுத்தாளப்பெறாதது குறிப்பிடத்தக்கதாகும்.

குருளைப்பெயர் நாய், பன்றி, புலி, முயல், நரி ஆகியவற்றிற்குரியதாக மரபியல் சுட்டி நிற்க; புதுமையாக கரடி, குரங்கு, பாம்பு முதலானவற்றிற்குமுரிய பெயராகவும்

சங்க அக நூற்கள் குறிப்பிட்டுள்ளன. இப்பெயர் முயலுக்கும் நரிக்குமுரிய பெயர ாக இடம்பெறாதது சுட்டத்தக்கது.

கன்று என்ற பெயரினை யானை, குதிரை, கழுதை, கடமை, மான், எரு மை, மரை, கவரி, கராம் (முதலை), ஒட்டகம், ஓரறிவுயிர்களில் மரஞ்செடி ெ காடிகளுக்குரியதாக மரபியல் விளம்பியுள்ளது. சங்க அக இலக்கியங்களுள் ப ட்டினப்பாலை நீங்கலாக ஏனைய நூற்களில் இப்பெயர் பதிவுசெய்யப்பட்டுள் ளது.

குதிரை, கழுதை, மான், முதலை, ஒட்டகம் ஆகியவற்றிற்குரிய பெயரா க எடுத்தாளப்படவில்லை.

பிள்ளைப் பெயரினைப் பறவை, பன்றி, புலி, முயல், நரி, குரங்கு, ஓரறி வுயிர்களுக்குரியதாக மரபியல் சுட்டியுள்ளது. சங்க அக நூற்களில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவை மட்டும் எடுத்தியம்பியுள் ளன.

மரபியலில் வகுக்கப்பெறாத வெருகு, கரடிக்குரியதாகப் பிள்ளைப்பெய ர் சங்க அக இலக்கியங்களுள் புதுமையாக இடம் பெற்றுள்ளது குறிக்கத்தக்கத ாகும்.

மகவுப் பெயர் சங்க அக இலக்கியங்களுள் குறுந்தொகையில் மட்டும் ஓ ரிடத்தில் குரங்கிற்குரியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. உயர்திணை மக்களுக் குரிய பெயராகப் பதிவு செய்யப்படவில்லை.

மறி என்ற இளமைப்பெயரை ஆடு, குதிரை, மானினங்களுக்குரியதாக மரபியல் விள ம்பியுள்ளது. சங்க அக இலக்கியங்களுள் ஆடு, மானுக்குரிய பெயராகக் காண ப்பட்டாலும், குதிரைக்குரிய பெயராக எடுத்தாளப்படவில்லை என்ற நிலையி

ல் புதுமையாக கடல் அலைக்குரிய பெயராக அடையாளப்படுத்தியிருப்பது நோக்கத்தக்கது.

குழவிப் பெயர் யானை, ஆ, எருமை, மானினங்கள், குரங்கினங்கள், மக்கள், ஓரறிவுயிர்கள் முதலானவற்றிற்குரியதாக மரபியல் வகுத்துள்ளது. சங்க அக இலக்கியங்களுள் குரங்கு, ஓரறிவுயிர்களுக்குக் குழவிப் பெயர் எடுத்தாளப்படவில்லை. ஏனைய உயிரினங்களுக்குரிய பெயராகப் பதிவுசெய்யப்பட்டுள்ளதுடன், புதுமையாக நிலவிற்கும், வேனிற்காலத்திற்கும் கலித்தொகை குழவிப் பெயரினைக் குறித்துள்ளது சுட்டத்தக்கதாகும்.

போத்து எனும் இளமைப்பெயர் ஓரறிவுயிர்களுக்குரியதாக மரபியலுள்குறித்துநிற்க, கலித்தொகையில் புதுமையாக உயர்திணைக்குரிய பெயராக மட்டும் சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மரபியலில் ‘நாகு’ எனும் பெயர் பெண்பாற்குரியதாகத் தொகுத்தும், வகுத்தும் கட்டமைக்கப்பட்டுள்ளது. இளமைப் பெயராகக் குறிக்கப்படாத நிலையில் சங்க அக இலக்கியங்களுள் வேங்கை மரம், வாளைமீன், யானை, மாடு முதலானவற்றிற்குரிய இளமைப்பெயராக இடம்பெற்றுள்ளது புதுமரபாகும்.

இப்பெயர்களை விடுத்து இள, இளமை, இளம், சிறு, சிறுவர், துரு, புதல்வன், புருவை, பைதல், மகாஅர், மட, மாழை, முனி, வெளிறு போன்றவை இளமை குறித்த பெயர்களினைச் சங்க அக இலக்கியங்களுள் காணமுடிகின்றது.

மரபியலுள் எருது, ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் ஆகியவை ஆண்பாற் பெயர்களாக வரையறுக்கப்பட்டுள்ளன.

எருது எனும் பெயர் மரபியலில் தொகுத்தனவற்றுள் இடம்பெற்று, வகுத்தனவற்றுள் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கது. சங்க அக இலக்கியங்களில்

மாட்டிற்குரிய பெயராக மூன்று இடங்களில் இப்பெயர் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

மரபியல் ‘ஏறு’ எனும் பெயர் மானினங்கள், பன்றி, எருமை, மரை, ஆ, பெற்றம், கடல்வாழ் சுறவு முதலானவற்றிற்குரியதாகச் சுட்டியுள்ளது. சங்க அக இலக்கியங்களுள் மாடு, மரை, மான், சுறவு ஆகியனவற்றிற்கு எடுத்தாளப்பட்டும்; பன்றி, எருமை முதலானவற்றிற்கு எடுத்தாளப்படாததும்; இடிக்கும், குறும்பூழ் பறவைக்கும் புதுமையாக ஏறு பெயர் குறிக்கப்பட்டுள்ளது நோக்கத்தக்கது.

மரபியலில் ஆற்றல்மிக்க வலிமை வாய்ந்த ஆண் இனம் அனைத்திற்கும் உரியதாக ஏற்றைப்பெயர் வகுக்கப்பட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களுள் பன்றி, காளை, குரங்கு, நாய், செந்நாய், புலி, கரடி, இறாமீன், முதலை, எலி, வெருகு, சங்கு, நரி, கழுதை, உயர்திணை மக்களுக்குரிய பெயராகப் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

ஒருத்தல் பெயர் மான், புலி, மரை, முதலை, யானை, பன்றி, எருமை முதலானவற்றிற்குரியதாக மரபியல் வகுத்துள்ளது. சங்க அக இலக்கியங்களுள் யானை, பன்றி, மான் ஆகியவற்றிற்கு எடுத்தாளப்பட்டும்; புலி, மரை, முதலை, எருமை முதலானவற்றிற்கு எடுத்தாளப்படாமலும்; புதுமையாக யாளிக்குமுரியதாகக் குறிக்கப்பட்டுள்ளது சுட்டடத்தக்கது.

ஆண்பாற்பெயர்களுள் ‘களிறு’ யானைக்கும் பன்றிக்கும் உரியதாக மரபியலில் வகுத்துள்ளதனை, சங்க அக இலக்கியங்களுள் யானைக்கு ‘நூற்றியொன்று (101)’ இடங்களிலும், பன்றிக்கு ஓரிடத்திலும் எடுத்தாளப்பட்டிருப்பதனைக் காணமுடிகின்றது.

‘சே’ எனும் பெயர் தொகுத்தவற்றுள் மட்டும் இடம் பெற்று; வகுத்தவற்றுள் இடம்பெறாதது குறிக்கத்தக்கது. சங்க அக இலக்கியங்களுள் மாடு, இறாமீன், பூ இத

ழ், கண்வரி, வேல்நுனி, அணிகலன், பாதம் ஆகியவற்றிற்குரிய பெயராகப் பதிவுசெய்யப் பட்டுள்ளன.

மயிலல்லாத சிறகுடையவை அனைத்தும் சேவல் பெயரினைப் பெறுவன என்கிறது மரபியல். சங்க அக இலக்கியங்களில் கோழி, கானக்கோழி, சம்பங்கோழி, புறா, அன்னம், பருந்து, கழுகு, குயில், குருவி, ஆந்தை, கூகை, நீர்க்காக்கை, குறும்பூழ், அன்றில், கொக்கு ஆகிய பறவையினங்களுக்குச் சேவல் எனும் ஆண்பாற்பெயர் எடுத்தாளப் பட்டுள்ளதனைக் காணமுடிகிறது.

இரலை எனும் ஆண்பாற்பெயர் மானினத்திற்குரியதாக மரபியல் வகுத்துள்ளதை, சங்க அக நூற்களுள் மானினத்திற்குரிய பெயராகப் பதிவு செய்யப் பட்டுள்ளது குறிக்கத்தக்கது.

கலை எனும் பெயர் மான், குரங்கிற்குரியதாக மரபியல் விளம்பியுள்ளது. சங்க அக இலக்கியங்களிலும் மானுக்கும் குரங்கிற்கும் உரிய பெயராகப் பதிவு செய்யப்பட்டுள்ளதனை அறியமுடிகின்றது.

மோத்தை, உதள், அப்பர் எனும் பெயர் ஆட்டிற்குரியதாக மரபியலுள் சுட்டப்பட்டிருப்பினும், சங்க அக நூற்களில் பதிவு செய்யப்படாதது சுட்டத் தக்கது.

தகர் என்ற பெயர் ஆட்டுக்குரியதாக மரபியலில் சுட்டப் பட்டுள்ளதனை, சங்க அக நூற்களிலும் ஆட்டுக்குரிய பெயராகப் பதிவுசெய்துள்ளதனைக் காண முடிகின்றது.

போத்து எனும் பெயர் மரபியலுள் பெற்றம், மரை, புல்வாய், எருமை, புலி ஆகிய விலங்கினங்களுக்கும், சுறா, முதலை, வரால், வாளை ஆகிய நீர்வாழ்வனவற்றிற்குமுரிய பெயராகக் குறித்துள்ளது. சங்க அக இலக்கியங்களில் புலி, எருமை, முதலை, வரால், வாளை ஆகியவற்றிற்குப் பதிவு செய்துள்ளதுட

ன்; புதுமையாக நீர்நாய்க்கும் ஓந்திக்கும் உரிய பெயராக அடையாளப்படுத்தி யிருப்பது சுட்டத்தக்கதாகும்.

மரபியலில் கண்டி என்ற பெயர் தொகுத்தவற்றுள் மட்டும் சுட்டப்பட்டு; வகுத்தனவற்றுள் இடம்பெறாத நிலையில்; சிறப்பு வழக்காகக் குறிக்கப்பட்டனவற்றுள் எருமைக்குரிய பெயராக வகுக்கப்பட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களில் இப்பெயர் பதிவு செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

கடுவன் என்ற ஆண்பாற்பெயர் தொகுத்தனவற்றுள் இடம்பெற்று; வகுத்தனவற்றுள் இடம்பெறவில்லை. சிறப்பு வழக்கினுள் குரங்கிற்குரிய பெயராக மரபியல் சுட்டியுள்ளது. சங்க அக நூற்களில் எட்டுத்தொகை அகநூற்கள் மட்டும் குரங்கிற்குரிய பெயராகவே பதிவுசெய்துள்ளன.

‘ஆண்பால் எல்லாம் ஆண்’ என்று மரபியலில் விளம்பப் பட்டுள்ளது. சங்க அக நூற்களில் உயர்திணைக்கும்; பறவை, மான் ஆகிய அஃறிணைகளுக்கும் ‘ஆண்’ என்ற பெயர் பதிவாகியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறாக மரபியலுள் விளம்பப்பெற்ற ஆண்பாற்பெயர்களை விடுத்துச் சங்க அக நூற்களில் ஏற்று, களிறு, காளை, பகடு, வல்லியம், போகில், ஓரி, உழை, விடை, மா, உம்பல் ஆகிய பெயர்களையும் காணமுடிகின்றது. மேலும் உயர்திணைக்குரிய ஆண்பாற்பெயர்களும் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி, பிணவல், ஆ, பிணா ஆகியவற்றைப் பெண்பாற்பெயர்களாக மரபியல் வரையறுத்துள்ளது.

பேடை, பெடை என்னும் பெண்பாற்பெயர்கள் பறவை இனங்களுக்குரியதாக மரபியல் சுட்டியுள்ளது. சங்க அக நூற்களுள் பேடையும் பெடையும் பறவையினங்களுக்குரிய பெயராகப் பதிவுசெய்யப்பட்டிருப்பினும்; ‘பெடை’

என்ற பெயரினைக் கலித்தொகை மட்டும் ஓரிடத்தில் புதுமையாக எருமைக்கு ரிய பெயராகப் பதிவுசெய்துள்ளது.

பெட்டை, மூடு, கடமை, அளகு, பிணா ஆகிய பெண்பாற் பெயர்கள் சங்க அக இலக்கியங்களுள் எடுத்தாளப்படவில்லை என்பது சுட்டத்தக்கதாகும்.

பெண் எனும் பெயர் உயர்திணைக்குரியதாக மரபியல் குறிப்பிட்டுள்ளது. சங்க அக நூற்களில் உயர்திணை மக்களுக்குப் பதிவுசெய்துள்ளதுடன்; புதுமையாக புலி, பன்றி ஆகிய அஃறிணைகளுக்கும் எடுத்தாளப்பட்டுள்ளதனைக் காணமுடிகின்றது.

நாகு என்ற பெண்பாற்பெயர் எருமை, மரை, பெற்றம், நீர்வாழ் சாதியான நத்தைக்குமுரியதாக மரபியலுள் வரையறுக்கப்பட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களில் பெற்றம், எருமைக்குரிய பெயராக எடுத்தாளப்பட்டிருப்பினும்; மரை, நந்திற்குரிய பெயராக எடுத்தாளப் படவில்லை. புது மரபாக மீன், வேங்கைமரம் ஆகியவற்றிற்குரிய பெயராக பதிவு செய்யப்பட்டிருப்பது நோக்கத்தக்கது.

மந்தி என்னும் பெண்பாற்பெயர் குரங்கினத்திற்குரியதாக மரபியலில் சுட்டப்பட்டுள்ளது. சங்க அக இலக்கியங்களுள் குரங்கினங்களுக்கு உரிய பெயராக எடுத்தாளப்பட்டிருப்பதோடு, புதுமையாக உயர்திணை (ஆதிமந்தி என்ற பெண்) குறித்து ஓரிடத்தில் அகநானூறு சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பாட்டி என்ற பெயர் பன்றி, நரி, நாய் ஆகிய விலங்கினங்களுக்கு உரியதாக மரபியல் வரையறுத்துள்ளது. சங்க அக நூற்களில் பன்றி, நாய், நரி ஆகியவற்றிற்குரிய பெயராக எடுத்தாளப்படாத நிலையில்; அகநானூறு மட்டும் பு

துமையாக (உயர்திணை) பாண்மகளிரைக் குறித்து நிற்பதனைக் காணமுடிகின்றது.

மரபியலுள் பிணை என்ற பெயர் மானினங்களுக்குரியதாகச் சுட்டப்பட்டுள்ளது. சங்க அக நூற்களுள் முல்லைப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்களில் மானிற்குரிய பெயராக எடுத்தாளப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பிணவு என்ற பெயரினை பன்றி, புல்வாய், நாய் ஆகிய விலங்கினங்களுக்குரிய பெயராக மரபியல் விளம்பியுள்ளது. சங்க அக நூற்களில் செந்நாய், நீர்நாய், பன்றி ஆகியவற்றிற்குப் பதிவு செய்துள்ளதுடன்; புது மரபாகப் புலி, கரடி, வெருகு முதலானவற்றிற்குரிய பெயராக எடுத்தாளப்பட்டிருக்கின்றது. புல்வாய்க்குரிய பெயராகப் பதிவு செய்யாதது சுட்டத்தக்கதாகும்.

மரபியலில் ‘பிடி’ என்ற பெயர் பெண் யானைக்குரியதாகச் சுட்டப்பட்டுள்ளது. சங்க அக நூற்களில் குறிஞ்சிப்பாட்டு நீங்கலாக ஏனைய நூற்களுள் யானைக்குரிய பெண்பாற்பெயராகப் பதிவு செய்யப் பட்டுள்ளதுடன்; புதுமரபாக கைப்பிடிக்கும், கடிவாளத்திற்கும் உரித்தாகி நிற்பதனையும் காணமுடிகின்றது.

பிணவல் என்ற பெயர் பன்றி, நாய், புல்வாய் ஆகிய விலங்கினங்களுக்குரியதாக மரபியல் வரையறுத்துள்ளது. சங்க அக இலக்கியங்களுள் பன்றிக்குரிய பெயராக மட்டும் பதிவுசெய்யப் பட்டுள்ளது சுட்டத்தக்கது.

மரபியல் பெற்றம், எருமை, மரை ஆகிய மூன்றனுக்கும் ‘ஆ’ என்ற பெண்பாற்பெயர் உரித்தாகும் என்கிறது. சங்க அக இலக்கியங்களுள் பெற்றம், எருமை ஆகியவற்றிற்குரிய பெயராக எடுத்தாளப்பட்டிருப்பினும்; மரைக்குரிய பெயராக பதிவுசெய்யப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மரபியலில் வகுக்கப்பெற்ற பெண்பாற்பெயர்கள் நீங்கலாக சங்க அக இலக்கியங்களுள் ஆன், உழை, பிண, புருவை ஆகியன விலங்களுக்குரிய பெண் பாற்பெயர்களாகச் சுட்டியுள்ளதுடன்; உயர்திணைக்குரிய பெண்பாற்பெயர்களையும் பதிவுசெய்யப் பட்டுள்ளது ஆய்விற்குரியது.

மரபியலுள் விளம்பப்பட்டுள்ள உயிரித்தகவல்கள், தொழில் மரபுகள், நூன்மரபுகள் குறித்து; பிற இலக்கியங்களுடன் ஒப்புநோக்கித் தனித்த ஆய்வாக மேற்கொள்ளலாம்.